


உ

சிவமயம்.

ஓம் ஸ்ரீ குருவே நம:

# சத்தப்பிரபந்தம்.

இதனுள்

கல்லல் ஸ்ரீ முத்துவிநாயகர் மும்மணி மாலையும்,
கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன் நவரத்தின மாலையும்,
குன்றக்குடி ஸ்ரீ தோகையடி விநாயகர் துதிக்கை மாலையும்,
குன்றக்குடி ஸ்ரீ சண்முகநாதன் சந்தமணி மாலையும்,
குன்றக்குடி ஸ்ரீ வீரமாகாளி அம்மையார் பலபாமாலையும்,
ஸ்ரீ தேவாதி மகான்கள் திருவருண் மாலையும்,
சமரசானந்த சங்கீத மாலையும்
சேர்க்கப்பெற்றது.

இஃது

குன்றக்குடி பெஞ்ச் மாஜிஸ்டிரேட்டாயிருந்த
மதுரவைத்திய பண்டிதர்
ஸ்ரீலஸ்ரீ G. முத்துச்சாமி பிள்ளை அவர்கள்
குமாரர்
குன்றக்குடி வைத்தியம்,
**M. கணபதியா பிள்ளை அவர்களால்**
இயற்றப்பெற்று

---

கல்லல் என்று வழங்கும்
கல்விநகர்
ஸ்ரீலஸ்ரீ சு. கி. கரு. நா.
நாச்சியப்ப செட்டியா ரவர்களால்,

மதுரை,
ஸ்ரீ ஜெகதாம்பாள் அச்சியந்திர சாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

௰] [ரூ. 1.

---



1930.

உ

சிவமயம்.

ஓம் ஸ்ரீ குருவே நம:

# சத்தப்பிரபந்தம்.



இஃது

குன்றக்குடி பெஞ்ச் மாஜிஸ்டிரேட்டாயிருந்த

மதுரவைத்திய பண்டிதர்

ஸ்ரீலஸ்ரீ G. முத்துச்சாமி பிள்ளை அவர்கள்

குமாரரும்

தெய்வத்துதித்திரட்டு, கதிர்காமக் காவடிச்சிந்து, பழனியூர்ப் பன்மணி மாலை, குன்றக்குடி வீரமாகாளிமாலை, வீரம்மைக்கண்ணி என்னும் நூற்கட்கர்சிரியருமாம்

குன்றக்குடி வைத்தியம்,

**M. கணபதியா பிள்ளை அவர்களால்**

இயற்றப்பெற்று

---

கல்லல் என்று வழங்கும்

கல்விநகர்

ஸ்ரீலஸ்ரீ சு. கி. கரு. நா.

நாச்சியப்ப செட்டியாரவர்களால்,

---

மதுரை,

ஸ்ரீ ஜெகதாம்பாள் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

---



விலை] 1930. [ரூ. 1

# நான் முகம்.

சிருஷ்டியில் பல்வித விநோதங்களா யமைந்துள விப்பிர பஞ்சத்தினிடத்தே உற்பவமான உயர்திணை மனுஷ்ய வர்க்கத்தினருள், உணருதற்குரிய சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, காந்தமெனும் பஞ்சவறிவினின்று மேலாய பகுத்தறிவினைப்பெற்று மப்பாற், செயற்கை யறிவாய்ச் சிறந்து விளங்குஞ் செவ்வனே அறம்பொருளின்பமெனும் புருடார்த்தங்களை யடைந்து ஆண்மகோடிகளனைவரு மரிதுணர் பொருளா யெஞ்சிய, அரிய செயலாய அருட்பெறும் வீடடைதற் கவாவுற்றோர் பலர். அம்முயற்சியா லறநெறி தப்பி மறநெறி புக்கினோர் பலர். அறிந்து மபலமாயினோரனேகர், அவர்களுளரனடி யடைந்தோரரறவுஞ் சிலரே, எனின், அற்பமாயுமரிய செயலின்றி எளிய செயலாயும் விளங்கு மேனைய கல்வி யறிவொழுக்கவாசாரமு மில்லா வனுசாரர்கள் பக்கந்தலையிடவேண்டிய தவசியமில்லை. இவை யொருபானிற்க, தொண்டுதொட்டு சொரூப சாக்ஷாத்கார முணர்த்துஞ் சுயம்பிரகாசராய் விளங்கு மாசிரியர்களுமனேகருள ரென்பது சுருதி யுக்தி யனுபவப் பிரசித்தம். எனவே, இன்னூலாசிரியர் ஸ்ரீலஸ்ரீ M. கணபதியா பிள்ளை அவர்களு மேற்கூறிய வண்ணம் அருட்பிரகாசராய் விளங்கும் அருட்பெருந்தகையாளரென்பது யாமுணர்த்தாமலே இன்னூன்முகத்தால் விளங்கு மென்பது மிகையாகாது. அத்தகைய அருட்பெருந்தகையாளர், அரிய பெரிய அநேக சுருதிகளின் ஸாராம்ஸங்களை தம்மனுபவத்தாலடக்கி கூறியசெய்யுட்களை யாமும் இன்னு முணர்தற்கவாவுறு முயரறிவாளர்கள் பலரும் நன்கு பாடி இன்பக்கடலி லாழ்ந்தும்பொருட் டிங்கிதை யச்சிடுவாமென வரைந்த கல்லல் ஸ்ரீலஸ்ரீ சு. கி. கரு. நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள் கருத்துக்கிசைய சத்தப்பிரபந்த மென்னும் ஈரைந்து வகை நூல்களாயியற்றித்தரவதையச்சிட முன்வந்துளேன் எனவே இத்தகைய சீரும் சிறப்பும் பயனும் பெற்ற நூலை வெளியிடுகின்ற ஸ்ரீலஸ்ரீ சு கி. கரு நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள் பொருள் செலவைக் கருதாமல் பதிப்பின் மேல் பதிப்பாக பெருத்த அளவில் உதவிசெய்து வருவது பெரிதும் பாராட்டத் தக்கதாகும்.

ஸ்ரீ ஜெகதாம்பாள் பிரஸ்,
மதுரை.
17—9—30

*E. S.* செல்லம் பிள்ளை,
புரொப்ரைட்டர்.

# சாற்றுக்கவிகள்.

---

மதுரை பிரமஸ்ரீ யோகானந்த சுவாமிகள் வித்தியாசாலைத்
தலைமை உபாத்தியாயர் தமிழ்ப்பண்டிட்

K. V. சுவிசேசமுத்துப்பிள்ளை அவர்களியற்றியன

எழுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

1 முகிறவழ் பொழில்சூழ் முதுபனையூரிற்
றவமுடைத் தக்கிண மூர்த்தி
சுகிகளா யாருஞ் சுகித்துய்வான் றனது
சீடரா முத்துச் சாமிக்கும்
முகிழ்துழிப் பனபோன் மருத்துநான் முறையும்
பிரணவ முஞ்செவி மொழிந்தோன்
மகிமைசே ரருளா ளுற்கவி கேட்கும்
சமிக்கையின் வகுக்குமா புலவோன்.

2 செந்தமிழ்ப் பாக்கள் வித்தையின் பெருக்காற்
செப்புவர் சிறந்திடுங் கவிஞர்
நந்தலிற் சத்த மாபிர பந்தம்
நவிற்றுத ஞனிலத் தியார்க்கும்
தொந்தரைக் கிடமா மெனத்தொடா விடுவர்
தூக்கிசை துணிவினி லாய்ந்து
சிந்துர முகத்தன் பெயரவன் றொகுத்தான்
செம்மையோ ருளங்களிப் புறவே

---

## அவையடக்கம்

வெண்பா.

நாமாது நல்லருளால் ராஜாங்க முன்னிலையிற்
பூமாலை சூடும் புலவீர்காள்—தாமா
யெழுவாய் பயனிலையென் றெள்ளாது கொள்வீர்
குழுவாய்ந்து பின்னூற் குணம்.

---

உ

சிவமயம்.

கல்லல்

## ஸ்ரீ முத்துவிநாயக மூர்த்தி

# ஆறாரைச்சக்கர பந்தம்.



### கட்டளைக் கலித்துறை.

கண்டவர் போற்றிடுங் காராளைமுத்துக் கணபதிக்கே
சுண்டல்மிட் டாய்பல காராதிதோசைபாற் சோற்றொடுமிக்
குண்டி நுகர்ந்தருள் வாராயெனத்தொழு தோம்புமன்பு
கண்டவ சுண்டழ குண்டிலகோர்சீர்க் களிப்புண்டுமே.

—0⊂⊃0—

உ

## குன்றக்குடி ஸ்ரீ குமரக்கடவுள்

# எட்டாரைச்சக்கர பந்தம்.



### ஆசிரியப்பா.

கயல்விழி மாது கதிதவப் பார்ப்புமை
கனக்குக மதுநதி மேகவீர்ங் கிரியா
கயவ ரண்டாத கதிகழன் ருர்ங்தேம
கவலைதீர்த் தபதி திகழொளிப் பிரம
கந்தனே கடவுளே கருணையா கடம்பா
மைந்தனை யாட்கொளு மயின்மா மகிபனே.

—— ——

# கல்லல் ஸ்ரீ அம்பிகையின் உபயநாக பந்தம்.



வெண்பா.

" திருவுந் தருநிதியே செண்பகம்பூ ணும்பச்
சுருவினு மேய் காளிகல்ல லாரா—யருளாலா
பந்தானே பாரிற் பெறினேவா னேராதி
யெந்தாசு நேருதியா தே.

கருதுமே லோருயர்பா காண்விசய செல்வி
யரிதவிசிந் தேசெகத்தோ தன்னே—முருதுலா
மாமேய் சிவாக மகாராசி யேராரோர்
சோமே சுரியருளே சொல்.

உ

சிவமயம்.

ஓம் ஸ்ரீ குருவே நம:

# சத்தப்பிரபந்தம்.



இஃது

குன்றக்குடி பெஞ்ச் மாஜிஸ்டிரேட்டாயிருந்த

மதுரவைத்திய பண்டிதர்

**ஸ்ரீலஸ்ரீ G. முத்துச்சாமி பிள்ளை அவர்கள்**

குமாரரும்

தெய்வத்துதித்திரட்டு, கதிர்காமக் காவடிச்சிந்து, பனையூர்ப் பன்மணி மாலை, குன்றக்குடி வீரமாகாளிமாலை, வீரம்மைக்கண்ணி என்னும் நூற்கட்காசிரியருமாம்

குன்றக்குடி வைத்தியம்,

**M. கணபதியா பிள்ளை அவர்களால்**

இயற்றப்பெற்று

---

கல்லல் என்று வழங்கும்

கல்விநகர்

ஸ்ரீலஸ்ரீ சு. கி. கரு. நா.

நாச்சியப்ப செட்டியாரவர்களால்,

---

மதுரை,

ஸ்ரீ ஜெகதாம்பாள் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

---



விலை] 1930. [ரூ. 1




கல்லல், ஸ்ரீ நற்கனி அம்மன்.

# நூன் முகம்.

சிருஷ்டியில் பல்வித விநோதங்களா யமைந்துள விப்பிர பஞ்சத்தினிடத்தே உற்பவமான உயர்திணை மனுஷ்ய வர்க்கத்தி னருள், உணருதற்குரிய சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, காந்தமெனும் பஞ்சவறிவினின்று மேலாய பகுத்தறிவினைப்பெற்று மப்பாற், செய ற்கை யறிவாய்ச் சிறந்து விளங்குஞ் செவ்வனே அறம்பொருளின்ப மெனும் புருடார்த்தங்களை யடைந்து ஆண்மகோடிகளனைவரு மரி துணர் பொருளா யெஞ்சிய, அரிய செயலாய அருட்பெறும் வீட டைதற் கவாவுற்றோர் பலர். அம்முயற்சியா லறநெறி தப்பி மற நெறி புக்கினோர் பலர். அறிந்து மபலமாயினோரனேகர், அவர்களு ளரனடி யடைந்தோரறவுஞ் சிலரே, எனின், அற்பமாயுமரிய செய லின்றி எளிய செயலாயும் விளங்கு மேனைய கல்வி யறிவொழுக்க வாசாரமு மில்லா வனாசாரர்கள் பக்கந்தலையிடவேண்டிய தவசிய மில்லை. இவை யொருபானிற்க, தொண்டுதொட்டு சொரூப சாக்ஷாத் கார முணர்த்துஞ் சுயம்பிரகாசராய் விளங்கு மாசிரியர்களுமனேக ருளரென்பது சுருதி யுக்தி யனுபவப் பிரசித்தம். எனவே, இன்னூ லாசிரியர் ஸ்ரீலஸ்ரீ M. கணபதியா பிள்ளை அவர்களு மேற்கூறிய வண்ணம் அருட்பிரகாசராய் விளங்கும் அருட்பெருந்தகையாள ரென்பது யாமுணர்த்தாமலே இன்னூன்முகத்தால் விளங்கு மென் பது மிகையாகாது. அத்தகைய அருட்பெருந்தகையாளர், அரிய பெரிய அநேக சுருதிகளின் ஸாராம்ஸங்களை தம்மனுபவத்தாலடக்கி கூறியசெய்யுட்களை யாமும் இன்னு முணர்தற்கவாவுறு முயரறிவா ளர்கள் பலரும் நன்கு பாடி இன்பக்கடலி லாழ்ந்தும்பொருட் டிங் கிதை யச்சிடுவாமென வரைந்த கல்லல் ஸ்ரீலஸ்ரீ சு. கி கரு. நா. நாச்சியப்ப செட்டியாரவர்கள் கருத்துக்கிசைய சத்தப்பிரபந்த மென் னும் ஈரைந்து வகை நூல்களாயியற்றித்தரவதையச்சிட முன்வந்து ளேன் எனவே இத்தகைய சீரும் சிறப்பும் பயனும் பெற்ற நூலை வெளியிடுகின்ற ஸ்ரீலஸ்ரீ சு கி. கரு நா. நாச்சியப்ப செட்டியா ரவர்கள் பொருள் செலவைக் கருதாமல் பதிப்பின் மேல் பதிப்பாக பெருத்த அளவில் உதவிசெய்து வருவது பெரிதும் பாராட்டத் தக்கதாகும்.

ஸ்ரீ ஜெகதாம்பாள் பிரஸ்,<br>மதுரை.<br>17—9—30

E. S. செல்லம் பிள்ளை,<br>புரொப்ரைட்டர்.

# சாற்றுக்கவிகள்.

---

மதுரை பிரமஸ்ரீ யோகானந்த சுவாமிகள் வித்தியாசாலைத்
தலைமை உபாத்தியாயர் தமிழ்ப்பண்டிட்

K. V. சுவிசேசமுத்துப்பிள்ளை அவர்களியற்றியன

எழுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

1 முகிறவழ் பொழில்சூழ் முதுபனையூரிற்
றவமுடைத் தக்கிண மூர்த்தி

சுகிகளா யாருஞ் சுகித்துய்வான் றனது
சீடரா முத்துச் சாமிக்கும்

முகிழ்துழிப் பனபோன் மருத்துநூன் முறையும்
பிரணவ முஞ்செவி மொழிந்தோன்

மகிமைசே ரருளா னற்கவி கேட்கும்
சமிக்கையின் வகுக்குமா புலவோன்.

2 செந்தமிழ்ப் பாக்கள் வித்தையின் பெருக்காற்
செப்புவர் சிறந்திடுங் கவிஞர்

நந்தலிற் சத்த மாபிர பந்தம்
நவிற்றுத ஞனிலத் தியார்க்கும்

தொந்தரைக் கிடமா மெனத்தொடா விடுவர்
தூக்கிசை தாணிவினி லாய்ந்து

சிந்துர முகத்தன் பெயரவன் றெருகுத்தான்
செம்மையோ ருளங்களிப் புறவே

---




குன்றக்குடி வைத்தியம்,

**M. கணபதியா பிள்ளை.**

# அவையடக்கம்

வெண்பா.

நாமாது நல்லருளால் ராஜாங்க முன்னிலையிற்
பூமாலை சூடும் புலவீர்காள்—தாமா
யெழுவாய் பயனிலையென் றெள்ளாது கொள்வீர்
குழுவாய்ந்து மின்னூற் குணம்.

---

உ

சிவமயம்.

கல்லல்

## ஸ்ரீ முத்துவிநாயக மூர்த்தி

# ஆறாரைச்சக்கர பந்தம்.



### கட்டளைக் கலித்துறை.

கண்டவர் போற்றிடுங் காரானைமுத்துக் கணபதிக்கே
சுண்டல்மிட் டாய்பல காராதிதோசைபாற் சோற்றேடுமிக்
குண்டி நுகர்ந்தருள் வாராயெனத்தொழு தோம்புமன்பு
கண்டவ சுண்டழ குண்டிலகோர்சீர்க் களிப்புண்டுமே.

குன்றக்குடி ஸ்ரீ குமரக்கடவுள்

# எட்டாரைச்சக்கர பந்தம்.



## ஆசிரியப்பா.

கயல்விழி மாது கதிதவப் பார்ப்புமை
கனக்குக மதுநதி மேகவீர்ங் கிரியா
கயவ ரண்டாத கதிகழன் றூர்ந்தேம
கவலைதீர்த் தபதி திகழொளிப் பிரம
கந்தனே கடவுளே கருணையா கடம்பா
மைந்தனை யாட்கொளு மயின்மா மகிபனே.

—— ——

# கல்லல் ஸ்ரீ அம்பிகையின் உபயநாக பந்தம்.



வெண்பா.

" திருவுந் தருநிதியே செண்பகம்பூ ணும்பச்
சுருவினு மேய் காளிகல்ல லூரா—யருளாலா
பந்தானே பாரிற் பெறினேவா னேராதி
யெந்தாசு நேருதியா தே.

கருதுமே லோருயர்பா காண்விசய செல்வி
யரிதவிசிந் தேசேகத்தோ தன்னே—முருகுலா
மாமேய் சிவாக மகாராசி யேராரோர்
சோமே சுரியருளே சோல்.

உ

ஓம் சற்குருப்யோ நம:



# கல்லல் ஸ்ரீ முத்துவிநாயகர்

# மும்மணி மாலை.

## குன்றக்குடி ஸ்ரீ குமரக்கடவுள் வணக்கம்

### சிவலிங்கபந்த விருத்தம்.

அகமுக வறிவேயெங்க ளையனே முதற்றேவாசீர்க்
குகபோதக் குரவா ராம கோன்மதி குழிக்கும் வேலைப்
பகவனு மகிழவான பாவைமால் புணர்ந்து கூடி
மகயிகந் துலங்கவந்த மயில்மலைக் குமரா போற்றி.

## குன்றக்குடி ஸ்ரீவீரமாகாளி அம்மையார் வணக்கம்

### அஷ்டநாகபந்த வெண்பா.

சீராய தூவே திருவே யவிரோதி
வீராய் விநோதி விவேகிக—ளாராஞ்
சோகுதிர வாராறு தூவின் மயிலோதி
யேகபா மாஞ்சோதி யே.

## ஸ்ரீ மகா இலக்குமி வணக்கம்

### கமலபந்த வெண்பா.

காமனம னுமதம காமரும தாமதம
காமாரி நெஞ்சாய் கடற்பிறந்தாய்—பூமனமை
தன்னம்மை யொப்பாரிற் றமரைவீட் டென்னம்மை
பொன்னம்மை யானுன் புணை.

## ஸ்ரீ குரு வணக்கம்.

### விருத்தம்.

தன்னியன் பனையூர் வாழுந் தச்சிணா மூர்த்திபாத
மென்னறி வுவந்தேநிற்க எம்பிரான் முத்துச்சாமி
பொன்னடி மனத்தே நிற்கப் பூங்குழற் சுடலித்தாய்வந்
தின்னுமெய்த் துணையாய்நிற்க இணங்கியான் வணங்கினேனே.

### காப்பு

### பின்முடுகு வெண்பா

விண்ணிலா வூறுமலர் மேய்சோலை மாளிகை சூழ்
மண்ணிலா மல்லகல்வி மாமுகனூற்—பண்ணுடுக
மூன்றான்றன் றெண்டுகொண்டிங் கண்டாண்டங் கண்டு
குன்றை யொன்றன் பென்ற கந்தர்க்கு (மண்டுங்

### நூல்

### வெண்பா

1. சீராருங் கல்லற் றிருந்து செட்டி யூருணியின்
வாரார் வடகரைவாழ் மாமுகவா —ஏராரு
முத்து விநாயகனு மூர்த்தியே ஏழையென்மேற்
சித்த மகிழ்ந்தருளே செய்

### கட்டளைக் கலித்துறை

2. செய்யும் பலபல காரமு மொக்குஞ் செழுந்திருவைங்
கையுங் கமலக் கழலு முவானனங் கார்முகில் போன்
மெய்யுங் கருணை விழியுங்கண் டேத்துவார் வெவ்வினை தீர்த்
துய்யும் பொருளீயு முத்து விநாயக வுத்த மனே

### கலிவிருத்தம்.

3. வுத்தமா வென் றுனையுல கும் பரும்
பத்தி செய்தே பரானந்த மெய்துவான்
சத்தி கண்டே சதாபணிந் தோதினேன்
முத்து நாயக மூர்த்தி வந் தாள்கவே.

4. ஆளுந் தவமுனிவோ ரண்டமெலாங் கொண்டாடுன்
றாளுந் தமியேன் சரணமிட்டே — ளுந்
தனிக்கு முத்து நாயகனே தஞ்சமடி யேற்கு
மினிக்கு முத்தி யென்றருள்வா யே.

5 அருள்வா யெனமல ரன்பா லிறைத்தோம் படியவர்க்கிப்
பொருள்வான் புகழும் புரிந்தாள்புத் தேளிராம் புண்ணியனின்
றெருள்வா ரிசமலர்ச் சேவடி சேர்ந்திடாத் தீவினையாற்
சுருள்வார்க் கெதுகதி யோமுத்துநாயக சுந்தரனே.

6. சுந்தரப் பெருமானே சுரேசுரா
மந்திரக் கடலேதினை வாழ்த்தினேன்
கந்தரத் தடியேன் கவிமாலைசூ
டிந்தரர்க் கிசைமுத்துக் கணேசனே.

7. ஈசன்முத னீசன்வரை யெல்லா ரிருதயமும்
வாசதல மாய்வாழு மான்மாவே — தாசனுனை
வேண்டுகின்றேன் முத்து விநாயகனே தாண்மலர்கொண்
டாண்டுமின்றே தாநல் லறிவு.

8. அறிவதற் கெட்டாத தாயகத்ரோங்கோ ரகண்டவத்தாய்க்
குறிகுண மற்றுறுந் தேசோமயமே குறைவிலின்பாய்ச்
செறிகுருவேநினைச் சேரப்பெறுநா டெரிந்தி யம்பாய்
நெறிதவ பாதவர் சார்முத்துநாயக நித்தியனே.

9 நித்தியானந்த நிட்களா தீதவாழ்
வெத்தினந்தந் திராப்பக னீக்குவாய்
வித்தியாச மிலாதென் விருத்தியின்
முத்தியாய்விளை முத்துவா மூர்த்தியே

10 மூர்த்திதலந் தீர்த்த முறை முடித்தார்க் கோர்குருவாய்
காத்தருண்மா முத்துக் கணபதியே — பூர்த்தி
தருந்தா மரைத்தாடான் றனமெனத் தானீ
வருந்தா வகைவரும்பேர் வாழ்வு

11. வாழும் படியொரு வாக்களித் தேழை மனங்குளிரச்
சூழுஞ் சுகானந்த வெள்ளமேற் பூத்துத் துளிர்மலர்த்தா
ளாழுங் கருத்தோ டலையாக் கடல்போ லகமடங்கி
னூழுந் துயருமோ டாவோ விநாயக வோதுகவே.

12. ஓதுமுத்தி யுபேட்சையுற் றேங்கிடிற்
பூதலப்பொருண் மேன்மயல் பூண்பனே
மாதவத்தர் மனேலய மெய்துவா
னீத முத்து விநாயக நேயனே.

13. நேய னுமை யல்லா னிலத்தியா ருண்டுகொலோ
வாய னுமை வானே தருளாளா—தூயவுளக்
கண்ணே கடலே கதியேமுத் தானைமுக
விண்ணே வெளியே விளம்பு

14. விளம்புஞ் சுகநிலை யாதென்று தேடி விசாரணைசெய்
துளம்பொங் கமுதவூற் றேடம்பரத்தென் றறப்புணர்வே
னிளம்பைங் கொடியா ரிருவோர் தனச்சாந் திசைபுயவான்
கிளம்பா டவிபுடைசூழ் கல்வி நாயக கீர்த்தியனே.

15. கீர்த்தி யாகிக் கிளைத்தொளிர் வில்வல
பார்த்திபன்றெழும் பாஞ்சசென் யப்பிரான்
சீர்த்தியாம் பதித் தீதறவைத்துமுன்
னேர்த்தியாய் நினை முத்துக் கணேசனே.

16. நேசமெனக் காட்டி நினைவதெல்லாஞ் சூதாகிக்
காசளவி லன்பூட்டுங் கன்னியரை— மோச
வெமனெனவெண் ணோர்தவத்தா ரேக்கமற நோக்குஞ்
சமனறியா முத்துநா தா.

17. நாதாந்த முத்தி ரகசியங் கண்டே நனிமகிழ்ந்தார்
சாதாந்த போதனர் தங்கடாய் தந்தாய் தவக்குன்றமே
வேதாந்த வாழ்வே விருத்திப்ர வாகமே மெய்விளக்கே
போதாந்த தாகர பாதார முத்தெனும் போதகமே.

18 போதகத்தலையா புலவோர் புகழ்
போதகத்தலைவா புலனாய் வருட்
போதகத்தலை பொன்னடி யாளவிப்
போதகத்துட் பொலிமுத்து வானையே.

19. முத்துக் கணபதிக்கே மோதகம்பா லிட்டலிதேன்
வைத்துத் துதித்தால் மனநினைத்த—கைத்துடைமை
நீதமுஞ் சீரார் நிமலவீட் டின்புமுண்டா
மாதமும் மாரிபெய்யும் வான்.

20. வானே வணங்குமுன் மாஞானபோத மணமலர்த்தா
ளானே நினைந்தொன்றும் நாடாதறிவாய் ரமித்துவெளி
யானே யெனலுநழுவாதி வாழ்வை யடைவலென்றே
கானேறு பூம்பொழில் சூழ்சேமகல்விக் கணபதியே.

21. பதியி னின்றருட்பா விண்டுன்பொன்னடி
துதிசெயின்பியான் சொல்லற் கடங்குமோ
மதியிணீண்மரா வாதுதோ யேரிகூ
முதிசயக்கல்வி யாள்முத்து யானையே.

22 யானைந் திலக்கணந்தேர் யாப்பியற்றிப் போற்றவருள்
வானைந்து பூதமுதல் வையகமாய்—ஞானந்
தருமதுரை மீறு டரும்பிள்ளை யாராந்
தருமதுரை கல்லலிலே தான்.

23. கல்லாத வீணரைப் பாடி யரிச்சந்த்ர கன்னவென்றுஞ்
சொல்லாது செல் வந்தருவாய் தொழுவார்க டுக்கமறுத்
தல்லாச வாகுற்றுலகேழு மன்பா லுவக்கவரு
நல்லாசிரிய நமோகல்விமாநகர் நாயகனே.

24. நாயக மென்று னையன்றி நானெவர்
தோய கஞ்சென்று சொல்லிப் பிழைப்பதே
நேய கல்வியி னீள்புனற் பூங்கரை
தோயு முத்துக்கணேசா சுத்தனே.

25. சுத்தாத் துவிதமதாய்த் தோன்றுஞ் சுயஞ்சோதி
மத்தாற் புடையுண்ட மான்மருகா—எத்தனித்த
சித்திதருஞ் சிந்துரமே தேன்பாய் குளக்கரையா
நித்தமெனைக் காத்தருள்வாய் நீ.

26. நீயே கதியென வந்தடைந்தேனிந்த நேரமென்னேர்
வாயே திரந்தொரு வார்த்தைசொல்வாய் வனநற்கனியாந்
தாயே பயின்ற தடாகபூஞ்சோலைத் தனிக்கரைவாழ்
சேயே திருமுத்து நாயகனேமோர் சிவாதித்தனே.

27. ஆதித்தாயுமை யன்புட னீன்றமா
நீதித்தானம் நிகழ்கல்வி மாமுகன்
சோதித்தாமரைத் தொண்டுகொண் டன்புட
னோதித்தாழும்ப ருய்ந்தன ருள்ளமே.

28. உள்ளத் திருக்கு மொருவெளியைக் காணுதார்
விள்ளத் தெருத்திரிந்து விட்டோமே—வள்ளலென
வேண்டியவா றீயும் விநாயகரைக் கல்லலிற்கண்
டாண்டவனே யென்னுறோ டண்டி.

29. அண்டங்க ளெல்லாமடுக் கடுக்காய்ச்செய் தனைத்துயிர்க்குங்
கண்டன் புடன்படி தானேயழக்குங் கவுரிபெற்ற
பண்டம் பலரடிக் குஞ்சரமேநினைப் பாடுவர்க்குங்
கொண்டின்புறுபொரு ளேதேனும்நீதான் கொடுத்தருளே.

30. கொடுக்கி லாரைக் குறித்துப் பாடாதுபாத்
தொடுக்கு மன்பர் துயரறத் தாட்கொளு
மடுக்கு மல்லிபூறார் கல்வி மாபத
மிடுக்கணீங்கநா மேற்றுவோம் போற்றியே.

கல்லல் ஸ்ரீ முத்துவிநாயகர் மும்மணிமாலை

முற்றும் சுபம்.

---

சிவமயம்.

ஓம் ஸ்ரீ குருவே நம:

கல்லல்

# ஸ்ரீ நற்கனி அம்மன்

# நவரத்தினமாலை.



இதனுள்

ஸ்ரீ நற்கனி அம்மன் சந்தவிருத்தமாலையும், கட்டளைக்கலிப்பா மாலையும், சட்பஞ்சக மாலையும், ஆனந்தக்களிப்பு மாலையும், பாம்பாட்டிச்சித்தர் மெட்டு மாலையும், கும்மியும், முளைக்கொட்டு கும்மியும், தாலாட்டும், கொச்சகமாலையும், சேர்க்கப்பெற்றது.

இஃது

குன்றக்குடி வைத்தியம்

## மு. கணபதியாபிள்ளை அவர்களால்

இயற்றப்பெற்று

---

கல்லல்

ஸ்ரீலஸ்ரீ சு. கி. கரு. நா.

**நாச்சியப்பசெட்டியாரவர்களால்**

அச்சிலியற்றப்பெற்றது.

---

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 2 நவரத்தினமாலை.

## விநாயகர் காப்பு.

பின்முடுகு வெண்பா.

நல்கனி பால்வடைதே னண்ணுசுண்ட றேசையப்பம்
வெல்லமிள நீருண் விநாயகனே—கல்லலில்வாழ்
கற்பகத்திற் கற்புதப்பொற் கற்பிசொற்கற் கற்கெனைத்தற்
கற்புரப்பற் பப்பதத்திற் கா.

## கல்லல் ஸ்ரீநற்கனி அம்மன் சந்த விருத்தமாலை.

தனன தன தான தனன தன தான
தனன தன தான தனதான

1. கமலி சரசோதி யமரர் புகழோது
கருணை நிறை மாது வுமையாள்காண்
கனியு மடியார்கள் கவிசொல் புலவோர்கள்
கவலை தவிராதி வுமையாள்காண்
விமல சிவ காமி யமல சுக வாமி
விதி துதிசெய் மாமி வுமையாள்காண்
விட மகுட ரவி விட முடுகு சூல
மிகு பல விசால வுமையாள்காண்
அமைதி தரு யோக மிகு மலைமி ருது
மதி சய விவேக வுமையாள்காண்
அவிதரு முதார வழகி வெகு தீர
வக முக வுகார வுமையாள்காண்
கமக மென வாச மெழு மலர்கள் சூடு
கனக நிற வாலை வுமையாள்காண்
கன முனிவர் நால்வர் மகிழ் மதுர வாவி
கமழ் கல்ல லில் மேவு முமையாளே.

---

தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த தனதான.

2 திருமருவ தீதமென்ற சிவமயம தாகிரண்டு
திருவடிய தேபுகன்று பணிவோர்கள்
செயலதனை யேவுணர்ந்து திகழுமறி வாய்மலர்ந்து
செனவினை போகவென்று மதனேமன்
வருதுயரி லாதகன்று மதுரகவி யோகவின்று
மகிமைபெற வாழுகின்ற தரித்ரமோ
மனதுமகிழ் வோடுதங்க வனசமலர் வாவிதங்கு
மதுரையினு மேவளர்ந்து வருதாயே
முருகுலவு தாரணிந்த முருகனனை யேயனந்த
முனிவ ரலரே சொரிந்து தொழுமானே
முதுசிலையி ராசர்தந்த குமரியபி ராமிசந்த
மொழியவரு ளேபுரிந்த புவனேசி
புருவநடுவே யிருந்து புனிதநட மாடுகின்ற
பொறுமைகொள் வராகிமன்ற கல்லல்வாழ்வே
புரியுறு கையார்குருந்தி னிழலமர் வியாசநந்தர்
புகழினைய வாலையென்ற வுமையாளே

---

3. தானதந்த தானதந்த தானதந்த தானதந்த
தானதந்த தானதந்த தனதான

சூலமண்டு காலரண்டை யோடிவந்து சாடுமன்று
சோதிகொண்ட பாததண்டை யொலிகூவ
தூயமன்று வீசயென்ற ஞேடுகந்து பேசிநின்று
தோணுகின்ற தாணுவென்ற வடிவோடு
சீலமந்த்ர சூலமைந்து மாதியந்த மாகுமந்த
சேவைதந்து நீமகிழ்ந்து மவரோடே

சேய னெங்கள் நேய னுங்களோலை யிங்கடாதுயென்று
 சீறியஞ்ச வேசினந்து செலவோடி
கோலமன்ற மேகலந்த ஞாலமெங்கு மாகுசங்கை
 கோளகன்ற ஞானவின்ப மருள்வாயே
கோடியிந்தி னேருவந்த மோனசிந்தி லூறிவந்த
 கோமளங்கொள் பாலையும்பர் பெறுதாயே
ஆலமுண்ட நீலகண்ட ராதிசுந்த ரேசரண்டை
 யாடுகின்ற நீதிகொண்ட கல்லல்வாழ்வே
ஆனைகந்த நாதனன்பு மீறவன்று தாயெனுஞ்சொ
 லாவுறங்கி யேவிளங்கு முமையாளே

---

4. தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன
 தனத்ததன தனத்ததன தனதான

நினைத்து நினைமனத்தளியி லிருந்துவகை யுரைத்திசைய
 நிரைத்ததவ பதத்தையினி யருள்வாயே
நிருத்தமிடு மொருத்தரலை சலத்தையணி முடித்தசடை
 நெருப்புறுகை யார்க்கினிய சதுராடி
அனைத்துலகு மதிக்கவள ரனத்தை நிகர்நடைப்பவதி
 அகத்திலுதி மகத்துவமு முடையாளே
அடுத்தசுரர் முடித்தலைக டிடித்துருள மடித்தவயி
 லமர்த்துகர சமர்த்ததிக முருகேசர்
தினைப்புனமெய் சுகத்தைமுடு கவட்கினிமை யுரைத்துமணை
 திருக்குமர பார்க்குமொரு வனையாகி
செபித்துருகு தவத்தினர்க டிருத்திபெறு மருட்கிருபை
 செரித்தழகு பெறத்தரும துரைமாதா
கனைத்தபகடனைக் கடவுமதப் பொறியை யெரித்தறிவு
 கலக்கு மனுபவத்தருணை கல்லல்வாழ்வே
கருத்தகுழல் சிறுத்தயிடை பெருத்ததன சிரித்தமுக
 கனப்பெரியவனக் குமரி வுமையாளே

5. கயத்தலைகொள் குயத்தி யதிசெயத்தி வெகுநயத்தியருண்
மயத்தியிரு தயத்திவய மலர்வாழும்
கனத்தி மிகுதனத்திதரு வனத்தி நலகுணத்திபகை
சினத்தைவெலு மனத்தியன மனமாது
சுயத்தி யதிசயத்தி யபிநயத்தி சொல்விநயத்தியரி
சுகத்தி பாவிகத்திதிரு மகாரசி
துளிர்த்தவன மலர்த்தளிர்க டொடுத்து மிகமதித்துமிடு
சுரக்குழுவு ளிருக்குமுனே மறவேனுன்
அயத்தினிடை யிருக்குமல ரடிப்பதும மதைப்பணிய
வனுக்கிரக மெனக்கருள நினைவாயே
அறத்துயரு மனத்தர்சிசு வறுத்தகறி புசிக்கவிசை
யார்க்கு மிணைநடிக்குமிள மயில்போல்வாய்
வியர்த்தமற வுளைத்ததிக முயர்த்துபவர் பயத்தையொரு
விழிப்பிலற நிவர்த்திபுரி கல்லல்வாழ்வே
வெழுத்தகதிர் முளைத்ததென வெளிச்சமிகு முளக்கமல
விளக்கெனவு முளக்கிவரு முமையாளே.

தானன தனை தானன தனை
தானன தனை தனதான.

6. ஆரண மதோது பூரண வதீத
வாரமன பாத வுமையாள்காண்
ஆறணி நடேச ரேருறு சுரேச
ராடிமகிழ் வான வுமையாள்காண்
வாரண குகேச காரண கணேச
வானவர் விசேச வுமையாள்காண்
மானன விலோதி பாவிகள் விரோதி
மாரிசிவை காளி வுமையாள்காண்
நாரண னனேக தேவர் புடைசூழ
ஞான முறையோது முமையாள்காண்

நாதவெளி யாக வோது சரசோதி
நாய கமதாகு முமையாள்காண்
தோரண விமான வாவண சமூக
சோதிகொலுவே கொள் ளுமையாள்காண்
தூமணிகள் வீசு மோண வளமாமை
தேய் கல்லலில்வாழு முமையாளே.

தானதன தான தானதன தான
தானதன தான தனதான

7. தேவியெனை யீன காரவடி வாய
தேசிக சொரூபி யுமையாள்காண்
தேடு மடியார்கள் பாவ விடையூறு
தீரவருள் வீர யுமையாள்காண்
ஆவலொடு தேவர் சேவை செய்வாராகி
ஆதிசிவ சூரி யுமையாள்காண்
ஆரமணி வாச மாலை யிடைதாழ
ஆடி விளையாடு முமையாள்காண்
பாவிகளை மோதி யாவி கொளுமேக
பாவை சகசோதி யுமையாள்காண்
பாச முடையோர்க ணேச மடையாத
பாதவனு பூதி யுமையாள்காண்
கூவியெனை யாளு மோவிய பவாணி
கோமதி சபேச ருமையாள்காண்
கோவச முலாவு கான கல்லல்மேவு
கோமள சுவாக வுமையாளே.

தானதனதன தானதனதன
தானதனதன தனதான.

8. வேதாகமகலை மாதா சிவைமலை
மீதோதயமுறு முமையாள்காண்

வேல்ாயுதனனை சூலாயுதமணி
மேலா கியவா வுமையாள்காண்

சீதாமணமக ளோதோரிளையவ
டேனு றமைதல வுமையாள்காண்

தீதானதுதவிர் மானுரணிகளொடு
சீராயு றவுகொ ளுமையாள்காண்

வாதாகியமகுடாவா வெனமுனம்
மார்பாய் கழுமுழி னுமையாள்காண்

வாவாவெனுமெனை யோர் பாலகவெனு
மாதா வகமுக வுமையாள்காண்

பூதாதிகடுதி வேதாளமுமலர்
போதா லிறைசய னுமையாள்காண்

பூநாறடவிகள் தேனூர்வயன்மழை
போகா தடர்கல்ல லுமையாளே.

9. நானேநினைமற வேனேயெனுமவர்
நானேயெனு மொரு வுமையாள்காண்

நார்வானவர்துதி தார்வாழ்பதசிவை
நாதாதியளெனு முமையாள்காண்

தேனேரிசைமலர் தானேபுனைதரு
தேவாதிகள் புக ழுமையாள்காண்

தீராவினைகளு மோர்பார்வையிலறு
சீராதிசய வுமையாள்காண்

மானேதருமகள் கோனேமகிழ்வுறு
மாதாவெனவள ருமையாள்காண்

மாடேறிறையவ ரோடேநடமிடு
மாவீரியமுடை யுமையாள்காண்

தானேசருவமு மானுரிருதய
சாமீபசகுன வுமையாள்காண்

தாதாவெனவுல கோதார்வலர்பல
தாஞகிகொள் கல்ல லுமையாளே.

தனனதன தான தனனதன தான
தனனதன தான தனதான.

10. அடிமை கொடுநோய்கள் மிடிகள் பொடியாக
அருளருளு மாதி வுமையாள்காண்
அடிதொழுகிலாத வசடர் கொலைகார
ரறமிலவர் கோப வுமையாள்காண்
கொடியிடை தளாட வடியர் பகையோடு
குறைகளற வாடு முமையாள்காண்
கொடிய மகுடேச னுடலை யிருகூறு
கொளுமெரிகொள் சூல வுமையாள்காண்
மடிவகல ஞான மதிய முதவாரி
மடையில் விளையாடு முமையாள்காண்
மறைமக ளனேக துதி புரிவிதேக
மாகத சரீர வுமையாள்காண்
படிபுகழு மாதி முடி விதெனுமோதி
பாசிவ சமாதி வுமையாள்காண்
பழனமணி யாறு முகிலடவி வாவி
பரவுகல்லல் வாழு முமையாளே.

11 கலிவினை வியாதி பயமிருள் பசாசு
கடுதிருடர் நாச வுமையாள்காண்
கலகலென வோசை தருநடன பாத
கவுரிசிவை நீலி வுமையாள்காண்
வலிமைமிகு சூல மெரிமழு கடாரி
மருவுகர வீர வுமையாள்காண்

வனசமுரை மாது சரணமெனவோது
மகிமைமிகு சாது வுமையாள்காண்
புலியுறுகிலேறி புலகிலிசை கேடர்
புரளவரு மாரி வுமையாள்காண்
புவனேபரை வாலை யெனதுகுல தேவி
புகழ்பெருகு காளி யுமையாள்காண்
கெலிதரு முகாரி கெவுனமுனிவோர்கள்
கிருபைசெயெ ஞதி வுமையாள்காண்
கிரணமணி வாச விரணமனே மேவு
கிரமகல்லல் மேவு முமையாளே.

தானனதந்த தானனதந்த
தானனதந்த தனதான.

2 ஞானேதயங்க ஞானபிலங்க
நாராய் வளங்கு முமையாள்காண்
நாமாதியங்க மாசேதமின்றி
நாடோறு மொன்று முமையாள்காண்
வானோர்வணங்க தீதோதிதந்த
மாதா சிறந்த வுமையாள்காண்
மாடேறிநின்று மாடசர்பங்கில்
வாய்காளி யென்ற வுமையாள்காண்
தேனூறுபொங்கு கானூறுகுன்றை
சேர்வாலை யென்ற வுமையாள்காண்
தேவாதியும்பர் பாவேசுகந்த
சீபாத கந்த வுமையாள்காண்
மானுடகஞ்செய் கோமேய்பறம்பு
மாசோலை தங்கு முமையாள்காண்
மாவாணிகண்டு தானேசெய்தொண்டு
வாழ்வாதி கொண்ட வுமையாளே.

13 தனதான தானதன தனதான தானதன
தனதான தானதன—தனதான.

புவனேசை வாலைபக வதிகாளி மாரிபரை
புலியோது நீலியெனு முமையாள்காண்
புலவோர் மகானுபவ ரடியார் சுரேசுரர்கள்
புணையாகு பாதமல ருமையாள்காண்
சிவசோதி நாயகிப வதிசூரி கோரியெரி
திரிசூல பாணியற வுமையாள்காண்
சிதையா வதீதகதி யுதவோதி மாதரசி
திருமாபி ராமிதொழு முமையாள்காண்
தவஞான மேரிளவல் சுந்தயா மகாவல்லி
தனிராம நாதனிளை யுமையாள்காண்
சதிகார மூடர்குடி யடியோடு மாளவரு
சமயோசி தாவகன வுமையாள்காண்
நவநாத மாமுனிவ ரகமீது லாவுமொரு
நடனேசை பாலவடி வுமையாள்காண்
நனிவானு மாடவியு மாஞுக மேவுபல
நலமாவி ஞேதகல்ல லுமையாளே.

14 தன்னத் தத்தான—தனதான.

அன்னத்தைப் போல நடையாளே
அன்னத்தைப் பாலி கொடையாளே
சொன்னத்தைப் போல வுடையாளே
சொன்னத்தத் தேவ விடையாளே
மின்னத்தைப் பூணு மிடையாளே
மென்முத்தக் கோவை மிடறுளே
கன்னற்குச் சீத விடையாளே
கல்லற்குத் தேவி வுமையாளே.

15 தந்தாதன தந்தாதன தந்தாதன—தனதான.

சிந்தாகுல சிந்தோடிடு சிங்காசன வுமையாள்காண்
செந்தேனொழு குஞ்சேவடி சென்றேதரு முமையாள்காண்
வந்தார்கள் வருந்தாவகை மந்த்ராதிசொல் லுமையாள்காண்
வஞ்சாதிக டுஞ்சாரண மஞ்சாய்வரு முமையாள்காண்
பைந்தோகை யுறுந்தேசிகர் பண்பாரனை யுமையாள்காண்
பண்டாதிக டந்தேயெதிர் பண்பாடிடு முமையாள்காண்
நந்தாதொளிர் சிந்தாமணி நஞ்சேர்மிட நுமையாள்காண்
நன்றேறபுரி பொன்றேவர்க ணன்கார்கல்ல லுமையாளே.

16 தானதன தானன—தனதான.

ஞானவடிவாகிய வுமையாள்காண்
நாதவொளி வாய்வரு முமையாள்காண்
தேனினு மினுமுறை யுமையாள்காண்
தேவர்கள் பரவிடு முமையாள்காண்
மோன முடிவாகிய வுமையாள்காண்
மூவுலகு மேதொழு முமையாள்காண்
சான விவாகிய லுமையாள்காண்
தானகல்லல் மேவிய வுமையாளே.

17 தனதனதானத்—தனதான.

பலவித கோலத் துகிலாளே
பகவதி காளிப் பெரியாளே
கலக விரோதர்க் கெமனுனாய்
கனியடி யாருக் குறவானாய்
மலைமுனி வோருக் கனையானாய்
மதியமு தூறச் சனையானாய்
உலகவினோதக் குயிலானாய்
உயர்கல் லலைமேச் சுமையாளே.

18 தானன தானன —தனதான.

ஆசார வாசக மடமாத
ராபாச மோகனு னருளாலே
வாசாம கோசர கதிசேர
வாவா வெனுமென திடர்தீர
நேசாதி கூறிடு மிளமானே
நீடார் சடாதர மலைமாதே
காசார் தபோதன கல்லல்வாழ்வே
காரோதி நாரணி வுமையாளே.

19 தனதன தனதன—தனதான.

வுலகிடை படுமிடி வினைதீர
வுலவியு னருணல மருள்வாயே
நிலவுதி முகவழ குடையாளே
நினைபவர் வினைதவிர் சரசோதி
கலகல வெனநட மிடுதாளி
களபமு மெழுகிய மணதோளி
மலைமக ளெனவரு மகராசி
மதிகல்ல லுதவிடு முமையாளே.

20 தனன தனன—தனதான.

அடியேன் மிடிக ளறவாவா
அருணசலவி மலமாதா
படியே புகழு மழகாளி
பணிபூ ணடன பதகாளி
மடியா முனிவ ரருகேவாழ்
மதுராபுரியு மயில்மேரும்
இடமாயுலவு மெமதாயே
எழிலான கல்ல லுமையாளே.

21 தத்தன தத்தன தனதான.

அத்துவிதத் திரு வருளீயு
மற்புத பொற்பத மலர்தாராய்
சத்தி யெனத்திகழ் தவமானே
தற்பர விற்பன சிவஞானி
முத்து நகைச்சிறு வயதாளே
முக்கண ரர்க்கொரு துணையானாய்
தத்தைக டொத்துரு கல்லல்வாழ்வே.
சற்குண நற்கனி யுமையாளே.

22 தானதனத்தன தானதனத்தன
தானதனத்தன—தனதான

ஏமவிழிச்சிகள் காமவலைச்சிக
ளேடணை யிச்சிகள் மதநாலே
ஏசுமழுப்பிகள் பாசவிருப்பிக
ளீன விலைச்சிகள் மயலாலே
சேமமலர்ப்பத மோதுவிருத்திகள்
தீதுற நித்தலு மலைவேனோ
சீடனெனக்கருள் வீடுகொடுத்திடு
தேவ சபைக்கொரு துரைராணி
நாமக ணற்பொறி பூவிறை பொற்பத
நாரணி சற்குரு வடிவாவாய்
நான மணத்திடு பாரத னக்கொடி
நாத வொளிப்பர சுகவாழ்வே
தாம வடுக்குழல் யாமளை ரட்சகி
தாதையொ டொத்துந டனமாடும்
தாமரை மற்கய சீர்கல்ல லுற்றிடு
தாரணி நற்கனி யுமையாளே

---

23 தானதந்த தானதான தானதந்த தானதான
தானதந்த தானதான—தனதான

பாசபந்த மோகயூக மோசமொன்று மாதரோடு
பாயிருந்து மாரலீலை விளையாடு
பாவியுந்த னுகவால சேவைகண்டு காமுறாது
பாலசந்த ரூபமாக வருவாயே
வாசவன்க ராவை நூறு மால்முகந்த னுதிராம
மாதவன் றராசுபோலு மனஞான
வாய்மைகொண்ட வேணுகீத பாரளந்த சோதியாய
வானவன் சதாவிநோத னிளையாளே
பேசனந்த சூராரவி சோரவென்ற வேலனேனல்
பேணுகுன்ற மானைமேவு முருகேசன்
பீதிகொண்ட கீர்சோர்வு தீரவன்று மேருண்மூடு
பேர்கொள்மிண்டனோடு போர்செய் தவர்தாயே
பூசெரிந்து சோலைசூழு மாசுகங்க ளாடுகீழல்
பூதபந்தி மேவுகோவி லுடையாளே
பூசைமந்த்ர சாமவேத கானமங்க ளாதிமீறு
போதகல்லல் வாழும்வாலை யுமையாளே

24 தனனு தனத்த தனனு தனத்த
தனனு தனத்த—தனதான.

அடியார்கள் பத்தி யறிவே விருத்தி
யடைபோத புத்தி யருள்வாயேல்
அரிதான சித்தி சிவஞான முத்தி
அவிரோத குத்தி எளிதாமே
படிமீதெதிர்த்த வசுரோரை நைத்த
பழவேல் பிடித்த குமரேசர்
பரிவாய் நினைத்து மகிழ்வீர சத்தி
பரிபூர ணத்தி சகசோதி

கொடியோர் குலத்தை யறவே வதைக்க
வடிசூ லெடுத்து வருதாயே
குணமாய் நினைக்கு மவரோ டுயர்த்து
குருவாகி நிற்கு மொருதேவி
திடயோகி கட்கு மமுதே கொடுத்த
திருமாலை வெற்பு முலைமானே
திசையாவு மந்து கல்லல்மேவு சித்தர்
செபமே செய்சித்ர வுமையாளே.

25 தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த—தனதான.

வனசபத மேபணிந்து மதுரகவி யோதவின்று
வனமடவி யேகியுந்த னருளாலே
மனதுலய மாகியந்த வடிவுணிலை யாதிருந்து
மகிழுமழி யாதவின்ப நிலைசேர
எனதுமன தேயிருந்து மிரவுபக லாய்விளங்கு
மிரணபத வாலையென்று புரிவாயோ
இடிமுரசு கோடிபொங்க வடுமசுர சேனைமங்க
விளமுறு லோடுநின்று மலையாமல்
கனனிகர்கொள் வேலெறிந்து பலியிடு குமாரனன்று
கனியமணி மூடுகொங்கை யமுதீயும்
கருணைவடி வேயகண்ட சருவகுரு வேசிறந்த
கமுகுகழை வாழைதங்கு மயில்மோராய்
தனனதன தானவென்று வளிகள்மது பூவில்மொண்டு
தருவில்விளை யாடுகின்ற கல்லல்வாழ்வே
சனகிமண வாளனும்பர் தவமுனிவர் கூடிவந்து
தகைமைமிகு கோயில்கொண்ட வுமையாளே.

---

26 தானன தனனதான தானன தனனதான
தானன தனனதான—தனதான.

பாலூறு மிதழர்வாச வார்மூடு தனவிசேட
பாசாகு புயவிசால விழிமானர்
பாராத பலவிநோத சாரீர மயலில்வீசு
பாதார வழுகிலேசு மெழிலாலும்
மாலூறு மனவதீத மாபாவி யெனையதீத
வாலாநி னருளமோக சிவஞான
மாதாளை நினைமினீயெ னோர்நாளு முளதுவீர
மாகாளி யெனவுலாவு மெமதாயே
சேலூறு மதுரவாவி தேனூறு புடைகொணடு
சீரான மதுரைமீது முறைவான
தேவாதி முனிவர்கூடி யாவாவென் மனுவையோது
சீமூத மனவராகி பாகாளி
சாலூறு பணிலவாதி மேலூறு மளிகள்பாடு
தாதூறு நறவுகாவி னதிபோலார்
தாராரு வயல்கள்சூழு மோரான வணிகர்வீதி
சார்யோக கல்லலில்வாழு முமையாளே.

27 தத்தத் தனதன தத்தத் தனதன
தத்தத் தனதன—தனதான.

பட்டிட் டிடுமுலை வட்டிட் டணைவிலை
பட்டுத் திரிமட வியரோடு
பட்டப் பகலினு மிட்டத் தொடுபுணர்
பத்திக் கெடுதிக ளொழியாதோ
மட்டிற் பொலியலர் கட்டிக் கமழ்தொடை
வைத்துத் தொழுபவர் துணையாளே
வட்டத் திருமதி கொட்டற் புகமது
மக்கட் குதவிடு மலைமானே

பொட்டிட் டிடுநுதல் சுட்டிப் பிரபைகொள்
பொற்கொப் பணிமணி நகையாளே
புட்டத் தலைகயல் வெட்கத் திருவிழி
பொற்புற் றிடுபொறி துதிதாயே
முட்டத் தவசிக ளிட்டப் படிபல
முற்பட் டருள்புரி வரவாழ்வே
மூட்டற் றறமிடு மிக்கத் திரவிய
மொய்க்கக் கல்லலுரை யுமையாளே.

28 தனனத் தனதன தனனத் தனதன
தனனத் தனதன—தனதான.

கடலைச் செருவிழி மதுவைப் பகைமொழி
கலவிக் கொடியவ ரிடமாலாய்
கனிவுற் றணையிடை பலதுர்ச் செயல்புரி
கழுதைக் கொருகதி கிடையாதோ
அடலற் புதசிகி மலையுற் றெமதக
வலைவைத் தவிர்சுக மளிகாளி
அசுரக் குழுவன லெரியச் சினமொடு
மயில்விட் டமரரை மிகவாளும்
திடசற் குருபா ரடியர்க் கெளியவர்
சிமயத் தலைவரு மகிழ்தாயே
திரையுற் றவரொரு வரையுற் றிடுகர
திரவச் சுதர்புக ழிளையாளே
தடவெற் பினிலதி யலகைக் கிடைபல
தாரநர்த் தனமது மிடுசூரி
தருவிற் சிலகவி முகிலைப் பிழிபுனல்
தரையிற் கவிகல்ல லுமையாளே.

29 தானதன தானதனத் தானதன தானதனத்
தானதன தானதனத்—தனதான.

கோடிமதி போலுருவத் தோடுவரு ஞானமயக்
கோமள வாரகிபதப் புணையாகி
கூறுகவி ஞோர்கள்பதத் தாமரைதொ ழாதுமலர்க்
கூழையர்க ளோடுசிரித் தவரோடு
ஆடியணை கூடிரமித் தேதுமொரு வேளைபுசிப்
பாரடிய ரானவர்கட் களியாது
ஆசையதி காரவகைத் தோரணையை யேநினைவர்க்
கார்துணை கொலாவிவிடுத் தழிபோது
ஏடவிழ்வி சேடமலர்த் தாமமணி மாலைதரித்
தீகையொடு சூலமெடுத் துலவாயே
ஈசனொடு வீரநடச் சீர்கொடிரு வானவருட்
சேதனப ராபரிசத் திணிகாளி
ஓடையளி பாடமதுக் கூடுகளில் வாளைகுதித்
தோகையொடு தாவுநதிப் புனலோடும்
ஊருணி தடாகமலர்ச் சோலைபல சூழும்வனப்
போவிய விநோதகல்லற் குமையாளே.

30 தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன—தந்ததான.

ஓமகண்ட வாரகீ நமோ நம
ஓதிதங்கி யசோதீ நமோ நம
ஓர்பரம் பொருளானாய் நமோ நம வும்பர்தேடும்

ஓவியங்கொ ளநகாரீ நமோ நம
சீயசுந் தரவீரீ நமோ நம
ஓமிண் டர்விரோதீ நமோ நம கும்பநாதன்

தாமகிழ்ந் திடுநீலீ நமோ நம
தாமசெஞ் சடைமாரீ நமோ நம
சாதுசங்க சமூகி நமோ நம சம்புவோடு

தாணடம் புரிகாளீ நமோ நம
மால்விளம் பிளேமானே நமோ நம
சாலமெகம் பிரசூலீ நமோ நம செம்பொனூரும்

பூமனுந் தொழுசூரீ நமோ நம
மாசிதம் பரஞானீ நமோ நம
போதகந் தருதேவீ நமோ நம வும்பலான

பூரணன் றிகழ்வாலாய் நமோ நம
பேசுகின் றபிராமீ நமோ நம
பூசிடுஞ் சிவகாமீ நமோ நம என்றுபாடும்

மாமை தங்கிய யோகி மகான்களி
னூடிருந் தறிவாவாய் மனோன் மணி
வாசமங்கள ரூபீ குலாசல மங்கையான

வாரணிந்திடு மார்பாய் விண் மாதர்கள்
கூட நின்று குலாவோ மகேசுரி
மாமிருங் கல்லல் மேல்பாலில் வாழ்கனி அம்பிகாவே.

கல்லல் ஸ்ரீ நற்கனியம்மன் சந்தவிருத்தமாலை

முற்றும் சுபம்.

---



உ

சிவமயம்.

## கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 3 கட்டளைக்கலிப்பா மாலை.

புவனமெங்குந் தழைத்தொரு பூங்கொடி
பூத்துக்காய்த்துப் பழுத்துநின் றோங்கவே
கவனமுற்றறி யென்றருள் காட்சியின்
கருத்தையேழை யுரைத்திடற் பாலதோ
தவனமுன்றடை யாதெனைத் தன்னுளே
தழுவியாளுந் தயாபர வஸ்துவே
எவனவாலை மனோன்மணி கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 1

வாழையின்கனி தேன்பிசைந் தூட்டலாம்
வாந்திபண்ணினா லென்செய்ய லாமுகம்
தாழநின்று தடவிக் கொடுக்கலாம்
தனதுசேயைத் தந்தாய்பெற் றெடுப்பளோ
பேழையென்றும் பிழைப்பென்றும் பேணியுன்
பெருமையைத் தெரியாமற் பிதற்றினேன்
ஏழையென்முகம் பார்த்தருள் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 2

சிந்துதேந்தொடை செம்மலை யாறுபோற்
றிரள்புயாசல மீது புரண்டிட
விந்தைசேர்மணி வெண்டயம் பாடவே
வெயிலிடுந்துகில் மேனியில் மின்னவே
சந்தனம்புனு கெங்குங் கமழவே
சந்திரப் பிரகாச சவுந்தரி

எந்தனுட்குடி கொண்டவள் கல்லலி
    லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 3

பாடிப்பாடிப் பரவச மாகியுன்
    பாதபங்கய மோதிப் புகழ்ந்திடா
தாடிச்சோடித் தலைமட வாரிட
    மணுகிநோயொ டவதிப் படுவனோ
கோடி கோடியாய்க் கூடிமகான்களுங்
    கும்பிடுஞ்சிவ சம்ப்ரம நாயகி
ஈடிலாதுல கேபுகழ் கல்லலி
    லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 4

பொன்னுமோடுமொன் றென்ன நினைப்பதுன்
    போதகப்பத மோதுணர் வற்றலை
சின்னயானுந் தெரிந்திடுந் தன்மையோ
    சிவசமயத் திலக சிந்தாமணி
கன்னல்பூகங் கழைவளர்ந் திந்தினைக்
    காகமென்று கரைந்திடத் தேய்த்தெழுந்
தின்னலற்றிசைந் தாடிடுங் கல்லலி
    லெம்மையாளுமை நற்கனி யம்மையே 5

நிட்டைவிட்டிழி நீணிலத் தல்லலா
    னினையெனாத நிட்டூரரைப் பாடியே
பட்டபாடெலாம் போது மெனக்கினிப்
    பரமஞான பதாம்புயந் தந்தருள்
வட்டமாமணி மார்பினை யாருடன்
    மாலைமேகலை வாகை துலங்கவே
இட்டமாதவர் கிட்டவாழ் கல்லலி
    லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 6

அரகராசிவ சங்கரா வென்றுநீ
    றணியுமும்பா வைக்கும ராசியென்

றுரகபூசணி யுன்னைவந் தண்டியு
முலகமால்கொண் டொருவர்பின் செல்வனே
காகமூறுங் கயக்கறை தத்தலை
கட்டிமுத்தங் கதிர்ப்பரி மேலெறிந்
திரவைபும்பக லாக்கிடுங் கல்லவி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே 7

நித்தமுன்னை நினைந்துளம் நைந்தலர்
நின்றுதூவி நிவாத விளக்கெனச்
சுத்தசின்மய மாகிச் சுகம்பெறத்
துரைச்சியென்றருள் வாயோ வறிந்திலேன்
சத்தசாகரஞ் சூழுல கெங்ஙனுந்
தருமஞாய தயாபரி யென்றழைத்
தெத்தபோதன ரும்பணி கல்லவி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே 8

அன்பிலேனுன் னருட்பத மோம்பிலே
னடியவர்க்கடி யானென நிற்கிலேன்
நின்புகழ்ச்சி நிதம்நிதம் பாடிலே
நெறியிலேனென் றறிபுந் தாமிலேன்
என்புகல்வ னெவரிடஞ் செல்லுவே
னேழையாள னுன்றனை யடைந்தன
னின்புவந்தரு ளீஸ்வரி கல்லவி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 9

சீதபங்கய பாத சதங்கையுஞ்
சிற்றிடைத்துகில் பட்டிகை கைமலர்ப்
போதுறுஞ்சரி யாழி மணிவடம்
பொலிபதைக்கம கரிமுக் குத்தியும்
காதின்தோடுகன் னப்பூகொப் பாடகக்
கழுமுழ்வச்ர கிரீடம்பல் சோதிவீ

சேதமற்ற விளம்பிள்ளை கல்லவி
 லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 10

உலகமேழும் பெருதுபெற் றேங்குமுன்
 னுபயபாத மபயமென் றோதினே
னலகிலாவரு ளானந்த மீந்தென
 தல்லலோய்வறு மைத்துயர் தீர்த்தருள்
கலகலென்று கழற்சிலம் பாடவே
 கனவரைநெருக் கென்னவே தாவிநின்
றிலகுமாமிசை யேறிடுங் கல்லவி
 லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 11

பாலுந்தேனும் பழமும் பணிமொழிப்
 பவளவாய்க்கருங் கண்மட வார்தரு
மாலுந்தீர வகைதெரி யாதயென்
 மனதிலாசை வராதுவந் தாண்டருள்
சேலும்வாளையுந் தென்னையிற் பாய்ந்திட
 சீறிவானரம் வான்றருத் தாவிடு
மேலமுறும் புனல்வரு கல்லவி
 லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 12

காடுமேடுங் கடந்தலேந் தேன்பல
 காலமுன்னையே காணக் கிடைக்கிலே
னீடுமூழ்வலி யென்றலேந் தேனுனை
 நேரிற்கண்டபின் பேரின்ப மெய்தினேன்
பாடுங்கோகில மாடுஞ் சிகிகளும்
 பணிலம்போனகம் பச்சைக் கிளிகளும்
எடுங்கொண்ட மலர்கடோய் கல்லவி
 லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 13

வஞ்சலோப மனிதரைத் தேடியே
மனைகடோறு மனந்தளர்ந் தேங்கினின்
றஞ்சியாரொரு வித்துவா னென்றுவீ
ணருங்கவிசொற்ற றற்றிடா தாண்டருள்
கஞ்சமாமலர் நஞ்சையிற் போனகக்
கால்படப்புரி சூலுகுத் தோவிய
இஞ்சிமீதுசென் றூர்த்தொளிர் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 14

அன்னைதந்தை யனைவரும் நீயென
வருணபாதத் தடைக்கலங் கொண்டனன்
உன்னையன்றித் துணையெனக் கொன்றுமின்
றுருகியாயெம துள்ளக் களிப்பருள்
பொன்னையொத்த புணர்முலைப் பூவையர்
புன்னகைக்குப் புதுமணி நான்றதென்
றின்னிலஞ்சொலக் கோர்த்தணி கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 15

திருவுஞ்சீருஞ் சிறந்து விளங்குமா
திவ்யபாத தெரிசனஞ் செய்திட
குருவுந்தாயும்நீ யென்றியான் கும்பிடக்
குறைவிலாதிரை வானது வந்தருள்
தருவசைந்திட மேகங் கலங்கியே
சளசளவென வேமழை பெய்திடும்
இருமகத்துவ முற்றுறை கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 16

கண்டுகண்டு மனத்துற வெய்திடாக்
கடையனேனினிக் காலபே தங்கடந்
தண்டர்தேவருங் காண்டற் கரிதெனு
மருண்மடைதிறந் தானந்தங் கொள்வனோ

பண்டமாமலை போனேற் குவிக்ளே
பரவிடுங்களத் தோர மணித்திரள்
எண்டிசைக்கு மிலங்குறுங் கல்லவி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 17

இன்பமுண்டென் றிகத்தினி னைத்துவிம்
மிளமுலைக்கனி வாய்க்கருங் கண்ணினார்
பின்பலைந்துநீ பெற்றபே றென்கொலோ
பேதைநெஞ்சமே பேணினுங் காணினும்
அன்பதாக்கினும் பாடினுங் கேட்கினு
மருளமுதளித் தானந்த மூட்டுவா
னென்பதேனறிந் தாயிலை கல்லவி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 18

அம்பைவான்விடுத் தம்பாத் தைச்செருத்
தம்பிலேகய லைச்சிறை வைத்திடு
மம்பகத்திய ரம்பக வின்பமீண்
டலவன்கூலென் றறிந்திலன் பாவியே
னம்புமாறுநின் ஞானவி னோதகா
ணணுகுயூக நனவுந்கந் தாதரி
எம்பெருங்குல தெய்வமே கல்லவி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே 19

கத்திக்கத்திக் கரைந்துளந் தொண்டையுங்
கட்டிக்கட்டிப் படுங்கட்டங் கண்டுநீ
தித்திக்குஞ்செழும் பூமணச் சேவடி
தெரிசிவாயெனச் செப்பிலை யென்செய்வேன்
முத்திக்குஞ்சர்வ சித்திக்கும் வித்தென
முளைத்துழுவுல கும்படர் பொற்கொடி
எத்திக்குந்தொழு தேத்திடுங் கல்லவி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 20

நீரின்மேற்பொறி நேரெனத் தோன்றுமின்
நிலத்தியாரை நிசமென நம்பியே
கோரிநின்று குலாவுவ னையகோ
கோடிகும்பிடு போடுவ னுண்டருள்
சீரினிற்றிகழ் பிள்ளைகள் ரத்தினத்
தினிசிறைற்றெரு விற்சிற்றில் கட்டியா
டேரிசூழ்தருத் தாரிறை கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே.. 21

நித்தம்நித்தம் வயிற்றின் கொடுமையால்
நெறியிலாரைத் தரும துரையென்றும்
சுத்தமூடரைக் கன்னுபின் னுயென்றும்
சூம்பற்றோளரை யோங்கற் புயாவென்றும்
சித்திரக்கவி பற்பல செப்பியுந்
திரிதல்வெட்கமன் றோமன மேநினை
எத்திக்கு முதவுவாள் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே 22

காலைமாலைபு மாலைகொண் டேற்றியே
காங்குவித்திரு கட்புனல் பாயவே
ஆலயந்தனி லேவலம் வந்துநின்
றம்மவம்மவென் றுடியும் பாடிடும்
வேலைதந்திடில் வேலையும் வேண்டுமோ
வியனுலகிற் பெறுவது வேறென்னை
ஏலவாசத் துவரிதழ்க் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 23

உண்டுடுத்துறங் கிப்பல காலுப்பீ
ணுலகமாயை யளற்றிற் புரண்டெண்ணிற்
பெண்டுகட்கிதம் பேசிக் கைவீசியே
பெருமைகாட்டித் திரிந்ததல் லாமலுன்

தண்டைசூழ்பதத் தாமரை யோதிலேன்
தமியனேன்பிழை தள்ளியாட் கொள்ளுவாய்
எண்டனெய்யென் றிருந்தருள் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 24

கற்றதன்றியான் கற்றதி லொன்றினைக்
கடைப்பிடித்தொழு கும்படி கற்றிலேன்
வெற்றனுயிவன் வீணிற் றிரிந்துழல்
வினைகடேர்த்தொரு மேன்மை யளித்தருள்
பெற்றதாயென நின்னைவந் தண்டினேன்
பேசுவாய்மலை பெற்ற பிராட்டியே
இற்றெனப் பவிசேரிடுங் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே 25

பத்தரைச்செருத் தேன்பல பாவையர்
பாலிணங்கிணை ஞலையம் செல்கிலே
னத்தனுகப்பொய் மெய்யு மியம்பினே
னெளியசீவர்கட் கிம்சையுஞ் செய்துளேன்
இத்தனைகொடும் பாவமுந் தீரவுன்
னிரணசந்நிதி முன்வந் திறைஞ்சினேன்
எத்தனித்தினிக் காத்தருள் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 26

உருகிலேனொரு நாளுமுன் பாடல்கண்
டுலகநாயகி யோமகா தேவியென்
றருகிலேமறந் தானந்தக் கூத்துக
ளாடிலேன்மலர் சூடிலேன் ஞானப்பால்
பருகிலேன்பர மானந்த வஸ்துவிற்
பழகிலே னெற்கழகிது வாகுமோ
இருகிலேச மருத்தருள் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 27

நல்லவர்க் குதவார்கடை நாயினும்
நாயினேன் பெரியார் மாபிற்பிறந்
தில்லையில்லையென் றேற்பவை ஞானிபோ
லெதிரிற்றள்ளு மிரக்கமில் லாதவன்
புல்லவெட்கமென் சொல்வதென் வல்வினை
போதும்போது மினிப்பொறே னுதரி
எல்லையற்ருெளிர் பேரின்பக் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 28

பாடுபட்டுப் பலபல தேடியுன்
பழையதொண்டர் பதந்தொழுந் தொண்டரை
தேடியிட்ட முடன்பணிந் தாவலாய்த்
திருவமுதளித் தன்புட னின்றிடா
தாடுமத்தக மொத்த தனத்திய
ஏழகினுக்கிழ கன்பனுக் கின்புதா
ஏடவிழ்த்த மலர்ப்பொழிற் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 29

அந்தகன்வந் தழைக்கு முனைந்த
அறிவையானறிந் தம்பா மாகிட
இந்தவேளை யெழுந்தரு ளித்திரு
விணைமலர்ப்பத மிந்தாவென் றீந்தருள்
கந்தமாகடம் பாரம சோகுமா
கமுகுசண்பகக் காவளர்ந் தோங்கியே
இந்த்ரலோகமட் டேகிடுங் கல்லலி
லெம்மையாளுமை நற்கனி யம்மையே. 30

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

கட்டளைக்கலிப்பா மாலை

முற்றும் சுபம்.






உ

சிவமயம்.

## கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

## 3 சட்பஞ்சக மாலை.



### நடுவெழுத்தலங்கார மாலை.

பன்னிருசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

அழகுநெஞ்ச மொருபுரவி யமர்நட்சத்
திரமொன்றோ ரவிழ்தம் வேள்வி
அறுபதத்தி னடுப்படிநீ யமைவாயே
லடியேற்கோ ரலக்க ணுண்டோ
பழகுமறு விருமொழியே குழலாகிப்
பசர்வதா யுக்க மாகிப்
பரிகலனுய்ச் சாயலதாய் பரிந்திருப்ப
தாகவளர் பரமா னந்தி
குழசனுளங் குளிரமிழ்தங் கொடுத்துதவிக்
குறுநகைகொண் டுறரீங் காரி
குமரிபக வதிகவுரி விமலிபரி
புரசரணி குணவோங் காரி
தெளிகருணை வளருனது திருவருளை
விரைவிலருள் சிறப்பார் கல்லல்
செழித்தமர்நற் கனிக்கிளியே திழைத்தமணி
விளக்கொளியே தேவர் வாழ்வே.

ஒருவிரத மொருமாது வோரின்ப
மொருநோயோர் சேயன் தாயார்
உறவுறுமிவ் வறுபதத்தி னடுவெழுத்தா
றெனக்குதவு முடன்சே ரோசா
திருவெழுத்தை விரித்துமுதித் தாளுமிசைப்
பாளும்நிற்க வெடுத்தேற் றுண்டு

மிருமையுவந் திருப்பவரும் பயில்வானு
மிதயமகி ழிரண சூலி
மருவுசெய்ப் புனெற்பயிர்போ னெற்பயிர்கள்
வாழையென வாலழ யாவும்
மலர்ந்துதென்னை போனெருங்கத் தென்னையெல்லாம்
வான்பதிமேல் வளர்ந்து மோங்கு
திருவளருங் கல்லலிற்பூந் தேன்றெளிக்கும்
பொழினீழற் றிருந்து கோயில்
செழித்தமர்நற் கனிக்கிளியே திழைத்தமணி
விளக்கொளியே தேவர் வாழ்வே. 2

தருவதிலொன் றுருவஞ்சங் கொடியொன்று
பெண்காற்று பார மென்றுந்
தறுகுறுமிவ் வறுபத்தி னடுவெழுத்தா
றென்றுயான் தவிரா தியீ
ருருவெழுத்தா லினிதிருந்து மருந்தியுமேற்
றொருகாங்கொண் டுவந்தே பூண்டு
உலவுநில வுடைத்தலைமே லகிபுனனின்
றொளிரமன்று டொருவர் பேண
குருவெனமுன் னருளியவென் குருமூர்த்தி
யறுமுகனார் கொடுஞ்சூர்ப் போரிற்
குரித்துவக்கு மயில்வடிவாய்க் குமுதமலர்க்
கரம்வளர்ந்த குமரித் தாயே
திருவிமலி யவிராலி யெனநினைவார்
சிந்தைகுடி கொளுஞ்சீர்க் கல்லல்
செழித்தமர்நற் கனிக்கிளியே திழைத்தமணி
விளக்கொளியே தேவர் வாழ்வே. 3

இலக்கணத்தி னொருமொழியோ ரீகைபாட்
டக்கினியிங் கொருகா வாகும்
மிரசிதமிவ் வறுபதத்தி னடுவெனக்கென்
றீவா யோவீர் பாலாறுய்த்

துலக்கெழுத்தைச் சுதனுக்கித் துளிர்காங்கொண்
டருச்சுனர்க்குச் சொல்லிப் போரில்
துணைத்திகரி யால்விளைத்து முண்ணரக்கர்
துடிப்பகற்றி தோய்வான் மாசு
கலக்கமறு விதயமலர்ப் பொருட்டுறைவாள்
கவினுறுமா வனங்க டோறும்
கதலியிளங் கமுகிளநீர் கரும்பாரந்
தோரணங்கள் கமழ நின்பாத்
திலத்துணையு மருப்படியா வடியாருஞ்
செரிந்திசைக்குஞ் சிறப்பார் கல்லல்
செழித்தமர்நற் கனிக்கிளியே திழைத்தமணி
விளக்கொளியே தேவர் வாழ்வே. 4

மனமயங்காப் புலவிவட்டம் வேள்விருது
நீர்ப்பொறிபா னியைமா வாறு
மருவுமித னடுவெழுத்தா றெனக்களித்தாற்
கவிமழையான் வளங்கி டேனே
தனியிருப்பா னன்னுதலுஞ் சாயலுங்கண்
ணும்படைத்தாய் தாசர் வீழாத்
தவமுதவித் தரித்தன்பா யெனவேசொல்
தயாநிதியே சருவ சாட்சி
எனதுகுல தெய்வமதா யென்னுளு
மிருந்தருளெம் மின்பே யன்பே
எனதறிவே எனதுறவே எனதுயிரே
எதுரைச்சி யெம்பி ராட்டி
சினமகந்தை சிதையடியார் தேட்டமதைத்
தெரிந்தளிக்குந் திருவே கல்லல்
செழித்தமர்நற் கனிக்கிளியே திழைத்தமணி
விளக்கொளியே தேவர் வாழ்வே. 5

---

எழுசீர்.

திருத்தகு மடியார் சேவடிக் கமலந்
தினந்தொழுஞ் செல்வமெற் களித்தாற்
பெருத்தவா னுலகும் பேசிடும் பெருமைப்
பேரின்ப வீடுவாய்த் திடுமே
கருத்தலர் புனையு மோதியுங் கமலக்
கையுஞ்செஞ் சிலம்புமை விழியும்
சிரித்திடு மழகுஞ் சிறந்துபொற் கொடிபோற்
றிகழ்கல்லல் நற்கனி யுமையே. 6

விண்பறந் திடங்கொள் விருத்தியூ டிருத்தி
விரைமலர்த் தண்டையந் தாளைப்
பண்பகர்ந் தியங்கள் பலர்சொரிந் தறிவாம்
பாக்கியம் பெறுநன்னா ளேவா
சண்பகங் கடம்பு கோங்கடர்ந் துலகிற்
றண்ணிழ லாற்றிவண் டினங்கண்
டுண்பதற் கினிய மதுவுந்தந் துதவு
முயற்கல்லல் நற்கனி யுமையே. 7

அன்னையே யடியேன் படுமிடிப் பிணித்துன்
பறிந்திலாய் போலும் பல்காலு
முன்னையே பணிந்து முலகில்வே றூர்மாட்
டுரைத்துளந் திருத்திகொள் வதுவே
மின்னையே யனையநு சுப்பில்வேண் டுகிலு
மிளிர்நவ மணியின்பட் டிகையும்
பொன்னையே யனமெய்ப் பூடணப் புதனும்
பொலிகல்லல் நற்கனி யுமையே. 8

கெஞ்சிவே றெமக்கோர் கெதியிலை யெனநின்
கிணைபொற் சரண்சர ணெனவும்

நெஞ்சிலே பலகா னினைப்பதல் லாலின்
னீணிலத் தென்செயக் கடவேன்
மஞ்சிலே செழித்த மலர்முடிக் கருணை
வாரிச விழிக்கருங் குயிலே
அஞ்சிலே யிரண்டு பழுதிலை யெனமுன்
னருள்கல்லல் நற்கனி யுமையே. 9

சேல்விழிப் பவளச் செவ்விதழ்க் கமலத்
திருமுகந் திரும்பிப்பார்த் தெனக்குண்
மால்வினை கொடுநோய் வாதைதீர்த் தருள
மனமுனக் கினமிரங் கலையோ
நூல்வழி யொழுகுந் தொண்டர்க டொடுக்கும்
நூதன கவிக்கிசை பரிசாய்ப்
பால்வழி மணத்தாட் பாசுகங் கொடுக்கும்
பணைக்கல்லல் நற்கனி யுமையே 10

---

அறுசீர்.

தேன்குதித்திடும் செழுமலர்க்கான் றிழைத்தவளி திரைவயலின்
கமல வூசல்
வான்குதிக்குங் கயல்கிடப்பத் தாலாட்டு வளநாட்டுங்
கல்லல் வாழ்வே
மீன்குதிக்கும் விழிக்கரும்பே மெஞ்ஞான நற்கனியே
மெலிந்து யானும்
நான்குதிக்கு மலைந்தலுத்தே னினிப்பொறே னுனையல்லா
லண்பொன் றில்லேன் 11

வான்பரவு முனதுதிரு வழகொழுகு மலர்த்தாளை
வணங்கி வாழ்த்தி
மான்பாவு வரிக்கருங்கண் வரம்பெருவான் விரும்பினனென்
வருத்தந் தீர்த்து

மூன்பரவுந் தறுகணேயொ ளித்தருளு மும்பரெலா
முவந்தார் கல்லல்
தான்பரவுஞ் சற்குணவிற் பனர்சாற்றும் நற்கனியாந்
தகையி னாளே. 12

இனிக்குமண மலரெடுத்து மிருபாதம் பூசைசெய்யு
மிதயத் தேர்க்கு
நினைக்கும்வரங் கொடுத்தருளும் நின்மலா தீதவின்ப
நிலைவாழ் பொன்னே
எனக்குதவுங் குருமணியே யேகபரா பரப்பொருளே
எழிலார் கல்லல்
தனக்குகந்த சுகப்பிழம்பே தவத்தவர்க்கோர் நற்கனியாந்
தருமத் தாயே 13

நடையழகு முடையழகும் நாகமணிச் சிலம்பழகும்
நவவி ரத்னத்
தொடையழகுந் துலங்குவிழிக் கடையழகுஞ் சடையழகுந்
தூய முத்துக்
குடையழகு மிடையழகுங் கொடையழகும் விடையழகுங்
குரித்த சூலப்
படையழகு மேழைசொல்லப் படுவதோ நற்கனியாம்
பரம தாயே. 14

அனைத்துயிர்க்குந் தாய்நின் றகிலமெலாங் காத்தருளு
மரசி நின்று
ணினைத்திருந்து நிருவிகற்ப நிட்டையிலே மனமோய்ந்து
நிறையப் பெற்று
லெனைத்தெரிவே னினிப்பிறவே னிலையெனின்யா னேதுசெ
னிமையோர் போற்றும் (ய்வே
பனைத்திரட்காஞ் சுரைவனத்திற் பரிந்திருக்கும் நற்கனியாம்
பரம தாயே. 15

## சந்தம்.

வந்துவந்து வரந்தருஞ்சுர மாதருக்கொரு தலைவியே
சிந்தைநைந்து தினந்தொழுந்தவ சேயருக்கரு ணிலவியே
மந்திரம்பல வுந்தெரிந்திடு வாலையுத்தமி பழகியே
சிந்துரந்தரு மெந்தனன்புறு தேவிநற்கனி யழகியே. 16

பாதபத்தும மோதுபத்தர்கள் பாதகத்துயர் தீரவே
சோதிமெத்தறி வாயுதித்திடு தூயசித்த பராபரி
மாதவத்திரு வானலட்சுமி வாழிசெப்பு மனோன்மணி
பூதரத்துரை ராஜர்பெற்றதோர் போதநற்கனி யீஸ்வரி. 17

அருணசெங்கய னயனமங்கள வலைநெடுங்கடல் வேணியே
கருணைபொங்கிய கனகபங்கய சரணகங்கண பாணியே
தருணமங்கலை யெனவருங்கன சமுகசுந்தர வாணியே
வருணசந்திர வதனபைங்கொடி வருகநற்கனி ராணியே. 18

ஆதிசோதி யனாதியான வகண்டவற்புத லீலையே
மாதியான மகானுபாவர் வணங்குசிற்பர வேலையே
கோதிலாத குபேரனோடு குவிந்தகற்பக சோலையே
போதிலேகட மாடுமீசர் புகழ்ந்தநற்கனி வாலையே. 19

அறிவினுக்கறி வாய்விளங்கிடு மமலசிற்சபை மருவியே
பொறிபுலத்தமை யாதிலங்கிடு புவனைதற்பரை யரூபியே
மறிகடற்புன னேரிசைஞ்சுவர் மனதுறக்குளி ரமுதமே
குறியெனத்தரு கோமளந்திகழ் குமரிநற்கனி யரசியே. 20

## கலிவிருத்தம்.

நினைவதற்கரி தாகி நிறைந்தொரு
வினைவினுக்கறி வாய்விளைந் தேவரும்
தனைவழுத்திடத் தாலத் திருந்தது
நனைமலர்க்கொடி நற்கனி பாதமே. 21

அறிவினுக்கறி வாகத் திழைத்தது
அறவினைக்கமை வாய்வந் துளைத்தது

துறவிகட்கருட் சோதி தழைத்தது
நறவினிற்றிகழ் நற்கனி பாதமே. 22

அன்பருள்ளத் தருணடங் கொண்டது
இன்பவெள்ளத் திருந்தருள் விண்டது
என்பணிபெற் றெனதகங் கண்டது
நன்பரானந்த நற்கனி பாதமே. 23

பாடெனப்பரி வாய்வரந் தந்தது
வீடெனுங்குரு வித்தை தெரிந்தது
தேடெனுந்திரி லோகமும் வந்தது
நாடெதும்புகழ் நற்கனு பாதமே. 24

அண்டினோருக் கறிவைக் கொடுத்தது
அண்டர்தேவ ரனேக ரடுத்தது
தொண்டர்பாவத் துயரைக் கெடுத்தது
நண்டுலாகல்ல னற்கனி பாதமே. 25

---

## பின்மடக்கு வெண்பா.

வாராத செல்வமெலாம் வந்தே கொடுத்தருளும்
நாராயணர்க் கிளைய நற்கனியே—நேராய்
முனியா முனியாரு முத்திபெறு முன்போ
னியா ரினியா ரெமக்கு 26

எல்லோர்க்குந் தாயா யிகபரமுங் கொண்டாட
நல்லோ ருளத்திருக்கும் நற்கனியே—வல்லாய்
குருவாய்க் குருவாய்வாழ் கொம்பனையே வில்வத்
தருவாய் தருவாய் தவம். 27

மாணிக்க முத்து மாகதமும் போல்பவளே
நாணிக் கமைமலர்க்கை நற்கனியே—பூணவுண்ணப்
போதமது போதமது பொற்பதுவே யென்பாய்பார்
பாதமது பாதமது பாவ. 28

பச்சை வடிவாய் பவளத் திருவாயாய்
நச்சரவும் பூணுதி நற்கனியே—மெச்சிக்
குவியுங் குவியுங் குருவடிவாய்த் தந்தாள்
கவியுங் கவியுங் கருத்து. 29

சிந்தா மணியே சிவமணியென் கண்மணியே
நந்தா மணியேவாழ் நற்கனியே—வந்தா
னடியே னடியேனே வம்மம்மா வென்றே
படியேன் படியேனே பார். 30

கல்லல்

ஸ்ரீ நற்கனி அம்மன் சட்பஞ்சகமாலை

முற்றும் சுபம்.

---



உ

சிவமயம்.

## கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 4. ஆனந்தக்களிப்பு மாலை.



பல்லவி.

நற்கனி அம்பிகைத் தாயே—உன்னை
நம்பினே னன்பனென் துன்பந்தீர்ப்பாயே (நற்)

அநுபல்லவி

1 ஞானிக ளும்புகழ் நீதி-நிறை
நல்லதோர் கல்லன டனவிநோதி
ஏனின்னந் தாமத மோதி-தா
இப்போதெ ழுந்தரு ளற்புதசோதி (நற்)

2 இரத்னகி ரீடாலங் காரி-எங்கும்
மில்லா நவமணிப் பல்லக்கொய்யாரி
சுரத்தசிங் காசன மேறி-யும்பர்
துதித்திடத் திருக்கொலு விருக்குஞ்சிங்காரி (நற்)

3 முத்துமூக் குத்தியு மின்ன-வைர
மோகன மாலைகள் தோளிலேபின்ன
கைத்தொடி காப்பொளி மன்ன—வாவா
காலிற்சிலம்பு கலகல வென்ன (நற்)

4 சின்னஞ் சிறுவய தாளே-தங்கச்
சேலை புனைந்திடு வாலையாத்தாளே
என்னையாள் வந்தந நாளே-நித்தம்
எண்ணியெண் ணிப்பூசை பண்ணினேன்தாளே (நற்)

5 இன்னம் பாராமுக மேனோ-மன
மில்லையோ துன்பமின் னம்பொறுப்பேனோ
அன்னமோ மானோசெந் தேனோ-என்னு
மழகுடை யாயென்னை யாள்வதோர்வானோ (நற்)

6 நம்பினே னன்புடன் பாராய்-தேவர்
நாடிடும் பூமலர்ச் சேவடிதாராய்
அம்பிகா வன்புடன் வாராய்-எனக்
காறுதல் சொல்லியோர் தேறுதல்கூறாய் (நற்)

7 சந்திர காந்தப்ர காசி-எந்தன்
சங்கடந் தீர்க்குஞ் சமர்த்திவிசேசி
சுந்தர பாதத்தைப் பூசி-என்று
சொல்லிக் கொடுக்குந் துரைச்சியேநேசி (நற்)

8 புன்னகை கொண்டுறும் பொன்னே-பல
பூடணம் பூண்டொளிர் பூருவமின்னே
அன்ன நடையுடை யன்னே என்னை
ஆதரியாம லிருப்பது மென்னே (நற்)

9 பாழும்வி யாதிக ளாலே-படும்
பாடெலாம் பார்த்தும் பாராதவள்போலே
ஏழனஞ் செய்யாதே வாலே-வுனக்
கித்தனை கோபமே னேழையென்மேலே (நற்)

10 பாம்பின்வாய்த் தேரையைப் போலும்-நித்தம்
பட்டபா டெண்ணிற் பதறுமென்மேலும்
வீம்புசெய் யாதருட் பாலும்-தந்து
வெண்ணீறி யாயேல்வி டேனுந்தன்காலும் (நற்)

11 ஏழைக்கி ரங்கிடு மாதா-தொண்ட
னித்தனை நாட்பட்ட இம்சைபோதாதா
வாழ வழிசொல்ல வாதா-பரி
மளபதந் தருவது கிழவனும்போதா (நற்)

12 இன்னும்நா னென்சொல்வே னம்மா-பிச்சை
எடுக்கினும் பூமியோ ரேதேனுந்தம்மால்
உன்னிய தீவரே எம்மா-லிதை
உரைக்கவும் வேண்டுமோ சிரிக்காதேசும்மா (நற்)

13 பரிவில்லாப் பாதகர் மீது-பாடிப்
பல்லினைக் காட்டிப் பரதவியர்து
தெருவில்நின் றிரந்திடுஞ் சாது—சங்கத்
திலகமா யுலாவிடுந் தேவிவந்தோது (நற்)

14 பெண்டுபிள் ளைகளென்ற பாசம்-எல்லாம்
பேசுமெமன் வந்தால் பெரியவாபாசம்
உண்டுடுத் துறங்கிவீண் மோசம்-போகா
திரைத்தால் மறப்பேனோ வுன்விசுவாசம். (நற்)

15 நீரிற் குமிழியா மாக்கை-இதில்
நிகழ்த்த முடியுமோ நேரிடுஞ்சீக்கை
பாரில் நினையாமற் சோக்கை-காட்டி
பல்லைத் திறக்காமற் சொல்லொருவாக்கை (நற்)

16 பட்டுபீ தாம்பரங் கட்டி-நல்ல
பாவையர் மெச்சப் பகட்டிச்சிமிட்டி
மட்டிகள் கூட்டத்தைக் கிட்டி-உன்னை
மறந்துபோ காதுநீ வாவென்னவட்டி (நற்)

17 ஒன்பது வாசற்பொய்க் கூடு-இதை
ஒழுகாமல் வைக்கப்போ காதோவோர்வீடு
பின்னும் விரும்புமென் கேடு-கெட்ட
பேதமைக் கென்செய்வேன் பேசுமென்னோடு (நற்)

18 தசையென்பு தோலிலாம் பொம்மை-என்று
தானேயறிந்தாலு மானுர்க டம்மை
நிசமென நம்புமென் செம்மை-கெட்ட
நினைவையென் செய்குவே நீயேசொல்லம்மை (நற்)

19 ஆடியோ டிச்சீமை யெங்கும்-திரிந்
தலைந்துபொன் தேடி யழகாய்விளங்கும்
மாடமா ளிகைகட்டித் தங்கும்-செல்வம்
மசகமன் றேவுந்தன் நிசவருள்பொங்கும் (நற்)

20 சொத்துக் கெமனஞ்சு வானோ-இந்தச்
சூதறி யாமலே வாதிப்பதேனோ
தத்துங் குளத்தெட்டிக் கானோ-டுற்ற
சந்நிதி வந்துனைத் தான்துதிப்பேனோ (நற்)

21 ஏக பராபர மாதா-எனக்
கேதேனு மோர்கதி யோதத்தகாதா
காகரு ணாகர மேதா-விகள்
கண்டதைக் காணக் கருத்தெற்குப்போதா (நற்)

22 பிரமம் பிரமமென் றுன்னி-யுன்னிப்
பேசுவ தன்றிப் பிறழாதுதன்னில்
கிரமமாய்க் கண்டிலேன் மன்னி-யெனைக்
கிருதார்த்த னாக்குதாள் கிரகித்தேன்சென்னி (நற்)

23 அன்னை வயிற்றிலுந் துக்கம்-பிறந்
தாடியோ டிப்பெண்ணுக் கலைவதோவெட்கம்
பின்னும்நோய் செய்வதோ தர்க்கம்-இந்தப்
பெருந்துயர் போலத்தானிருந்திடுஞ் சொர்க்கம் (நற்)

24 மஞ்சளைப் பூசியே மாலை-நேரம்
மல்லிகை முல்லை மகிழம்புமாலை
கொஞ்ச நடந்தலர்ச் சோலை-வருங்
கோதையர்க் காளாகி டாதருள்வேலை (நற்)

25 பத்தினி யுத்தமி யென்றே-வுந்தன்
பாதப்போ துற்றுப் பணிந்தன னின்றே
சத்திய வாழ்வெனு மொன்றே-தாச்
சலசலென் றேடிவா தருணமீதின்றே (நற்)

26 கையிற் செபமாலை கொண்டு-இரு
கண்மூடிக் கைக்காசு பைக்காசுபெண்டு
வைத்ததெண் ணிடிண்டு டிண்டு-என்று
மணியடித் தாலருள் வருவதெங்குண்டு (நற்)

27 வினவிடுங் கூழுக்கு மாசை-கொண்ட
மீசைக்கு யாசைபோல் விருத்திப்பசாசை
மனதை யடக்கிடாப் பூசை-கோடி
வருடஞ்செய் தாலும் வருமோநிராசை (நற்)

28 பாட்டைப் படிப்பதே முத்தி-என்று
பரமாணு சந்தானக் கிரமம்விட்டெத்தி
மாட்டைப்போ லூரூராய்ச் சுற்றி-உன்னை
மறந்திடா தெனக்கொரு வரந்தாசிற்சத்தி (நற்)

29 நின்னிலை காண்பவர் யாவர்-அதி
னின்று நிலைப்பவர் நின்மலமூவர்
தன்னிலை காண்பவர் தேவர்-அவர்
சச்சிதா னந்த சமுத்திரமாவர் (நற்)

30 பூநாறுங் காறும் நீளும்-பொழிற்
பொய்கையு மைகளுஞ் செய்களுஞ்சூழும்
தேனூர்குன் றக்குடி வாழும்-துதி
செய்யுங் கணபதி செய்யுள்கொண்டாளும் (நற்)

கல்லல்

## ஸ்ரீ நற்கனி அம்மன் ஆனந்தக்களிப்பு மாலை

முற்றும் சுபம்.

---



உ

சிவமயம்.

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 5. பாம்பாட்டிச்சித்தர் மெட்டு மாலை.



கண்ணிகள்.

1 பறந்து பறந்துபறந் தாடுமயிலே-ஞானப்
பாக்கியம் பெற்றோமென் றாடுமயிலே
ஆடுமயிலே விளை யாடுமயிலே-கல்ல
லம்பிகைநற் கனிமுன் னாடுமயிலே (பற)

2 சிறந்த பொருளேதென்று தேடித்தேடி-இந்தச்
சீமையெல் லாந்திரிந்தே சித்தம்வாடி
மறந்து பிறந்திடாது மகிழ்ந்தோடி-எங்கள்
வாலைநற் கனிபாத மாலைசூடி (பற)

3 பட்ட மரந்தழைக்கும் பத்தினிபார்த்தால்-நல்ல
பச்சை மரமும்படும் பாவைகோபித்தால்
சுட்ட பிணமும்பேசுஞ் சோதிசிந்தித்தால்-எங்கள்
துரைச்சி சமர்த்தெளிதோ சொல்லநினைத்தால் (பற)

4 நாலுவாசற் கோட்டைக்குள்ளே வட்டமாய்வெட்டி-ந
நாற்பத்து முக்கோண வீடதுகட்டி (ல்ல)
தாலமே வுண்டுபண்ணுந் தந்திரக்கெட்டி-க்காரி
தனியே யிருக்கிறாளே வந்துபாராட்டி (பற)

5 சாசு பணத்திலவ ளாசையும்படாள்-மூடர்
கன்னகைபொன் னகைதந் தாலுமேதொடாள்
பாச முடையவர்க்குப் பாதமேகொடாள்-தொழும்
பத்தரு ளத்திலே படுப்பதைவிடாள் (பற)

6 தன்னந் தனியிருக்குந் தைரியமுள்ளாள்-மூடர்
தங்களுக்குள் ளேயுள்ள சங்கதிவிள்ளாள்
என்னசொன்னாலு மன்ப ரின்பகைகொள்ளாள்-தஞ்ச
மென்றால்வாராதேயென் றெறிந்து தள்ளாள் (பற)

7 போக்குவரத் தாயிருக்கும் புலைமூச்சு-தானே
போகும் வழிதவறிப் போனாலும்போச்சு
ஆக்கை யழியுமுன்னே யருட்பேச்சு-பேசி
அம்மையைக் காண்பதே யானந்தமாச்சு (பற)

8 மதுர மொழிக்கருணை மகாராசி-என்றே
வாச மலரிறைத்து வாழிபேசி
மதமறு மாதவர்முன் மனங்கூசி-நில்லா
வரந்தரு வாளையெண்ணும் வழியோசி (பற)

9 எத்தனை படித்துமென்ன யின்பமில்லையே-சேர
இன்னும் படித்துநீயா யிருந்திலையே
இத்தரையு மேநடுங்கு மேமன்வலையே-சிக்கி
லென்செய்வோ மென்றுகொண்டி லாய்கவலையே (பற)

10 அண்டாதி தேவரெல்லாந் தொண்டுபண்ணியே-அம்மன்
அருளை யடைந்தடைந்தா ரறிவுன்னியே
பண்டமனை பாத்திரமா பாசம்பின்னியே-வீணாய்ப்
பாதவிக் கின்றதென்ன பாவமெண்ணியே (பற)

11 ஒருத்திக் கொருமகனென் றழுதாலும்-கையி
லுள்ள பொருள்கொடுத்தே தொழுதாலும்
ஒருத்திடு மேமனார்கை விழுதாலும்-கட்டி
யுதைத்தாலுண் ணப்படுமெய் கழுதாலும் (பற)

12 அஞ்சுபேர் கூத்தாடு மாகமாஞ்சட்டை-தனை
ஆராய்ந்து பார்த்தாலையோ லொடலொட்டை
தஞ்சமென் றீதைநம்பிச் சகசநிட்டை-விட்டு
தாலத் தலைசுவாலே பாழுத்சமட்டை (பற)

13 காடிக் கஞ்சியானாலும் மூடியேகுடி-என்ற
கருத்தை யறியாதொன்றைக் காணுமுன்னடி
வேடிக்கை யாகப்பேசி வீம்புசெய்பேடி-நெஞ்சே
மெல்லியல் பாதம்நினை மல்லிகைசூடி (பற)

14 உத்தேச மோர்பதி னாறுவயதாள்-இந்த
உலகமெல் லாம்பெறுமோ ரோவியமொத்தாள்
சத்த சாகரப்பரப் பெங்கும் வசித்தாள்-பல
சாதுக்கள் காணவேவந் திங்குமுளைத்தாள் (பற)

15 அஞ்சேலென் றோடிவரு மருளுடையாள்-எம்மை
யாளாக்கிப் பார்க்குமொரு பொருளுடையாள்
மஞ்சே ரழகொழுகு வனப்புடையா-ளிந்த
மானிலத்தி னியேழை யேனைப்படையாள் (பற)

16 பூவுல காசையற்றுப் போனவடியார்-தொழும்
பூரணியைப் பூசைசெய்தார் பாரில்மடியார்
ஆவுல வாடவிவாழ லர்க்கொடியார்-பாத
மண்டினார் யாவருக்கு மஞ்சிப்படியார் (பற)

17 தொண்டருளக் கோயிலருள் கொண்டுவளரும்-ஞான
சுத்த சுயஞ்சோதி யாகிமலரும்
அண்டரின் பெருமாட்டிக் கன்புகிளரும்-வேலை
அமைந்த வரைப்பணிவா ராங்குபலரும் (பற)

18 காசினியெல் லாம்பிழைக்கும் கற்பகமொப்பாள்-பாடுங்
காவலர் பாவலர்கள் நாவிலேநிற்பாள்
பூசைகள் புரிவர்க்குப் போதகம்வைப்பாள்.பல
புண்ணிய தீர்த்தமுறை பொன்மயவெற்பாள் (பற)

19 அடைக்கல மென்றவர்க் கமுதங்கொடுப்பாள்-தொண்ட
ரகவிருள் புரவிரு ளல்லல்கெடுப்பாள்
கடைக்கண்ணா லேமனையுங் காய்ந்துதடுப்பாள்-சந்த்ர
காவித் துகிலையழ காகவுடுப்பாள் (பற)

20 மல்லிகை முல்லைரோசா மாலைசூடுவாள்-தேவ
மாதர்கள் சூழ்ந்திடப்பூம் பந்தாடுவாள்
நல்லவர் போற்றிசெய்யும் ராகம்பாடுவாள்—நம்பி
நாளும் பணிபவரை நண்ணிக்கூடுவாள் (பற)

21 தங்கச் சரிகைத்துயில் தளதளென-வைரத்
தாழ்வட முத்துமாலை பளபளென
கங்கணங் காப்புமின்னிக் கலகலென-நிற்பாள்
காலிற் சிலம்புதண்டை சலசலென (பற)

22 சந்திரனைப் போல்முகமுந் தாமரைக்கையும்-கருந்
தாமக் குழலுந்துவர் வாயும்பொன்மெய்யும்
சுந்தரமா வேல்விழிக ளும்புன்னகையும் கண்டாற்
றாரத்தி லோடாதோ சூதுபகையும் (பற)

23 அழகிற் கொருவரிணை யற்றவன்னமே-தேவ
ரகத்திற் குடியிருக்கு மாதிப்பொன்னமே
குழகற் கருளமுதங் கொண்டுமுன்னமே-தந்த
கோகிலமே மனம்வரா தேனின்னமே (பற)

24 பார்ப்பார வல்லியெனும் பச்சைக்கிளியே-பொல்லாப்
பாவம் பறந்தோட வாவாவெளியே
கார்ப்பா ருனையன்றிக் காணேனொளியே-னுளங்
காவல்கொண் டோங்குமறி வானவொளியே

25 பச்சைக் குறத்துப்பரி பனையடியில்—ஞானப்
பால்கறந் தூட்டியன்பாய்ப் பார்த்துமடியில்
இச்சையி லாரைவைக்கு மெந்தாயடியில்-சேர்ந்தா
லெல்லாப் பவுசுமுண்டா மிங்குநொடியில் (பற)

26 காணப் பதினாயிரங் கண்ணிலேனே-யம்பாள்
கருணையிவ் வாறெனநா னெண்ணிலேனே
வீணிற் றிரிந்ததல்லால் நண்ணிலேனே-தாயார்
வேதாந்த பாதபூசை பண்ணிலேனே (பற)

27 காலமெல்லா மேவிணையக் கழித்தோமே-அன்னை
காட்சி காணாததினால் விழித்தோமே
ஞால வேடிக்கையெல்லாம் பழித்தோமே-தன்னை
நம்பித் தனித்திருந்தே செழித்தோமே (பற)

28 வேண்டுதல் வேண்டாமையையும் விட்டுவிடுவோம்-தம்
வேறெனப் பாராமல் விணைவிடுவோம் (மை
தாண்டவமா டாதிசத்தி தாள்கும்பிடுவோம்-சர்வ
சாட்சியாம் வஸ்துவிற்ச தாவும்நடுவோம் (பற)

29 உள்ளத்தி னின்றொளித்த வொருபொருளே-எனக்
குள்ளவா றேதவந்த திருவருளே
எள்ளத் தனையுமினி யேழைமருளே-னீசெய்
இந்த வுதவிக்கியா னேதுசெய்துளேன் (பற)

30 தீர்த்த தலவிசேட நேர்த்திகளுற்ற-குன்றை
தேர்ந்திடு முத்துசாமி நேர்ந்துமேபெற்ற
கீர்த்தியுறுங் கணபதிக் கவிஞன்சொற்ற-பாடல்
கிரண பதத்தணிந்தாள் கருணைமுற்ற. (பற)

கல்லல் ஸ்ரீநற்கனி அம்மன்

பாம்பாட்டிச்சித்தர் மெட்டு மாலை.

முற்றும் சுபம்.

---



உ

சிவமயம்.

## கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 6. கும்மி.

1 கும்மியடி பெண்காள் கும்மியடி-நித்தங்
கொஞ்சிடும் வஞ்சிகாள் கும்மியடி
நம்மையாளுங் கல்லல் நற்கனியம்மைதாள்
நம்பியே கும்மி யடியுங்கடி (கும்)

2 வேத முடியிலே சென்றவளே-போரில்
வீர மகுடனை வென்றவளே
ஆதி சிவனுட நின்றவளே-எங்க
ளானந்த நற்கனி யென்றவளே (கும்)

3 பத்து வயதுள்ள பத்தினியே-அண்ட
பந்தியெல்லாம் நிரை சத்திநீயே
முத்தி வடிவான மூர்த்திநீயே-எங்கள்
முன்னாலே வந்தருள் சித்திநீயே (கும்)

4 அஞ்சு வயதுள்ள வம்பிகையே-தேவ
ரஞ்சலி செய்யும் பெருந்தகையே
தஞ்ச மதுரைத் தடாதகையே-முத்தர்
தங்கிச் சுகிக்குந் தவத்தொகையே (கும்)

5 சின்ன வயதுள்ள சீமாட்டி—அன்பர்
தேடித் தொழுமெம் பெருமாட்டி
மன்ன வன்பெற்ற மலைநாட்டி-யின்று
வந்த வளேயரு ளேகூட்டி (கும்)

6 கற்றவர் போற்றுங் கருணைமுத்தே-ஒரு
காரண மாக விளைந்தவித்தே

பெற்றவ ளென்றிகம் பேசுஞ்சித்தே-வாலைப்
பெண்ணாய்ப் பிறந்தபெரும் பூங்கொத்தே (கும்)

7 வானுற வோங்கி வளருங்கொம்பே ஞான
மந்திராமுதம் நிரைந்த சொம்பே
தேனினுந் தித்திக்குந் திவ்யவன்பே-தருந்
தேவி யெழுந்தருள் வாயென்முன்பே (கும்)

8 பூத்து மலர்ந்ததோர் பொற்கொடியே-தினம்
போற்றி செய்தேனுந்தன் சேவடியே
தாத்திமித் தோமெனத் தன்படியே-நின்று
தாண்டவ மாடக்கா ணேனடியேன் (கும்)

9 வெள்ளி மலைக்கொரு ராசாத்தி-வாச
மேலான மல்லிகைப் பூசாத்தி
புள்ளி மயில்போல வேசாத்தி-ரங்கள்
போதிக்குந் தாயேவுன் தாள்போற்றி (கும்)

10 கொஞ்சுங் கிளிமொழிச் சுந்தரியே-மானே
கோமள ஞான துரந்தரியே
அஞ்சேலென் றுண்டிடுஞ் சந்திரியே-தொண்டர்க்
கன்றுட கஞ்சொல்லு மந்திரியே (கும்)

11 பத்தரை மாத்துப்பொன் னொத்தவளே-திருப்
பாதமென் சென்னிமேல் வைத்தவளே
பத்தர் படுந்துயர் நைத்தவளே-வில்வப்
பத்ர நிழலி லுதித்தவளே (கும்)

12 கவலையைக் காலா லுதைத்தவளே-சீனிக்
கற்கண்டு போலுந் தித்தித்தவளே
சிவனுட னின்றுங் குதித்தவளே-இந்தச்
சீமைக ளெங்கு மதித்தவளே (கும்)

13 முக்கண் படைத்த முகத்தழகி-பொல்லா
மோக சங்காரி யெனுங்குழகி

இக்கணை முன்னையே நான்பழகி-போற்ற
எழுந் தருள்வாய் மனமிழகி (கும்)

14 கோல மயிலொத்த வாலையம்மா-உன்னை
கோரியும் வாராவ ழுக்கேன்சும்மா
ஆலமுண் டும்பரை யாண்டபெம்மா-னுட
னன்புகொண் டாய்திரு மாலும்பரம்மா (கும்)

15 ஏழை யழைப்பது கேட்கலையா-நீ
இருப்பதும் நானும் வெகுதலையா
பாழுமுலகத் தெதும் நிலையா-என்னை
பார்த் தருள்வதுனக் கோர்மலையா (கும்)

16 எந்தன் மனத்துயர் தீரம்மா-எனக்
கிரங்கி யாள்பவ ராரம்மா
வந்து திரும்பியே பாரம்மா-இன்ப
மாஞான பாதத்திற் சேரம்மா (கும்)

17 வெள்ளைக் கலையு முடுத்தவளே-திரு
வெண்ணீரை யள்ளிக் கொடுத்தவளே
பிள்ளை யென்றென்னை யடுத்தவளே-நீலி
பேசா மவுனம் படைத்தவளே (கும்)

18 என்னுளே நின்று மொளித்தவளே-எனக்
கின்ப முண்டாக விழித்தவளே
அன்னை யமுத மளித்தவளே-சுக
வானந்த வாழ்வில் முளைத்தவளே (கும்)

19 எந்தன் பேர்சொல்லி யழைத்தவளே-தானு
யீரேழு லுலகுந் தழைத்தவளே
மந்திர வில்லை வளைத்தவளே-திரு
மானத பூசைக் குளைத்தவளே (கும்)

20 வால வயதுள்ள மங்கையரே-திரு
மாலும் புகழ்ந்திடுந் தங்கையரே

ஆலவாய் கல்லலாள் நங்கையரே-சச்சி
தானந்த மாய்வளர் கங்கையரே (கும்)

21 பார்க்கப் பலவித சிங்காரி-கெட்ட
பாதக நோய்வினை சங்காரி
கார்க்கும் கருணைசே ரோங்காரி-சிவ
காருண்ய மாய்வளர் ரீங்காரி (கும்)

22 இன்ன மனமே னிரங்கவில்லை-பால
னின்னம் பொறுத்தலை வேனோதொல்லை
கன்னியுன் வாயைத்திரந் தோர்சொல்லை-சொல்லிக்
காத்தால் விடுவனோ வுந்தனெல்லை (கும்)

23 பார்க்கப் பயமா யிருக்குதைகயோ-தோன்றும்
பற்பல மாயையின் கூத்துமெய்யோ
நேர்க்குநே ரேழைசொல் லீதுபொய்யோ-தாயே
நீயே நினைத்தருள் செய்குவையோ (கும்)

24 காஞ்சுரந் தோப்பிலோர் வில்வநிழ-லமை
கற்பணி மண்டபக் கோயில்தொழ
வாஞ்சையாய் வந்தருள் வாய்புகழ-எந்தன்
வல்வினை நெஞ்ச மலர்ந்தவிழ (கும்)

25 கோடானு கோடி பணக்காரி-நித்தம்
கூடுவார் சொல்லும் குணக்காரி
வாடாத பூவின் மணக்காரி-எம
வாதனை நீக்குங் கணக்காரி (கும்)

26 வாராதிருக்க வழக்கு முண்டோ-முத்தர்
மாமனமேடை யுனக்குத் திண்டோ
பாராதிருப்பது மென்னை கண்டோ-தவம்
பண்ணவிடாததென் கோபங் கொண்டோ (கும்)

27 காலங் கடத்தலென் காரியமே-கல்லல்
கன்ன புரத்தும்வாழ் மாரியம்மே

ஞாலந் தொழுந்தமி ழாரியமே-பயில்
நங்கா யருள்தவ வீரியமே (கும்)

28 முத்துக் குடையும் பிடிப்பவளே—செல்வ
மூவுல கெங்கும் நடிப்பவளே
நித்தஞ் சங்கீதம் படிப்பவளே-நெஞ்சில்
நினைத்த வண்ண முடிப்பவளே (கும்)

என்று மழியாத கன்னிப்பெண்ணே-எனக்
கின்பங் கொடுக்குமினிய விண்ணே
ஒன்றினு லோயா தூலவும்பண்ணே-தன்னி
லுள்ளதை யுள்ளவா றேதுங்கண்ணே (கும்)

30 சந்தனங் கோங்கு கடம்புபொங்கு-மது
சாலார் மயூர கிரிவளங்கும்
மைந்தன் கணபதி சொல்விளங்கும்-வரம்
வந்தருள் சுந்தரி தாளிலங்கும் (கும்)

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன் கும்மி
முற்றும் சுபம்.







சிவமயம்.

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 7. முளைக்கொட்டுக்கும்மி.

1 கானுறும் பூம் பொழில்சூழ்
கல்லல்வாழ் நற்கனியே-ஜீவ
காருண்ய நர்த்தனியே-திரி
காலஞ்சொல் லம்மணியே-திருக்
காட்சிகொடுத் தாதரிக்கக் கனிந்தெழுந் தருளினியே (கானு)

2 சந்தனஞ் சவ்வாது பன்னீர்
சம்பங்கி மணவீசு-முந்தன்
தாமரைமலர் கூசு-பதந்
தனைத்தொழு திசையாசு-பாடச்
சந்திரன்போல் நற்கனியாந் தாயேவந்து நீபேசு (கானு)

3 சாம்ப்ராணித் தூப தீப
சைவப்பூசை யுடையாய்-ஒளிர்
தமனியத்துகி லுடையாய்-அருள்
தருந்திருவிழிக் கடையாய்-தங்கத்
தண்டைசிலம் பலம்பவருந் தாயேயன்ன நடையாய் (கானு)

4 பண்டார வல்லி யென்றே
பாரெலாங் கொண்டாடும்-மலர்ப்
பரிமளத்தார் சூடும்-உந்தன்
பதியில்வந்து பாடும்-வரம்
பாக்யமுந் தந்தருளப் பணிந்தனனே நீடும் (கானு)

5 வேண்டுவார் வேண்டு வண்ணம்
விரைந்தருளுந் தருவே-அருள்

வீட்டில்வாழுந் திருவே-சதுர்
வேதமோதுங் குருவே-பசு
மேனியதா யுலகமெங்குந் தானிருக்கு முருவே (கா ஞ)

6 பச்சைமயி லேறி வரும்
பன்னிருகைச் சாமி-மகிழ்
பால்தருஞ் சிவகாமி-உன்னைப்
பாடிப்பாடித் தேமி-நிற்கப்
பார்த்துமிரங் காததென்ன கீர்த்தியுள்ள வாமி (கா ஞ)

7 சங்கு சேகண்டி வாங்கா
சல்லரி பியாண்டு-ஒலி
சந்நிதியை யாண்டு-வருந்
தாயேவுன்னை வேண்டு-மென்னைத்
தற்காத் தருள்புரியத் தாமதமே னீண்டு (கா ஞ)

8 சம்சார சாக ரத்தின்
சஞ்சலத்தால் நொந்தேன்-நீயே
சதமெனப் பணிந்தேன்-ஓரா
தாவில்லாமல் வந்தேன்-எனைத்
தள்ளிவிடா தாள்வையென வுள்ளமே வுவந்தேன் (கா ஞ)

9 கற்பகத்தைச் சார்ந்த தொரு
காகமும் பொன்னுதும்-என்ற
காரணம்போல் வாகும்-நல்ல
கருணையுந் தந்தேதும்-உன்னைக்
கண்டபின்னு மனமுலகக் களிப்பிலெப்படிப் போகும்

10 பார்த்தாலுந் தீருமே யென்
பாவமெல்லாந் தானே-தினம்
பாராமுக மேனே-இனிப்
பாருன்னைவி டேனே-இந்தப்
பாரபட்ச மேனுனக்குப் பார்பதியா மானே (கா ஞ)

11 வெள்ளி மலை மேலிருந்து
வேடிக்கைபல காட்டி-இந்த
மேதினிக்குண வூட்டி-அருள்
விளக்கையும்நிலை நாட்டி-நிரை
வேணியா ேனாடிருந்தும் விளையாடெம் பெருமாட்டி (காண)

12 பாலூறும் பவளச்செவ்வாய்ப்
பரிமள கல்யாணி-எழு
பாரும்போற்றும் ராணி-சுயம்
பாடவைக்கும் வாணி-உந்தன்
பாதமலர் பணிந்திருக்குமோர் பாதையோது பவானி (காண)

13 தாதியர்கள் சூழ்ந்துவரத்
தண்டிகை மேலேறி-வருந்
தருமஞாய வீரி-சர்வ
சாத்திர வுதாரி-பதந்
தஞ்சமென வந்தடைந்தேன் தயவுசெய் தருள்சூரி (காண)

14 உலகெலா முணர்ந்துபோற்றற்
குயரும் பரஞ்சோதி-சிவ
னுண்மை தோன்றநீதி-நின
துபயபாத மோதி-யானு
முன்னடியா ரோடுகூட ஓடிவா விநோதி (காண)

15 சாதிமத பேதமெல்லாந்
தள்ளிநின்ற யோகி-சிவ
சங்கரிவ ராகி-பர
தாரவகைப் போகி-யர்கள்
தன்னையனு காதிலங்குந் தன்னிய நிர்வாகி (காண)

16 கோடிமதி கூடி யன்ன
கோலமா யிலங்கும்-நவ
கோணபீடந் தங்கும்-சிறு

கோதையேஎங் கெங்கும்-தவக்
கோமளம தாய்விளங்கும் யாமளா யிரங்கும் (காணு)

17 சர்வபரி பூரணமாய்ச்
சகலசீவ ருள்ளே-பிர
சன்னமாம் பெண்பிள்ளே-சுகச்
சங்கதிநீ விள்ளே-மனச்
சஞ்சலந்தீர்த் தாதரித்தென் செந்தமிழைக் கொள்ளே (காணு)

18 பாடாத பாடலெல்லாம்
படிக்கவைத் திடுங்காளி-கணப்
படைபல வகைக்கூளி-தொழப்
பருவதம்போ லாதாளி–கொண்டு
படிகிடுகிடு வெனநடமிடும் பதுமதண்டையந் தாளி (காணு)

19 தொண்டர்தமைத் துன்புறுத்துந்
துட்டர்கள் சம்மாரி-திரி
சூலியா மாங்காரி-அயன்
துளபனுர் புராரி-சுரர்
சுறந்தசபை யிருந்தருளுந் சிறந்ததோர் கௌமாரி (காணு)

20 வில்வமர நிழலி லன்பாய்
வீற்றிருக்குங் குயிலே-என்னுள்
விளங்கும்ஞான வெயிலே-திரு
விளேயுஞ்சுர மயிலே-வர
வேண்டுமென்று வேண்டிநின்றேன் விபூதிதந்தருள் கையிலே

21 எரிநடுக் காஞ்சுரந் தோப்
பிருக்கும் நாச்சியாரே-எனக்
கிகபரத்துறுஞ் சீரே-சுக
மெய்திடக்கண் பாரே-உன்னே
யில்லாம லுலகத்திலே ஏழைக்குத் துணையாரே (காணு)

22 வேப்பமரத் தோப்பிலேயும்
விளையாடுஞ் சமர்த்தி-பிணி
வினைகடர்க்குஞ் சித்தி-பல
விரும்பினோர்க் கருள்முத்தி-நிலை
வேதாந்த வெளியில்நின்றே விரவிடும் பராசக்தி (காண)

23 காச்சல் குளிர் தலைவலிபல
கருமநோயும் நீக்கி-விலை
காவின்ப முண்டாக்கி-யுளக்
கலக்கமாலைப் போக்கி—அந்தக்
காரணசுத்த மாகும்பத கமலந்தா கண்ணோக்கி (காண)

24 காசுபண வாசை யாலே
காகம்போ லேபறந்து-வெகு
கஷ்ட நஷ்டம்பிறந்து-உந்தன்
கனகபாத மறந்து-எமன்
கைத்தடிக்கிரை யாகிடாது காட்சிதா சிறந்து (காண)

25 மைவிழிப்பெண் மயக்கத்தினால்
வாடிமே லும்வற்றி-அவர்
வருவழிகளைச் சுற்றி-சில
மனிதரேச நெற்றி-வேர்வை
மண்ணில்விழப் பாடுபட்டால் வருமோவுன் னருள்வெற்றி

26 ஏழை யெளி யோரயலோ
ரேதமில் பரதேசி-பசிக்
கேதுமீயாத் தோசி-களை
யேந்தலென்றும் பேசி-யலைந்
திறந்துபிறந் துழன்றிடாம லெனக்கருள் பிரகாசி (காண)

27 பருத்திப்பொதி போல்வயிறு
பெருத்திடத் தான்றின்று-யாரும்
பசிக்குதையா வென்று-வந்தால்

பாய்ந்துபோ போவென்று-சொல்லும்
பாவிகளைக் கூடிடாது சேவைதந் தருளின்று

28 மோசநாசங்கள் செய்யும்
மூடரான் புதவாது-வெகு
மோகமுந் தகாது-செய்யு
மூடர் கூட்டந்தீது-துயர்
மொல்லைகளு மென்னையண்டா எல்லையில் வந்தோது (காணு)

29 பேய்கூளி பூதமேவல்
பிரமராட்ச தோரும்-பல
பிணியு மேமனும்-விஷ
பீடையும் பகைவோரும்-ஓடப்
பிரமசிவ ஞானமென்னும் பெரியவாளைத் தாரும் (காணு)

30 மாமகளும் பாமகளும்
வளருங்குன்றை வாசன்-தமிழ்
வைத்தியப்ர காசன்-தவ
முத்துச்சாமி சீசன்-கவி
வாணன்கண பதிக்கருள்புரி யானுமுந்தன் தாசன். (காணு)

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

முளைக்கொட்டுக் கும்மி

முற்றும் சுபம்.

---



உ

சிவமயம்.

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 8. தாலாட்டு.

---

1 பூவாடைக்காரி புனுகுசவ்வா தேமணக்கும்
பாவாடைக் காரி—என்னம்மா
பசுங்குழவி நற்கனியே

2 வாணியிசைபாட மாமாது தாலாட்ட
ஆணிப்பொன் கட்டிலிலே—என்னம்மா
அமர்ந்திருக்கும் நற்கனியே

3 புவிராசர்போற்ற புலவோர் புகழ்ந்தேற்றத்
தவசிலே வீற்றிருக்கும்—மென்னம்மா
தவஞான நற்கனியே

4 மாணிக்கவல்லி மரகதமேற் பார்ப்பாத்தி
பூணிக்கு வில்லுடையா—ளென்னம்மா
பூங்கோதை நற்கனியே

5 கட்டிக்கரும்பே கனிரசமே சர்க்கரையே
கட்டழகுப் பெண்ணரசே—என்னம்மா
கல்லலுறை நற்கனியே

6 தித்திக்குந்தேனே தெவிட்டாப் பலாச்சுளையே
முத்தே மரகதமே—என்னம்மா
மொய்குழலி நற்கனியே

7 மயிலே குயிலே மலைமானே பூங்கிளியே
கயலே யனவிழியா—யென்னம்மா
கருணையுள்ள நற்கனியே

8 வாடாமலரே மருக்கொழுந்தே சண்பகமே
சூடா மணியே—என்னம்மா
துரைமகளே நற்கனியே

9 இன்பப்பெருக்கே யிருள்கடிந்த பேரொளியே
அன்ப ருளும்பூத்த—என்னம்மா
அலர்க்கொடியே நற்கனியே

10 சோதிமலையே சுகமளிக்கும் பாற்கடலே
ஆதியந்த மில்லாத—என்னம்மா
அறக்கிளியே நற்கனியே

11 ஆனந்தவெள்ள மளிக்குந் தவப்பெருக்கே
ஞானங் கொடுத்தருளு—மென்னம்மா
நடனவல்லி நற்கனியே

12 கிடையாப் பொருளே கிருபையிலார்தன்னு
லடையாப் பதியே—என்னம்மா
அழகொழுகு நற்கனியே

13 ஓங்காரியென்றே வுலகமெலாங் கொண்டாடும்
பாங்காஞ் சிறுபிள்ளை—என்னம்மா
பதிவிரதை நற்கனியே

14 கொஞ்சுங் கிளிமொழியே கோடிதவந் தான்செய்தே
மஞ்சுமலை பெற்றெடுத்த—என்னம்மா
மகராசி நற்கனியே

15 சிந்தாமணியே சிவமணியென் கண்மணியே
கொந்தலர் சிங்காரி—என்னம்மா
கொலுவிருக்கும் நற்கனியே

16 பவளச்செவ்வாயாய் படர்ந்த மதிமுகத்தாய்
துவளு மிடையா—யென்னம்மா
சுாற்போற்று நற்கனியே

17 அன்னநடையா யருள்பூத்த தாமரைபோல்
மின்னும் பதத்தா—யென்னம்மா
விளையாடும் நற்கனியே

18 முல்லைநகையாய் முளைப்புயத்தாய் மைவிழியாய்
மல்லிகைப் பூச்சூடு—மென்னம்மா
மலைமாது நற்கனியே

19 மின்னலிடையாய் மினுமினுக்கும் பூந்துகிலாய்
கன்னிப் பருவமுள்ள—என்னம்மா
கபடில்லா நற்கனியே

20 சின்னஞ்சிறியவளே சிங்கார மானவளே
பொன்னும் புகழ்பவளே—என்னம்மா
புதுமையுள்ள நற்கனியே

21 மாலையணிந்தவளே வையகமெல் லாந்துதிக்கும்
வாலை யெனுந்தேவி—என்னம்மா
வடிவுள்ள நற்கனியே

22 கற்பூரவல்லி கனகவல்லி ஞானவல்லி
அற்புத வல்லி—என்னம்மா
அடியார்சொல் நற்கனியே

23 தங்கவிளக்கொளியே சாம்பிராணி வாசகத்தி
மங்கள கல்யாணி—என்னம்மா
மகிமையுள்ள நற்கனியே

24 தேவசிகாமணியே தேடுவா ருள்ளிருக்கும்
பாவ விமோசனியே—என்னம்மா
பரஞ்சோதி நற்கனியே

25 புல்லக்கிலங்கப் புகழ்மாலை தோள்புளள
மெல்லிய சல்லாவுடுக்கு—மென்னம்மா
வினைதீர்க்கும் நற்கனியே

26 முன்னழகும்பின்னழகு முத்துச் சடையழகும்
சின்ன வயதழகும்— என்னம்மா
சிறந்திருக்கும் நற்கனியே

27 சல்லரித வில்வீணை தாளமேளமுளங்க
பல்லக்கி லேறிவரு—மென்னம்மா
பரமேட்டி நற்கனியே

28 சூரியனைப் போலொளிருஞ் சூலாயுதமெடுத்து
பாரி லிரங்கிவரு—மென்னம்மா
பரிபூர்ணி நற்கனியே

29 நாராயணியே நமஸ்தென்ற தொண்டர்களின்
நேராக வந்தருளு—மென்னம்மா
நிகரில்லா நற்கனியே

30 தேனுறுபாயுந் திருக்குன்றை தன்னிலும்வாழ்
மானே கணபதிசொல்—என்னம்மா
மகிமையுள்ள நற்கனியே

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன் தாலாட்டு

முற்றும் சுபம்.







சிவமயம்.

## கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

# 9. கொச்சக மாலை.



1 கத்தூரி யேலங் கதம்பமணச் சோலைகள்சூழ்
நத்தூறுங் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
பத்தியிலா மூடர்கள்மேற் பாமாலை கொண்டுசென்று
கத்தி விருதாவாய்க் களைத்தனையே நெஞ்சகமே

2 நினைவார் நினைத்ததெல்லாம் நேராகத் தந்தருளும்
நனைவார் நிலக்கல்ல னற்கனியைப் போற்றுமல்
பனைபோல் வளர்ந்தும் பரிவில்லாப் பாவிகள்மேற்
றினமாசு பாடித் திரிந்தனையே நெஞ்சகமே

3 மோனச் சமாதிநிலை முத்தியதுந் தானளிக்கும்
ஞானச் சுகந்தகல்ல னற்கனியைப் போற்றுமல்
பானைச் சோற்றென்றும் பரதேசிக் கீயாத
ஈனச் சவகாசத் தெய்தனையே நெஞ்சகமே

4 அறுகோண மெண்கோணத் தன்பத்தி யோரெழுத்தாய்
நறுமாலை சூடுகல்ல னற்கனியைப் போற்றுமல்
இறுமாந்து நல்லோர் பெரியோரென் றெண்ணுத
குறும்பர்களைப் பாடிக் குழைந்தனையே நெஞ்சகமே

5 நாற்பத்து முக்கோண நாயகியென் னுத்தாளாம்
நாற்பதமு மாகுகல்ல னற்கனியைப் போற்றுமல்
தோற்பை நிறையவுண்டோர் சோறும் பசிக்குதென்றே
ஏற்பவர்க் கீயார்மாட் டிளைத்தனையே நெஞ்சகமே

6 எல்லாப் பவுசு மிருமையின்புந் தந்தருளும்
நல்லாமேய் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றாமல்
இல்லா தவரை யிகழ்ந்து கடுகடுக்கும்
பொல்லாரைப் பாடிப் புகழ்ந்தனையே நெஞ்சகமே

7 பொன்மலர்க்கா வெங்கும் பொலிந்து மணம்வீசும்
நன்மைமிகுங் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றாமல்
புன்மடவார்க் கள்ளிப் பொருள்கொடுக்குங் காமுகரை
என்பிரபூ வென்று மிழித்தாயே நெஞ்சகமே

8 ஆடுஞ் சரக்கோ ரறுபத்து நாற்குணஞ்சொல்
நாடுபுகழ் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றாமல்
சூடுஞ் சிவபூசை சொர்ப்பனத்து மெண்ணாக
மூடர்களைப் பாடி முகமுறிந்தாய் நெஞ்சகமே

9 கேட்டதெல்லாந் தந்தே கிருபையா னந்தவின்ப
நாட்டிய மாடுகல்ல னற்கனியைப் போற்றாமல்
பாட்டின் பயனறிந்து பண்பாய்ப் பரிசுதராக்
கோட்டியரைத் தேடிக் குலைந்தனையே நெஞ்சகமே

10 தானினைத்த வாறே தடையின்றித் தான்முடிக்கும்
நானினைத்த கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றாமல்
வானினையுந் தன்வசமாய் வைக்கவெண்ணு மாசையர்மேல்
நீநினைந்து பாடுகின்ற நீதியென்ன நெஞ்சகமே

11 சோனையெனத் தேனுஞ் சொரியும்பூஞ் சோலைகள்சூழ்
ஞானிகள்சேர் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றாமல்
ஆனையைப்போ லாடி யசைந்துவரு மங்கையரைப்
பூனையைப்போற் போயும் புணர்ந்தென்ன நெஞ்சகமே

12 தண்டலையும் பூம்பொலிலுந் தண்மாசுஞ் சூழ்ந்துநிற்கும்
நண்டலைசெய்க் கல்லில்வாழ் நற்கனியைப் போற்றாமல்
சென்டலையுங் கொண்டைச் சிறுமிகளை யூருராய்க்
கண்டலைந்த தென்னை கருதியோ நெஞ்சகமே

13 போதா ரலர்வனமும் பொய்கைகளு மைகளுஞ்சூழ்
நாதாக்கள் மெச்சுகல்ல னற்கனியைப் போற்றுமல்
சூதாற் றனம்பெருத்துந் தோய்ந்துநடுத் தேய்ந்தமறு
மாதாசை கொண்டு மலைத்ததென்ன நெஞ்சகமே

14 ஊருணியின் சேல்க ளுலகமெங்குந் துள்ளிவிழும்
நாரணிகொள் கல்லலில்வாழ் கற்கனியைப் போற்றுமல்
வாரணத்தின் மத்தகம்போல் வைத்ததன வேசியரைச்
சேரனினைத் தூரூர் திரிந்ததென்ன நெஞ்சமே

15 தம்மை யடைந்தோர்க்குத் தாய்போ லருள்புரியும்
நம்மையாள் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
விம்மியு மண்ணுந்து மிகப்பருத்து முத்தணிபூண்
கொம்மையனைக் கூடிக் குதித்ததென்ன நெஞ்சகமே

16 என்று மழியாளா யெம்போலி கட்கருளும்
நன்றிமிகுங் கல்லில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
கன்றுபசு மாடாடு கற்பணியும் வீடுகளும்
நன்றுசத மென்றுவக்கும் ஞாயமென்ன நெஞ்சகமே

17 அச்ச மறநமக்கே யானந்த வீடளிக்கும்
நச்சரவம் பூண்டகல்ல னற்கனியைப் போற்றுமல்
பிச்சையெடுத் துண்ணும் பெரியோரை நிந்தைபண்ணி
எச்சபையிற் பேரெடுப்ப தென்றறியாய் நெஞ்சகமே

18 கமகமெனப் பூமணக்குங் காசோதி வாலையென்ற
நமனணுகாக் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
நமதென்ன நாமிருக்க நாய்நரிகள் பேய்கழுகும்
தமதென்னு மெய்யைநம்பித் தாழ்ந்ததென்ன நெஞ்சகமே

19 பொன்னு லலங்கரித்த பூந்தோட் சுரமடவார்
நன்னுள்செய் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
கன்னுபின் னுவெனவீண் கட்டுக் கதைபடித்தே
என்னை நினைத்தலைந்தா யெண்ணமற்ற நெஞ்சகமே

20 பூமணாள் மாமால்வான் புத்தேளிர் யாவர்களும்
நாமம் வளங்குகல்ல னற்கனியைப் போற்றுமல்
காமமது வுண்டே கணிகையர்க்குப் பூத்தேடித்
தாமலைந்து வாடுகின்ற தன்மையென்ன நெஞ்சகமே

21 சேல்பாயுஞ் சோலைத் திருக்காஞ் சுரைவனத்தில்
நால்வேத மோதுகல்ல னற்கனியைப் போற்றுமல்
வேல்போல் விழிச்சியரை மென்மேலுங் கூடிநொந்து
மால்பூண் டலையு மமதையென்ன நெஞ்சகமே

22 தமக்குவமை யில்லாத தன்மையாளென் றமரோர்
நமஸ்காரஞ் செய்கல்ல னற்கனியைப் போற்றுமல்
எமக்கெமக்கென் றிவ்வுலகத் தெப்பொருளுந் தேடிவைத்துச்
சுமக்கின்ற வின்பமென்ன சொல்லுவாய் நெஞ்சகமே

23 பயந்தவரைக் காத்துப் பரிவாயஞ் சற்கவென்றே
நயந்துரைக்குங் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
குயந்தனைக்கொண் டேய்த்தே குறித்ததுபெற் றேகுமின்னார்
மயந்தனில்நீ வாடும் வகையென்ன நெஞ்சகமே

24 வேதாந்த வின்ப விளக்கமாய் நின்றிலங்கும்
நாதாந்தக் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
ஆதாரந் தேடுவர்போ லையோ விராப்பகலும்
நீதா னடந்துபெற்ற நேர்மையென்ன நெஞ்சகமே

25 வாணிக்கும் நல்ல வரங்கொடுக்கு மீஸ்வரியாம்
நாணிக் குடைக்கல்ல னற்கனியைப் போற்றுமல்
மாணிக்க முத்து மரகதமும் பூணவெண்ணிப்
பேணித் திரிகின்ற பேதமையேன் நெஞ்சகமே

26 பண்ணும் பலபாவும் பாட வாமளித்தே
நண்ணுமொரு கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுமல்
வுண்ணும் பொருள்களையு முண்ணுப் பொருள்களையு
மெண்ணித் தவிக்கின்ற ஏழமையேன் நெஞ்சகமே

27 ஆழிமுத லண்டமெல்லா மன்றுட கஞ்சுகிக்க
நாழிநெற்கொண் டைந்தருளும் நற்கனியைப் போற்றுமல்
பாழுங் கவலை பலபலபட் டோய்ச்
சூழுங் கருத்தெதுவோ சொல்லுவாய் நெஞ்சகமே

28 என்னை யடிமைகொண்ட ஏகாந்தப் பூங்கிளியாம்
நன்னயக் கல்லலில்வாழ் நற்கனியைப் போற்றுவையேல்
இன்னும் பிறப்போமென் றெண்ணற்க வாணியுடன்
பொன்னியு முன்சொந்தம் புரியாத நெஞ்சகமே

29 தவவெகினங் கிள்ளைபுறு தாரா குயிலும்
நவிரமுமார் கல்லில்வாழ் நற்கனியைப் போற்றுவையேல்
நவநிதியு மெல்லா நலமும் பெறுவாய்
பவவினையுந் துன்பும் பறந்துபோம் நெஞ்சகமே

30 தானே யனைத்தான தட்சிணா மூர்த்திபதந்
தானே பணிந்தமுத்து சாமியெனும் பண்டிதனார்
வானோர் விளங்கவருள் மைந்தன் கணபதிசொற்
றேனோர் கவியணிந்தாள் தேவிகல்ல னற்கனியே

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

கொச்சகமாலை

முற்றும் சுபம்.

---

கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன்

## நவரத்தினமாலை

முற்றிற்று.

---

உ
சிவமயம்.





## குன்றக்குடி ஸ்ரீ தோகையடி

# விநாயகர் துதிக்கை மாலை.

கட்டளைக் கலித்துறை.

1 முத்திக்கு வித்தே முடிவிலாவின்பேழும் மூர்த்திகட்குந்
தித்திக்குந் தேனே தெவிட்டாக்கனியேயென் சிற்றறிவாம்
புத்திக்கு மேற்ற புதுவிருந்தேகுன்றைப் போற்றுவர்க்குச்
சித்திக்குந் தோகை யடிவாழ்விநாயக தேசிகனே

2 தேசிகனே திருத் தேவாதிதேவருந் தேடியண்டு
மூசிகனே முதன் முக்கட்பெருமான் முகமலர்ந்த
கோசிகனேகுரு நாதக்குழந்தாய் குளிர்ந்த குன்றைக்
காசுகனேயரு ளானந்தத் தோகை யடிப்பொருளே

3 அடியா ரடிதொழும் பாக்கியமேழைக் கருள்புரிந்தாற்
படியா னதிற்பல செல்வமுந்துய்த்துப் பாமுத்தியும்
நொடியாமுன் வந்தெய்து மென்றுலகீரொன்று நோற்றுணர்
கடியார தோகை யடியாருமெங்கள் கணபதிக்கே (மின்

4 பதிக்கே வருகிலன் பாப்பாடி யோதிலன் பத்தர்புகழ்த்
துதிக்கே யிசைகிலன் றுர்க்குணம்போக்கிலன் றுக்கநவ

நிதிக்கே யலைந்து நினைமறந்தேனெற்கு நீயிரங்காய்
கதிக்கே மயின்மலைத் தோகையடிவாழ் கஜானனனே

5 ஆனைமுகப் பெருமானென் றுவந்தருச் சித்தவன்ப
ரேனையர்க்கும் பரமானந்த வாழ்வை யெளிதிலளித்
தூனையுடைப் பிறப்பாமா லொழித்தறி வோங்குகணச்
சேனை யதோகை யடிவாழு மோம்ப சின்மயனே

6 சின்னஞ் சிறுவயதாள் மலைபெற்றதோர் செவ்விசெல்வி
பொன்னுந் தொழுபதப் போனகமன்னுடன் புத்திரனே
மன்னஞ் சனக்கண் மயில்போன்ற வல்லபை மார்புறச்சேர்த்
துன்னுந் தபோதனத் தோகையடிவாழு முண்மையனே

7 உண்மை யறிந்தவ ருள்ளேவிளங்கு மொருவெளியாம்
வண்மை மகாத்துமா வாவாமுனம்புன வள்ளியென்ற
பெண்மயில் வேலவர் பேரிலன்பாகப் பிறங்கிநின்ற
தண்மலி தோகை யடிவாழும்ஞானத் தவநிலையே

8 நிலையற்ற வாழ்வினை நித்தியமாயெண்ணி நீணிலத்தா
முலையுற்ற புன்றுறும் பென்றலைந்தெய்த்துமோ ராதரவற்
றலையுற்ற வாமையா யான்படும்பாடற வோடிவந்தாள்
தலையுற்ற தோகை யடிவாழ்த்துவார்க்கரு டந்தவனே

9 தந்தந் தாளஞ் சிகைமேகமம்பகஞ் சத்தியுடற்
சந்தந் திருமுகந் தாமரைகைகாந்தள் தாள்தளிர்வாய்-
சிந்தும் பவளந்தனமோங்க லென்றிசை தேவிபெற்ற
இந்தந்த தோகை யடியானைப்பாட லினிதினிதே

10 இனிதாங் கதலிக் கனியவலப்பமெள் ளேற்றருள்வான்
றணியாங் கயமுகத் தார்வேந்ததாமரைத் தாடொழல்விட்
டணியாய மாயலை கல்லாதபொல்லா வசடனுய்யத்
தொனியாய தோகை யடிநாயகாவொன்று சொல்லுவையே

11 சொல்லுந் திருவிமையாசல வெற்பிற் றுணைமணிக்கொம்
பெல்லும் பரவவொன் றுய்ந்தோர்கதையை எழுதியன்ப

ரில்லும் பெரியோ ரிடமுந்தன்வீடா யிருப்பவனே
அல்லுஞ்செல் தோகை யடிவாழுமெங்க ளறிவுருவே

12 அறிவதற் கெட்டா வதீதநிர்த்தொந்த வனுதிமுத்த
குறிகுண மற்றெருளிர் வாசாமகோசரங் கூடறிவில்
வெறியரைக் கூடி விருதாவலையும் வினைவிடுமோ
பொறியுறுந் தோகை யடிநாயகாவெனுப் புல்லனுக்கே

13 புல்லாகிப் பூடாய்ப் புவியெலாமாகியே பூத்துநிற்கு
மில்லாகி ஏக வெளியாகியிங்கங் கெனுதிரண்டற்
னுல்லாச மாய்நிரைந் தோங்காரவட்டத் துதித்தொடுங்குஞ்
சொல்லாகித் தோகை யடிவாழ் சுகானந்த சோதியனே

14 சோதிப்ப தென்னையின் ஞண்மட்டு முன்னடி தோத்தரித்து
மோதிப் பலதரம் போற்றிசெய்தேனுண்மை யோங்குகதி
யாதிப் பதப்புனை தந்தருள்வாய்குன்றைத் தோகையடிப்
பாதிப் பனிமதி யான்பெற்ற மாமுகப் பாலகனே

15 பாலப் பருவ பசமதயாளனே பாரொருங்கும்
வேலப் பரும்புகழ் வேதாந்தியேதிரு நீறுவினை
கோலப் பிரானே குணமாகுகுன்றுக் குடியுடையாய்
நாலத்த தோகை யடிவாழ்நாகக நாயகனே

16 நாயனே தன்னை யறிஞானிபோற்று நளினபதத்
தூயனே என்றுந் தொழுவார்வினைமலந் தூள்படுத்து
பாயனே எல்லாம் பரவடிவாய்த்திகழ் பண்புரைத்த
நேயனே தோகை யடியேகுடியாக நின்றவனே

17 நின்றே வணங்கில னிட்டைசெய்பெட்பில னீக்கமற்ற
வொன்றே தெரிந்தில னுள்ளந்தெளிந்தில னேதைகொண்ட
மன்றே புகுந்தில்ன் மாபாவி யாயான் மலைப்பதற
வென்றேக தோகை யடியாய்நிசானந்த மீவதுவே

18 ஈயாத லோபிகட் கின்பாவியற்றி யிதயமஞ்சா
மாயாத வாபுல வாவரிச்சந்திரா மன்மதனுங்

தோயாத வாவெனச்சொல்லு நிர்மூடத் துயரகற்று
வீயாத தோகை யடிவாழ்பிரம விளக்கொளியே

19 விளங்குங் கரிமுக மின்னவென் னுள்ள விரைமலர்மேற்
களங்கங் கெடவளர் கற்பகமேயறு காற்பிரச
முளங்கும் பரிபுர முண்டகந் தந்தருள் மொய்த்தபரி
மளந்தங்கு தோகை யடிவாழ்பெரிச்சாளி வாகனனே

20 வாகன தோமுகன் வள்ளிபங் காளனென் வாக்கினிற்கும்
யோகன மோக னனேகன் விதேகநன் யூகனம்பாள்
பாகனும் போற்றும் பரிபூரணனுர் பழநிகுன்றை
யாகினிற் றோகை யடிவாழ் பராபர வானந்தனே

21 ஆனன மைந்து மதோமுகமொன்றுமா மாறுமுகன்
தானன மன்னவட் கேனலின்மன்றறுந் தாலிகட்ட
வானன யானை வடிவெடுத்தானையோர் வல்லையா
மரனனை தோகையடியானைப் போற்றிட வாமனமே

22 வாமனந் தன்னையன் பாய்ச்சொன்னமாதிரு வள்ளுவர்போன்
றுமனை யாளுட னில்வாழுமுத்த ரிசையருளாற்
காமனை யேமனைக் கன்மத்தைநீக்கக் கருத்திடவேன்
றுமதந் தோகை யடிவாழ்பவாபதஞ் சார்ந்தவர்க்கே

23 சார்ந்தவர்க் கின்பமுஞ் சாயுட்சியமுத்தியுந் தந்தறிவா
யார்ந்தநின் பாத மடியேனடையு மருள்கிடைத்தாற்
கூர்ந்திடு மீண்டநின் மீண்டும்பிறப்பனோ குன்றைவளஞ்
சேர்ந்திடுந் தோகை யடிவாழ்சிவோகமா சிந்துரமே

24 சிந்தித்த சேயர் நினைக்குஞ்சுகவருட் செல்வமதுந்
தந்தித் தரையிடைத் தன்னிகராற்றுவாழ் தன்மையுஞ்சொ
றந்தித் தலையுடைத் தற்பரவிற்பன சற்குருவாஞ்
சொந்தத்த தோகை யடிவாழமதோமுக சுந்தரனே

25 சுந்தரச் செவ்வேற் றுரைமகன்வெற்பன் சூர்பிழைக்கத்
தந்திரச் சூரைச் தாக்கியசண்முகன் றன்றுணைவா

இந்திரர் முப்பத்து முக்கோடிதேவரு மேற்றுகுன்றை
மந்திரத் தோகை யடிவாழ்மகான்களின் மாணிக்கமே

26 மாணிக்க வல்லியென் றுத்தாளையோரிடம் வைத்தமதி
வேணிக்க பாலக்கை வெண்ணீறணிவார் வியந்தகனிப்
பாணிக் கணேசா பகர்வாயெனுள்ளம் பரிந்துவைத்த
காணிக்கை தோகை யடியாயுன்றண்டைக் கழலிணைக்கே

27 இணைக்குங் குமவரைச் சேக்கைச்சிவைமடி யேறிநின்று
பணைக்குங் கைகொட்டி விளையாடுமன்புடைப் பாலகனே
கணைக்குங் கதிகொள் விழிச்சித்திபுத்தி கல்யாணமிட்டு
மணக்கின்ற தோகை யடிவாழுங்குஞ்சர மாமுகனே

28 முகம்பார்த் தருளநீ முன்வராதின்னு முடுகுவென்றோ
யகம்பார்த் தலையவிட் டாட்டனன்றோவெனை யாதரிப்பாய்
மகம்பார்த் துஞற்றுவர் தேவாதிதேவர் வணங்கியுள்ள
சுகம்பார்த்த தோகை யடிவாழ்சிவானந்த சூரியனே

29 சூரியனே பல கோடிவந்தன்ன துதிக்கவரு
மாரியனே யறி வாய்ச்சர்வசீவரு மன்புறுநற்
காரியனே யெனைக் காவாகயாசுரன் கண்டாண்ட
வீரிய தோகை யடிவாழ்விராட்டு வியாபகனே

30 வியாதியுந் தீது மெலிவுந்தொடாா விபூதிதந்து
கியாதியு மின்பமுஞ் செல்வமுந்தந்துங் கிருபைகொண்டு
பயாதியு மில்லாப் பதவாரிசந்தொழப் பார்த்தருள்வாய்
தயாதியுந் தோகை யடிகாணவாழுந் தபோதனனே

31 தனனவென் றுடிடுந் தோகையடியைத் தரிசித்துமே
மனனஞ்செய் யன்பர் மகிழ்கீர்த்திசீர்த்தியும் வான்பொருளும்
புனனந்து தாமரைப் பொன்னடிப்போதும் புரிந்தினிமேற்
சனனந் தராதருள் குன்றுக்குடியான் சகோதரனே.

குன்றுக்குடி ஸ்ரீ தோகைபடி விநாயகர் துதிக்கை மாலை.

முற்றும் சுபம்.





சிவமயம்.







குன்றுக்குடி ஸ்ரீ சண்முகநாதர்

# சந்தமணிமாலை.



## ஸ்ரீ தோகையடி விநாயகர் காப்பு.

தானதன தானன தல்லதான
தானதன தானன தல்லதான

ஆதிசிவ சோதியை வுள்ளுதோறும்
ஆறறிவி னுலிசை யுள்ளபாடல்
ஓதிநினை யானுமுன் பிள்ளையாமே
ஓடிவரு வாய்வினை துள்ளியோட
சீதமதி போனுதல் வள்ளிசேரும்
சேவகர் சகோதர வெள்ளுவாவே
சூதிலடி யார்புகழ் வள்ளலான
தோகையடி மேவிய பிள்ளையாரே.

1 தந்த தனன தனன தனனதன
தந்த தனன தனன தனனதன
தந்ததனன தனன தனனதன—தானதான

கந்த மலி குழலினு ழகுதவழ்
கஞ்ச வதன மதனு கமவசன
கம்பு என களருலா வுளைவிழியர் மணிமூடும்

கண்ட மலை முலையிலே வமிழ்தொழுகு
செந்துவ ரினிதழிலே சிறு சரிகொள்
கங்கண மணிகையிலே மயிலைநிக ரொயிலாடும்

சந்த நளின விளிலே சாசசுக
ரஞ்சித வுவ கையிலே தழுவவரு
தந்திர மய வினிலே சுழலுமன நிலையாதோ

தங்க நிற முருகனே திருமருவு
செங்க ணரி மருகனே தவமுனிவர்
தங்க டுயர் சிதாரே ரடுமசுர படையோடு

சிந்த லசல மணுரே ருலகினிடை
சிந்த நடன மிடுவேல் வளர்பனிரு
திண்புய முடை யரசே செரிகடிகொள் தொடைமார்பா

சிந்தூர மினை யவனே யடியவர்கள்
சிந்தை செய் பழையவனே மகிமைமிகு
தென்றல னக டுளைநோ வகுலவரு வவதாரா

எந்தை யரு ணகியா ரருள்புகழ்வ
ளங்கும னதி னகலா துலவதிப
விந்த்ர ரமா ரயனு ரியருலகர் புலவோர்கள்

என்று மெழிலிமதி தாரகை மினொளி
நச்தெழில் பொழில்மகிழ் வாழ்வு பொழிமுகி
லென்று நிலைகொள்மயின் மாமலையிலுறை பெருமானே.

2 தனன தனத்தத் தத்தன தத்தத்
தனன தனத்தத் தத்தன தத்தத்
தனன தனத்தத் தத்தன தத்தத்—தனதான

கமல முகத்தைப் பொத்தி நகைத்துச்
சுழல விழித்துச் சொற்சுவை வைத்துக்
காக தனப்பொற் கச்சை யவிழ்த்துக் களிகூறும்

கலவியர் கைக்குட் சிக்கிய துக்கக்
கலகை மறக்கக் கற்பவை கற்கக்
கவிதை யுரைக்கக் கற்பக பற்பக் கழறேய

வுமையெல் விளக்குற் றுற்றமை பற்றத்
திரிகா ணச்சுத் தத்தொடு புத்திக்
குயர்தவ சித்திக் கர்ச்சனை வைத்தெத் ததியேனும்

வுனைநினை தற்றெற் குத்தா வைச்சற்
றுளமகி ளக்கற் பித்தநி னத்திற்
கொருதின மொப்பச் செப்பில னப்பர்க் கருள்ஞான

அமல ரருட்சிற் சத்தி யகத்தத்
தாபக ரிப்பற் கிட்டமி னட்டத்
தால ரர்க்கொற் றைச்சிர சற்கப் பறியிசர்

அடியர் மனத்திற் பொற்புறு வெற்பிற்
றிகழ்பவர் மெச்சச் சற்குரு வொத்தர்த்
தமதை யுரைத்தச் சத்துழல் பத்தர்க் கிடர்தீர

இமையி லரக்கத் துட்டரை வெட்டிப்
பலியிடு முக்ராச் சத்தி யெடுத்திட்
டிகமுய வெட்சிப் பச்சை மயிற்சற் பரியேறி

இரவிய ருக்குப் பட்ச மிகுத்துச்
சரவண முத்துப் பட்டமு மிட்டிட்
டெழுமயில் வெற்பிற் பெட்புறு வித்வப் பெருமானே.

3 தனத் தனந்தன தனதன தனதன
தனத் தனந்தன தனதன தனதன
தனத் தனந்தன தனதன தனதன — தனதான

விடக் கொடுங்கணை யிணைவிழி சுழலிட
மிடற் றிடும்பண வடவெயி ன்டமிட
வெறுக் கையங்குட முலைசுவ டிழையள விடைகாண

விரித்த சுந்தர மதிமுக குறுவியர்
வணுக்கள் குங்கும திலதமு ணைவுற
மினுக்கு தண்டைக ளிடையொடி படுமென விளையாடி

அடக்கி நின்றையை யடையடி யவர்மதி
திடுக் கிடும்படி நகைபுரி மகளிர்செய்
அணைச்சுகந்தனி லனலிடு மெழுகென வுருகாமல்

அறுத்தி யந்தெரி யறிவு முனிருபத
நினைப்பு மன்பது நியமமு முதவிய
அருட் பெருஞ்சிர வணமொரு பொழுதினு மறவேனே

கடற்கு ணின்றெளி கருநிற நிசிசர
ருடற் கொழுந்தசை பிதிர்வுற விதிர்வா
கரத் திரங்கயில் விடுகட தடதிட மணிமார்பா

கணக்கி லின்பம துறுதிரு வருணிரை
திருப் பெரும்புக ழருண கிரிமுனிவர்
கருத்து வந்திசை கவிபுக வாதக ருணைவாழ்வே

அடர்த்த செந்தினை வனசா வினிமொழி
குறத்தி சிந்தைகொள் மணமக னெனவரு
மறத்த ரண்டையி லறுமுக மொடுவள ரழகாளா

அணைத்தி னுந்தனை யறிதவ முறுமுய
ரகத்ய ரும்பரு மாகர வெனவல
கடித்து ளந்தொழு மயில்மலை யாசுசெய் பெருமாளே

4 தத்த தனதன தனனு தனனு
தத்த தனதன தனனு தனனு
தத்த தனதன தனனு தனனு—தனதான

முட்டி னுடல்கொடு பலநா ளுணர்வா
யெட்டி ருவயதோ டுறவா மறவா
முத்தி னிளநகை மடவார் தடவார் முலைமாலால்

மூத்த மெழுகிய வணிவா சலிலே
கட்டி மருவியு மறையோ டறைசேர்
மூத்த மிடயிரு வருமோர் மனதாய் விளையாடி

வட்ட மதிமுக வியர் வாறிடவே
பட்டி னுனிகொடு மெதுவாய் விசிர்வேன்
வற்ற லறவருள் பத தாமரையே தொழுவேனே

வர்க்கை மாமடர் மலையாள் மலையாள்
துர்க்கை பகவதி யெமையா ளுமையாள்
வச்ர மவுலிவி மலிபூ மலிபூ சுரதேவி

அட்ட பயிரவி மகனே குகனே
சிட்டர் தொழவரு குமரா வமரா
வற்ப ரசுரரை முனிவோர் முனிவோர் நினைவேலா

அர்ச்ச னைபுரியு மறமா குறமா
துற்ச வழமிடு கணவா குணவா
அர்த்த மறிகிலே பிரமா பிரமா தமிதாவென்

செட்டி முருகச ரவணு பரணு
சுப்ர மணியசு பகரா பகரா
சிட்ட வறுமுக சிவசோ தியசோ ழியநூலா

சித்த ரினமுல விடுவார் தொடுவார்
சுத்த மதுநதி புடைசூழ் நெடுவான்
செப்பு மயின்மலை மிசையா ழிசையாள் பெருமானே.

5 தத்த தந்தாத் தனன தனத்தந்
தத்த தந்தாத் தனன தனத்தந்
தத்த தந்தாத் தனன தனத்தந்—தனதான

கச்ச டங்காக் கரிணி முலைக்குங்
கட்க டங்காக் கலவி யலைக்குங்
கட்க வெங்கோட் கலக விழிக்குந் துறவோரும்

கச்சொ துங்காக் கரிய சிகைக்கிங்
கிச்சை யுண்டாக் கிசையும் நகைக்குங்
கச்சி தம்போற் றாள நகைக்கும் மயலாகி

மச்சி லன்பார்த் துவா வழைத்தும்
மச்சி யென்றேய்த் தமளி விளைத்தும்
மச்சு மென்பாய்க் குருகி யிளைத்துந் தவியாமல்

மற்க டம்பாற் பொதிபுய நித்தம்
மக்க டம்பாற் றிருவருள் வைத்தும்
மற்க டம்போற் றிரிவ தொளித்தும் . வரமீவாய்

பச்சை யங்காத் திரிமி னுவக்கும்
நக்க ரும்போற் றொருபொருள் கற்கும்
பற்ப பைந்தாட் குமர நினைக்கும் பெரியோர்கள்

பக்கல் நின்றுட் கொள்குக வெதிர்த்தும்
நக்கல் கொண்டாட் டமுமி டசுர்க்கும்
பற்று ளன்றுக் ரமமொ டுழக்கும் வடிவேலா

மிச்சை யண்டாச் சிமய தினைப்பெண்
பட்ச முண்டாய்ப் பணிவொ டணைத்தும்
வெட்க மொன்றுச் சரிய முரைக்கும் முறையாளா

வெற்றி துன்றுக் ஙையுறு மருட்பொன்
விக்ர கம்போற் றவசிகள் மிக்கும்
மெச்சு குன்றுக் குடியி லிருக்கும் பெருமாளே.




6. தானன தத்தத் தானன தத்தத்
தானன தத்தத்—தனதான

காரளகத்தைத் தூவிமுடித்துக்
காதி லிரத்னத் திருகோலை
காத மிலக்கப் பாத சரப்பொற்
காமர் சொலிக்கக் கிளிபோலே
பாரத னக்கற் பூர மணக்கப்
பார்வை சுழற்றித் திரிமானார்
பாழ்வலை யிற்சிக் கேழை பிழைக்கப்
பாதை யுரைக்கத் தெரியாயோ
கீர னுரைக்கக் கோர வரக்கக்
கேளனை வெட்டிப் பலியேசெய்
கேணிரை சத்திப் பாணிய வச்ராக்
கேடய யுத்தப் புயவீரா
சீரக மிக்கிற் சீறளி மொய்க்கத்
தேனுமிழ் முத்துப் புனமாதை
தேடி யணைத்துக் கேகய வெற்பிற்
சீர்தரு வித்வப் பெருமானே.

7 தானதந்த தனுதானத் தானன
தானதந்த தனுதானத் தானன
தானதந்த தனுதானத் தானன—தனதான.

சாலகந்தப னீர்வாடைக காரிகள்
போகசங்கட மாசாடைக் காரிகள்
தானகந்தைகொள் பாவாடைக் காரிகள் பிறர்சாமான்

தானமென்றிடு தாராளக் காரிகள்
காமவிந்துவி யாபாரக் காரிகள்
சாளரங்கணு லாசாலக் காரிகள் இசையாரின்

தூலநிந்திது ராசாரக் காரிகள்
சோடியின்றியி ராமோகக் காரிகள்
தூமைசிந்தல்கு லாபாசக் காரிகள் — மையலாலே

சூதுகொண்டலே மாபாவிக் காமுகன்
மீதிலென்றநுள் வாயோதக் கூடலி
சோமசுந்தரி மீனுளுக் கோர்சுத — முருகோனே

நூலறிந்த பிதாவேதக் காரும்
மாலுமிந்த்ரையும் வானுளக் காரும்
நூதனங்கொள் குராவராத் தாடொழு — வசுரோரை

நூறியண்டர்க ளீடேறக் கோபுரன்
வாழவேண்டிசை வாழியிட் டேயுய
நாவுறுங்குழல் மான்மாதைக் கூடிய — வடிவேலா

நீலமஞ்ஞையி லேயேறிப் பூமியை
யோர்வலம்புரி வேளேநற் கீரரி
னேர்வருங் குருவே தீதற்றுயருள் — விளையாடும்

நீறணிந்த நிலாநேர் மெத்தானன
தேவர்வந்திசை தேனுறுக் கேருறு
நீதகுன்றை நனுடாள் வித்யாகா — பெருமானே.

---

8 தத்த தத்தன தத்த தத்தன
தத்த தத்தன—தனதான

மட்டிவிச்சை தரு வட்டி ரட்டைமுகை
மட்டிகட் குருகி — வெகுகாலம்
மச்சை வற்றிமிகு சுக்கிலத் திமிரை
வைத்திருக்க மன — மிசையாது
கட்டி முத்தமிடு சித்தசக் கொடிய
கட்ட நிட்டூரக — படநோயால்

கட்குடித் துயிர் விடுத் தடுத்தவர்கள்
கட்டணத்தி னொடு சவமான

பட்ட மிட்டழுது கொட்டடித் தரிசி
பச்சையிட் டெரிகொ ளிடுகாடு

பற்றிமட் குகையி லிட்டு மெத்துவினை
பற்றறத் தெரியு மறிவான

புட்டிருக் கமல மிட்டுயர்த் தருள்செய்
பொற்குறச் சிறுமி மணவாளா

பொற்பு மிக்கசுக நற்சிகிச் சிமய
புத்தி முத்திதரு பெருமானே.

---

9 தனதன தனதன தனதன தனதன
தனதாத் தனன—தனதான

விகசித நகையணி மதிமுக வனிதையர்
விருதாச் சரச வெறிமூடி

மிடியொடு நிதமவர் கடிதட மடைமிசை
விழுபேய்க் கலவி வெறுமாசை

சுகமென வுழலவு மெமலை சுழறதி
சுடுகாட் டெரிய வுமொணாது

தூரிய நடனமிடு மயில்மலை வளர்குக
துணையாய்க் கருணை புரிவாயே

மகபதி மகடன நகமணி கலவையில்
மறைதோட் குமா வடிவேலா

வளர்தினை மகளிரு விழியினு மெழுதிய
மலர்போற் கமழு முகவேளே

அகசுசி காமறு பிசுனர்க ளிசைமொழி
அறியாப் பனிரு செவியோனே
அழுதழு துளமழல் மெழுகென விளகிடு
மடியார்க் கெளிய பெருமானே

---

10 தத்ததத் தனத்ததன தத்ததத் தனத்ததன
தத்ததத் தனத்தன—தானதான

பக்குவப் பணைத்ததனர் பித்ததிற் பிணைத்சதிக
பட்சமுற் றனுத்தியபொன் னிணையாது
பத்திபைக் கொடுத்துனருள் முத்தியைப் படைத்துலக
பற்றறத் தடுத்தடிமை கொளுமாறு
சக்கிரிப் படத்தலை டித்தமயி லிற்கிரண
சற்குணக் குறச்சிறுமி தெய்வயானை
சத்திவைத் தகத்திலெதிர் மெத்தியத் வைதப்பெரிய
தத்துவத் தவத்தவர நினைவாயே
தக்கனைச் செயித்தசிவ னக்கினித் திருட்டிவழி
சட்பொறிப் பிறப்பதென வருதேவே
தத்தலர்க்க டத்தறுமு கத்தொடுதித் துட்கசுர
சத்துருக்களைச் சமர்செய் வடிவேலா
சிக்கறுத் தகத்யமுனி முத்ரத்த னத்தனிசை
செப்பிடத் திதித்தமது நதிபாயும்
செய்க்குணத் தனக்குலமு ளக்குநற் சிகிக்கலுரை
சித்தியிற் ப்ரசித்திதரு பெருமானே.

---

11 தத்தான தனனதான தத்தான தனனதான
தத்தான தனனதான—தனதான

கற்காத கயவர்கோவில் புக்காத முடவர் ஞான
கட்போனகுருடர் சோறெ னளியோரை

கைக்கோல்கொ டெறியுமீன ரெட்போது முனையெனுத
கற்பார மனவரீதர் தனைநாடி
பொற்பாள வமரர்மார னுப்பாமெ னிசைகள்பாடு
பொய்க்காசு விசனமோடு பலவூர்போய்ப்
புக்காத கவலைமீறி முக்காடொ டழுதுபாணி
புற்பூடு மொவொருவேளை யுணவாகி
சுற்றுத பலவியாதி பற்றுது சனனமேயில்
சுக்ஞான பதவிசேர அருள்வாயே
துற்போத வசுரசேனை கெட்டோடி மடியமாகர்
சொற்போல வருதுமீச வெனவாய்மூ
டெற்கோல வயிலநீல புட்பேரி னடனமாடு
மெற்கோது குருவுமான முருகோனே
இத்ரலர் முனிவர்பேண வற்றுத மதுவிநோண
மிக்கூறு நவிரநாக பெருமானே

---

12 தானன தனனதான தானன தனனதான
தானன தனனதான—தனதான

நாடோறு முனதுதாளை நாடாது நளினபாத
நாகாகல் குலியர்மீது மயலாகி
நாய்போலு மவர்பினோடு காமுக னிளியபாவி
நான்வாழ நவிரமேறி வருவாயே
ஆடேறுமனல் கடூர சூடால மிடுவிநோத
வாறுன வடிவபால குமரேசா
ஆதார வுலகமேழு மாவரவெ னழுகையாகு
மாவேச மொடுகுலாவு மிருள்சூழுட்
வீடான சிகரமேரு தூளாகி யுதிரவோரி
வேதாள மலகைகூகை கழுகாட

மேனுடர் புகழுவாரி சேருக வசுரமாதர்
வேர்தாலி யறவுழூல் புரிவோனே

மாடேறு மிறைவர்காதி லோர்வேத முதவிவீர
மாகாளி மடியிலேறி விளையாடும்

மாபால கழனியேரி தேனூறு புடைகொணீத
மாயூர கிரியின்மேவு பெருமானே

---

13 தனதான தானதன தனதான தானதன
தனதான தானதன—தனதான

ஒருபோது மோசர்வ ணபவா வெனுதுநர
குறவாகு பாதகரை யெளியோருக்
குதவாத பாவிகளை யடியார் விரோதிகளை
யுயர்மால்க மீசனென யிசைபாடி
குருநாதர் போலுமவ ரிருதாளில் வீழ்வறுமை
குடிபோகு மாவருளை யிகமோதி
குளிர்சோதி வீசனது நளினா பாதவிணை
குணமாக வேழைதொழ வருவாயே
திருமாபி ராமியுமை சசிநாக லோகிபுகழ்
ஜெயவீர ஞானவடி வயிலோனே
செருமீ தடாதுபுரி யசுரேச ராஜைபரி
திரள்சேனை பார்புரள முனிகோபா
தெருவீதி நாலுபுற மணியோதை கீதமொடு
செபமோம தானமிடு வளநாடா
திரைமோது தேனதியை வடபால்கொ டேவர்புகழ்
திருவார் மயூரகிரிப் பெருமானே

---

14 தனனதன தனனதன தனதான தத்ததன
தனனதன தனனதன தனதான தத்ததன
தனனதன தனனதன தனதான தத்ததன-தானதான

சரசவிக சிதநளின சசிநேர் முகத்தியர்கள்
வசிய மெழு கெழுதுமலர் வரிசேர் விழிச்சியர்கள்
தனகளப மெழுகு மிணை யிளநீர் முலைச்சியர்கள்முகில்போலே

தவழ்குழலு மவிழவரு குளாம பொட்டழக
ரதாமது வொழுகவிசை மொழிமோக கனக்கிளிகள்
சபை நடுவி லிரதிநிகர் சதுரா டலர்க் கொடிகள் மயலாலே

நார்புரியு முறை விதிக ணழுவீன லுத்தனவ
குணவிரக னகதி தரு தலை பாவி மட்டையெரி
நாகுபெறு துயாகல விருபாத பொற்கமல மருள்வாயே

நரிஞமலி கழுகலகை கழுகாட வத்திரிகள்
நெறுநெறென விடிய மதி யரிதாரகைப்பிரபை
நனி மறைய வுலகமுழு தருள்வீசு சத்திகொடு செருமீதே

பொருதிரத கஜதுரக நிசிரூப வுக்ரபர
வசுரர்சிர சறவமர்செ யாசே குகைக்குணினே
புலவர்பல ருயர்வுபெறு பொருளே புனத்திலொரு கிழரூப

புதுமையொடு குமரி மொழி சில்கேலி செப்பிவயி
றதிகபசி யெனவுமினிதிணைமா வுருட்டியிடு
பொறுமைமிகு குறவழகி திருமார்பில் முத்தமிடு குமரேசா

அரசியெம தனைவிசய மதுரா புரிக்குமரி
பவதி பகவதி சுடலி பரை ஞான பச்சைமயி
லனவரத மனதினினை குமரா குணக் கருணை மகமேரே

அபரிமித மகிமைகொளி ரதவீதி சுற்றிவரு
மடியவர்கள் மடிவிலக வருளோது கிட்ணகிரி
அரசவன மெனவுமுறை மயிலா சலத்தில்வளர் பெருமானே.

15 தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

தெருவி லனவர தமுமன மெனவரு
மருவு பருவமு முருவமு மழகியர்
திருமு றுவலினு மிருகிரள் முலையினு மணநாறும்

திலநெய் தடவிய சடையினு முடையினு
மிலகு குழைபொரு விழியினு மொளிர்குள
திலத வகையினு மிசைகிளி மொழியினு மயலாகி

உருகி யறையிடு மலரணை மிதிர்வுற
விரவு பகல்முழு வதுமத பணிவலி
லுரைசெய் கலவியி லுழல்வினை வழிகளி லலையாமல்

வுனது பதிவலம் வரவுமு னருள்கொடு
கவிதை பொழியவு மடியவர் பழகவு
முதவி னுனதிரு மலரடி தொழுவது மறவேனே

வுருசி மிகுதினை மணிமுதிர் கதிருதிர்
குருவி கடவிய குறமக டொழுமண
வுபய பதவறு முகசர வணபவ குருநாதா

உலக மளவிடு மரியா னயனொடு
மறைகள் புகழ்பவ மகபதி யிருதய
முவகை யுறுமக முகதரி சனைதரு குகவேளே

கருணை மிகுபவ ருனையல திலையென
வருண கிரிபுக ழுறைபவர் வினைபிணி
கவலை யறவருள் மழைபொழி தவமுகில் முருகேசா

கலக மிடுமசு ரரையொரு நொடிதனி
லறியு மயிலொடு மதுநதி வளமுறு
கனக மயில்மலை யரசுசெய் தவசிகள் பெருமானே.

16 தானுதன தனதனதனதன தானுதன தனதனதனதன
தானுதன தனதனதனதன—தனதான

கோலாகல விகசித நடமிடு மாலாலடி பாவிய கடதன
கோவாலடு வடிவயி னிகரிணை விழியாலே
கோமாதிசை வடிவுறுமடவிய ராமாலிடை யனன்மெழு கென
கோர்கோபிக னுனையொரு பொழுதினு நினையாது (வுரு
லீலாவகை புகுகினு மகனென நீயாதுட னுலகதி சயமென
நேரேவர மதுதர வருவது மொருநாளே
நீதாகித சரிதொழு பவர்குரு நாதாகர பதியுறு சுரபிணி
நீருலொரு நிமிடமு னறவரு மவதாரா
வேலாபக வதிபயி ரவிதரு பாலாதினை வனமுறை குறமகள்
மேலேமிகு மயலொடு தழுவிய முறையாளா
வேதாசல சிவனக மகிழ்தரு மாதோகை யடியில்வளர் கணபதி
மேலோர்முத லெனவரு குணபதி யிளையோனே
சேலார்பொழி லனமிரு கரையினு மாறுதல விடுமணி வகைதிர
டேனுறொடு முகில்படி சிகரிகொள் மனைசூழும்
சீரார்சதுர் மறைதெரி தருபிர மாஞானிகடிருசபஸ் வதியுமை
தேவாதிக ளுலவிடு மயின்மலைப் பெருமானே.

---

17 தானதன தானதன தானதனத்—தனதான

காலனளி யாலமொழி காமவிழிக் கடையாலும்
கானமுகி ழொளிவி ரேதமலர்க் குழலாலும்
பாலமதி போலமதி பாலமணிப் பணியாலும்
பாவையரி னுவலுறு பாவிமனத் துயர்தீராய்
ஞாலமுணு மாயாக நாயகருட் குதுகூலம்
நாடுமரு காதுறவி நாரதர்செப் பிறமாதை
மாலையிடு வாலிபவு மாதருசற் குருநாதா
மாகமடர் தோகைமலை வாழ்குமாரப் பெருமானே.

18 தனனத்தந் தனதான

தமையே மெச்சுந் தகைமாளுர்
தருவீலக்குந் தவியாமல்
எமையாணற்சிந் தாபாதா
இறைவோர்நத்துங் குருநாதா
உமையாள்முத்தந் தருபாலா
வுலகோருய்க்குங் கதியாளா
இமையோர்சுற்றுஞ் சிகிமோா
எதிரேநிற்கும் பெருமானே

19 தானதனத்தன தானதனத்தன
தானதனத்தன தனதான

கோலாவிக்கையுள் மூடிய பொற்றன
கோடசையக் குழன் முகிறாவி
கோதி மூடித்தலர் கோடிமதித்திடு
கோபுர மெத்தையி னடமாடும்
நீலவிழிச்சியர் மால்விட நற்புத
நீழலில் வைப்பது மொருநாளே
நீதகுறத்தியி னாமுலைக்குறி
நீடுமழுத்திய புயபாரா
நீலியுமைச்சிப வானி பொருப்பரு
ணேரிழை பெற்றரு மரவேளே
நீரிலொழித்திடு சூரரை வெட்டிநிர்
தூளிபடுத்திய சமர்வீரத
சூலனரிப்பி மாதியர் மெச்சிடு
தோகையடிக் கண பதியோடு
சோதிமணிக்கன தேர்கொடு சுற்றிடு
தூமயில் வெற்புறு பெருமானே.

20 தனதனதான சனதனதான
தனதன தான தனதான

சிகை முகி றாவி மதனவிலாச
சிகிவிடு பார முலைமூடி

சிறுநடையாக வுலவி விலோத
சினவயில் காதி னணிமோத

நகை வெயில் வீச நடமிடுமாதர்
நகைபுரி மாலி லலையாமல்

நமனணுகாத தவமுறை யோதி
நனவுகனாவி லருள்வாயே

அகமுக சோதி மகிமை விநோத
மறியறிவாளர் பெறுவாழ்வே

ஆவணைமீது துயிலுமிராம
வரிமருகாவெ னவிரோத

மகபதி நாத னகமுகிசீத
வனச பதார முருகேசா

மறுநதி வாழை கழனிகள் சூழ
மயில்மலை வாழும் பெருமானே

---

21 தன்னதனதான தன்னதனதான தன்னதனதான தன்னதான

கல்லின் முகையாலு முல்லைமுகையான பல்லழகினாலு மெல்லுலாவு
கல்லிணியினாலு மல்லி யிதழாலு மல்லளகநாக வில்லையாலும்
வெல்லமொழியாலுமல்லிகை:புரோசில்மெல்லநடமாடு வல்லிமார்கள்
வெல்லுமதகாம வல்லவிடையூறு சொல்லமுடியாத தொல்லையாலே
கல்லலகனாய புல்லனாபுமாறு கல்விபயினாக வெல்லையீவாய்
கள்ளுண சுரேசர் துள்ளிவிலையாடு கள்ளமறவோடி வெல்லுவேனே
மல்லலுறு மேனல் வள்ளிமணவாள வள்ளலெனன வேத னல்குவோனே
வள்ளுரகமாடு புள்ளிம:யிலேறு வல்லாச கானப் பெருமானே.

22 தானதத்தன தானன தானன
தானதத்தன தானன தானன
தானதத்தன தானன தானன தனதான

மூசளிக்குழ னூமணம் வீசிட
வானனத்தில தாரமு மூறிட
மோகனக்கிளி போலிசை பேசியு மலைபோலே

மூடிவைத்த விஞேத பயோதர
வாரொதுக்கி மஞேகர மாகதை
மோடிசெப்பியும் வாடகை பேசியு முறவாடும்

ஆசைவைக்கு மடாத குடோரிகள்
பார்வையிற் சுழல் பாவிமுஞேதிய
ஆறெழுத்துப தேசவுபாசனை மறவேனே

ஆழவத்தியுண் மூழ்கிய மாமர
சூரனற்றிட வேறனை யேவியு
மாகுலப்படு கோபதி வாழவு மிசைவோனே

ஆர்செருத்த சடாதர ராடக
மேடையுற்றரு ளூடகமாடிடு
மாதிமத்திய பாதள மாயொளி ரழியாதர்

ஆரியர்க்குய ராகம வேதவி
ஞேதசத்தி சமேத சபாபதி
யாயமுப்புர மாயமு னேகையி னிணையாதாற்

றேர் செலுத்தவிடாது கடாவிய
தோகை நற்கண நாதர்சகோதர
தேனதிப்புன லாடுவர் பீடுற வருள்வோனே

சீதையைத்திரு டோரவி ராவணன்
மாளநைத்தலை மேவு மிராகவர்
தேவர் மெச்சு மயூரகிரீசுர பெருமானே.

23 தானதத்த தத்தத்த தானதத்த தத்த தத்த
தானதத்த தத்த தத்த தனதான

பாடகப் பதத்தை நித்த மோதிமுத்தியைப் புகட்டு
பாவினைப் படித் துதித்து னருளாலே
பாடியுட்கு ளுச்சரிக்கு மாறெழுத்தினைச் செபித்து
பாசனைத் திடத்தைவைத்து மகிழ்வேனோ
கோடொடித்து வெற்பிலொப்பு பாரதத்தினைக்குறித்த
கோமளக் குணக் கடற்கு மிளையோனே
கோசலைக் கினித்தபுத்ர ராநிறைக்கு மைத்துணக்கு
வாயர் சக்கரக் கார்க்கு மருகோனே
வேடுகட்டு பிட்டினுக்கு மாறடைத்த சொக்கருக்கு
மீனவட்கு முற்பவித்த புதல்வோனே
மேல்குலத்தர் மெச்சுசுத்த ஞானரத்தி னக்குறத்தி
வீரியத்தை வித்தரிக்கும் முறையாளா
மாடநற்கொடிக் கழைப்பொ ளுடையட்ட திக்கொலிக்க
வாபுசிப்ப தற்கெனக்கு மிறுநாடா
வாருணத்தினைப்பழித்த கோமுகச்சசிப் பெணிச்சி
மாமயிற்பொல ப்ரசித்த பெருமானே.

---

24 தான தான தனத்தன தத்தன
தான தான தனத்தன தத்தன
தான தான தனத்தன தத்தன தனதான

ஆடைசோர நடக்கு மிடக்கியர்
சாடைபேசு சமர்த்தியர் முத்திரை
யாரபார தனத்தை யசைத்தொரு மயில்போலே

ஆசைவீசி யழைக்கும் வலைக்கையர்
பாசநோய் கொள் பழக்க வளக்கிய
ராவலா தியுரைத்து மணைத்திடு மயலாலே

பேடி போலலே பித்த னெனக் கினி
ஞான போத மளித்திடு நித்திய
போதீத வெளிச்ச மெழுச்சா ணருள்வாயே

பீத ரோகணி கத்தூரி சுக்கசி
றேவ தார மணக்கு மலேக்குகை
பேணிவாழ்தவ சித்த ரகத்தினி லுறைவோனே

கோடை வாணிடி யொத்திடு பற்பல
கோடி பேரிகை கொட்டி முளக்கிய
கோர வீரவரக்கர் குலத்தினே முனிவோனே

கோலநாக தனத்தி யெனக்கொரு
தாயுமான புனக்கிளி யுத்தமி
கூடவே வரு சுப்ரமண்யச்சிவ குருநாதா

மாடி மீது மதித்தண் முகத்திய
ராட நாடிடு மத்தை மகட் கிணே
மார்பி னூடணைவித் தொரு முத்தமி டிளவேனில்

மாபலாக தலித் தினுசிக்கனி
வாவிவாச மலர்த் தொடு சுற்றிடு
மாமயூர மலேச் சிகரத்துரை பெருமானே

---

25 தனத்தத் தனத்தத் தத்தந் தானத் தானன
தனத்தத் தனத்தத் தத்தந் தானத் தானன
தனத்தத் தனத்தத் தத்தந் தானத் தானன தந்தான

சிரித்துச் சிரித்து ருக்குங் கேலிக்காரிகள்
குலுக்கிப் பிலுக்கி நிற்குங் கோலக்காரிகள்
திருட்டுப் புணர்ச்சி மிக்குஞ் சாலக்காரிகள் பந்துபோல

திரட்டித் தனத்தை விற்கும் தேமற்காரிகள்
காரத்தைக் கனத்திற் வைக்குங் காதற்காரிகள்
சிமிட்டிச் சிமிட்டி யொட்டுங்காமக் காரிகள் வந்தபேரை

மறித்துப் பிடித்திழுக்கும் போகக் காரிகள்
மணத்திற் பணைத்திருக்குந் தேகக் காரிகள்
மயக்கிப் பொருட்பறிக்கும் யூகக்காரிக ளும்பரேனும்

மனத்தைக் கெடுத்தழிக்கும் பார்வைக்காரிகள்
விளக்கைத் தணித் தணைக்குஞ் சேர்வைக்காரிகள்
வலைக்குட் சுழித்திளைக்குஞ் சேயெற் காதர வொன்றுதாராய்

செருத்துக் கனைத் தெதிர்க்குக் கோபச்சூரர்கள்
சிரத்தைச் சிதைத் தறுத்துங் காலிற் றாணிகர்
தெளித்துப் புடைத்துவக்குஞ் சேவற் கேதன செங்கைவேலா

திருக்கற் புடைக்குறக்கொம் பாவற் காவடர்
தினைக்குட் கிழத் தொடுற்றந் தோவப் பாவென
சிணுக்குற் றவட்கிரக் கங்காணத் தாபுன லென்றுமோதி

வருத்திக் குலைத்தணைத்தும் போர்வைத் தோண்மிசை
கொருத்துத் தனப்பொருப்புஞ் சாயத் தோய்சுக
மயிற்பொற் பரிக்குகக்குந் தேவக் கோசிக குன்றைவாழ்வே

வடக்குக் குவட்டினிற்குங் காளித் தாயுமை
நடத்தற் கிடத்திருக்குஞ் சோதிப் பார்பதி
மகிழ்ச்சித் தெடுத்து முத்தும் ஞானத்தேசிக யெம்பிரானே

---

26 தானத் தானத் தத்தன தத்தன
தானத் தானத் தத்தன தத்தன
தானத் தானத் தத்தன தத்தன தனதான

தேனைப் பாலைத் திட்டு முதட்டிகள்
மீனைப் போன்மைப் பட்டதி ருட்டிகள்
சீருற்றார் சித்தத்தை மருட்டிகள் சிவகாசி

தேசத்தே முற்பட்ட கொலைப்பறி
நேர்மைக் ரோதத் தூர்க்க படத்திகள்
சேர் முட்டாண்மட்டிக் குணதுட்டிகள் பலபேரின்

ஊனைப் பாழிற் கொட்டவணைத் துடல்
பூரித்தாசைப் பட்டவர் சட்டிகொ
டூரிற்பூரிக் குத் திரியப்புரி பழிகாரர்

ஓலைக்கே மெச்சிக் கொலு சட்டியல்
காசுக் கோவைப் பொற்பணி மெட்டிக
ளோதைக் காசிப்பட்டிரவிக்கை கை வளைதேடி

நாணிப் பாரிற் சுற்றி மனச்சள
மாகச் சோர்வுற் றெய்ப்பது னக்குமென்
ஞானத் தாயத் திக்கும் வள்ளிக்குழு வகைதானோ

நாடிப்பேசப்புத்தல நற்றிரு
வானைக்கா வத்தர்க் கொரு புத்திர
நாரைக்கோர் முத்திப் பவுசிட்டம துறையாறில்

நீநித்தாதிப் புத்தகம் விட்டெறி
நேருற்றேறிற் செப்புவ தொப்புறு
நீதிக்கோ நிற்பச்சிசெ யெனச்செரு சமணோர்கள்

நீளக்கா னட்டிட்ட கழுக்களில்
வீழச் சோதிப்புக் கிசைவுற்றருள்
நீலத்தோகைப் பட்சிமலைக் கொரு பெருமானே.

---

27 தானதான தனந்தன தந்தன
தானதான தனந்தன தந்தன
தானதான தனந்தன தந்தன தனதான

ஆனைபோல வசைந்து நிமிர்ந்திடு
காமவாடை கமழ்ந்திடு கொங்கில
வாரமார்பு குலுங்க நிலங்குவி குழல்கோதி

ஆடியாடி நடந்து வடந்திகழ்
தோளேமுடி யுடம்பு தெரிந்திடு
மாடகாடை யணிந்திள மைந்தரின் மனநோவ

பூனைபோல வொதுங்கி வருஞ்செக
ஜாலநீலி டங்கண் மதம்பொழி
போக மோக தரங்க மிரங்கியும் விளையாடி

போதுபோமு னறங்கி லுறங்கிடு
காமநோயில் வருந்து பெருந்துயர்
போகநீயொரு மந்திர தந்திர மூரையாயோ

வானைமோதி யெழுந்து சினந்திடு
சூரசேனை நொறுங்கி யெரிந்திட
வாலவேலை யெறிந்து நடம்பயில் மயிலோனே

மாசிலாத செழுஞ்சுடர் மிஞ்சிய
ஞானபாத மிரண்டினி லொன்றினை
மாறியாடு சிதம்பர சுந்தரர் புதல்வோனே

தேனைநேர் மொழிமங்கை புனந்தனி
லேகியாவ லொடும்புணர் மங்கள
தேவநாயக செந்தில் பரங்கிரி வளர்வோனே

தேவமாதர் சிலம்பொலி பொங்கிடு
மாடகூட மடங்க ணெருங்கிய
சீர்மயூர சிலம்பிலி ருந்தருள் பெருமானே.

---

28 தானன தான தனத்த தத்தன
தானன தான தனத்த தத்தன
தானன தான தனத்த தத்தன—தனதான

ஞானுப தேசமெனக் கினித்தர
வாவாவெ னாதுமதிப் பிகப்புகழ்
நாடன னுடிநடப் பிணைப்பயி றெழிலாளன்

நாடோறு நாடுகளிற் பொருட்கலை
மாவேழை யூழைநினைத் தலுத்தவன்
நாய்போல மாதர்தனக் குளைத்தவ னுனைநாடும்

வானோர்க ளூலைமறுக் குழுக்கிரன்
மாலீச பேதமுரைத்த துர்க்குணன்
வாயாடி யாகிவழக் கிழுக்குரை சதிகாரன்

மாருதசோதி மலர்ப் பதத்தினை
யாருத ராதியகத் தமைத்திட
வாசாமகோ சரசித்தி வைத்தபு துமையாதோ

மானேரி யாளிமிகுத் தவத்திரி
வாழேன லாளிகுறத்தி சித்திர
வார்முடுபார தனத்தின் முத்திரை திகழ்தோளா

மாதாபி தாவுமெமக் கிகத்தெதவ
ரோதாயெ னீரவுருக்க முற்றவர்
வாடாத னேகமகப் பலச்சுக மருள்வோனே

மீனோடு மோடைசெ ழித்தபற்பல
மாவாடுபூ வின்மணத் தினுக்குயர்
மேனோடுகூடி விருப்ப முற்றிசை சதுர்மாதர்

மேதாவி யாகநடித் திடத்திரள்
தேனூறுசூழ மகத்த வத்தினர்
மேலாம யூரகிரித் தலத்துரை பெருமானே.

---

29 தானத்தானத் தனதன தனதன
தானத் தானத் தனதன தனதன
தானத் தானத் தனதன தனதன-தனதனதனதான

காமக் ரோதக் கபடிகள் விகடிகள்
காசக் காசைப் படுமிகழ் கொடுமிகள்
காறிக் கூறிச் செறுமிடு முகடிகள் மலர்வன மயில்போலே

கால்வைத் தாடிக் கவிபயில் மருடிகள்
மேலைச் சோடித் துலவிடு புலவிகள்
காதற் பாசக் கலவிசெய் சுவடிகள் கவடினி னுளோயாமல்

காமர்ப் பாதப் புணையது துணையென
வோதி த்யானத் துணர்வொடு புணர்கதி
காணப் பாணித் தலநெலி நிகாருள் புரிவது மொருநாளே

காரைப் போலப் பரவிய சுரிகுழல்
வாலைத் தாயுத் தமிபக வதிபரை
காலச் சூலக் கரதா பயிரவி மாகத மணிகோடி

நாமத் தாணுக் கொடிபயில் முயலக
தாளிக் கோர்புத் திரசர வணபவ
ஞானத் தீபப் பெருவெளி வழிவரு மாகா குருநாதா

நானச் சேறிட் டிலகிரு மலைமுலை
யேனற் காரிக் கிருதய மகிழொடு
நாடிக் கூடிக் குலவிடு கொழுநரொ ருருமுறை புடையோனே

ஓமத் தேவர்க் கிடர்புரி யசுரிளை
வீழ்வித் தாமொய்த் திடுமிசை தருகுழ
லூதிப் பாதத் தொருபணி யடமற நடியரி மருகோனே

ஓடைச் சேருத் துறுவன மலைகவி
சீறித் தேனைப் பிழிமழை வயலிடை
யோடிப் பாய்பெட் புறுமயில் மலைவள ரறுமுக பெருமானே

---

30 தானா தத்தன தன்னன தான
தானா தத்தன தன்னன தான
தானா தத்தன தன்னன தான—தனதான

ஆசா னைப்புறு முன்னிரு பாத
மோதா தித்தல பொன்னினை நாடி
னொளா யெப்படி நின்னருள் வீடு பெறுவேன்யான்

ஆவே சத்தொடு முன்னடு சூரர்
மார் பிருக்கிர வன்னை வாரகி
யாயாள் புத்திர சென்னிர வேல முருகேசா

ஈசா நித்திய விண்மணி யான
நீவாழ் முத்தர்கள் கண்மணி போல
வீசான் யத்தமை சண்முக நாத புரமீதே

ஏராளப் பொரு ளன்ன முலாவு
மாவார் பொற்கொடி மன்னுயர் வீடு
ஏரார் விற்பனர் கன்னியர் பாலர் திருவாணி

தேசார் கற்பக மன்ன விவேக
பூசா னுக்ரக புண்ணிய தேவர்
சீரார் முத்தமிழ் மின்னுப தேச தவசாலை

சேலார் தெர்ப்ப மினன்ன மபூர்வ
தேனு றத்திமை கன்ன லசோகு
தேமா பப்பளி தென்னை பலாக முதுவாழை

மாசார் புட்குவை சண்பக மார
மாசா ரப்படி வந்தடை சீரை
வானோர் மெச்சியு மன்புகள் பேசி மகிழ்வோடு

வாழ்வோ மித்தல மென்ன வினுவி
வாயூ றித்தொழு புன்னகை யோடு
மாயூ ரக்கிரி தன்னிலு லாவும் பெருமானே

குன்றுக்குடி ஸ்ரீ சண்முகநாதன் சந்தமணிமாலை

முற்றும் சுபம்.





உ

ஓம். ஸ்ரீ குருவே நம:



குன்றக்குடி ஸ்ரீ வீரமாகாளி அம்மையார்

# பல பாமாலை.

## காப்பு.

ஸ்ரீ சிவவணக்கம்.

ஏழு 'ரி' வந்த வெண்பா.

புகயெகிய பூமா ரிரிரி ரிரிரிரி
உகுகுழையிட் டன்னை னாரித்தாய்—தகுகைவைத்தாய்
பூட்டினாய் விற்றாய் புசித்தா யிடங்கொண்டாய்
பாட்டினாற் பாவருளப் பா.

## நூல்.

நவசித்திரகவி மாலை.

முரச பந்தம்.

1 வாச தாரணி மலைவிலா ருமையே
காச தாரணி மலைவிலா ருமையே

பேச தாரணி மலைவிலா ருமையே
வாச தாரணி மலைவிலா ருமையே.

### இரதபந்தம்.

வெண்பா.

2 வாளிலகு காழ்க்கைமா வர்த்தவரார்க் கேற்றசெல்வீ
தூளிலகும் பொன்மயம்போற் றூர்க்கையுமா—வேளுவந்த
வாத்தியரு மாரு மயூர தலமழைத்தே
காத்தருளும் வீரமா காளி.

### கோமூத்திரிப் பந்தம்.

கலி விருத்தம்.

3 கனம யூரந கேசுர வேலையே
வினவு பாவவி மோசன வாலையே
கனவி யூகிந மோசுக வேலையே
கனகபாத விசேசசு வாலையே

### கமலபந்தம்.

வெண்பா.

4 பாரதா மாரமா பாரரா ஈரருா
பாரதிபொன் பாண்டியருய் பாக்கியமே—காரழகி
தீரமா யூரகிரித் தேவனையும் பெற்றெடுத்த
வீரமா காளியருள் வீடு.

### சுழிகுளப்பந்தம்.

விருத்தம்.

5 சுகமிகு தேவீ காளி
கககக னீதூ யேகா
மிகநினை யேதோ தூவீ
குகனைய ளுயே னீதே.

சதுரங்க பந்தம்.

கட்டளைக் கலித்துறை.

6 நீதி யதிதாயே போது மணியும்பர் நேசமுறு
மாதி தபோசத்தி யேழையா கும்பாவிக் காருயர்வீ
சோதியே கோமதி தூர்க்கையா யன்பருந் தோத்தரிக்க
ஓதியே நீள்வாந் தாவிர காளி யுருகுழனே.

மாலை மாற்றுக்கவி.

7 வேள யாதிக மாதுரு சாளவே
தாள வாகன மாமையி ளுளிதா
தாளி ளுயிம மானக வாளதா
வேளே சாருது மாகதி யாளவே.

திரிவஞ்சிக்கவி

"முறையாய்ப் பிரிக்க இது மூன்று வெண்பாவாம்."

வெண்பா.

8 இங்குங்கா மாகாளி யேழை மலையாம
லங்குங்கா வாகா யலைதருங்கண்—மங்கையே
கூகா வலாவெனவே கூடியழாக் கைங்கிரிய
மீகா கலா மலையா ளீ.

## திரிபங்கிக் கவி.

"முறையாய்ப் பிரிக்க இதில் மூன்று வஞ்சிப்பாவரும்.

கட்டளைக்கலித்துறை.

9 ஞானசத் தீவிர மகாளியே நந்தி நாதனுஞ்சொல்
வானமுத் தியாா மதாளியே மந்தி ராய் மயின்மா
மோனவித் தீதீர மாவாளியே முந்தையாய் முறையாய்
தானவத் தேபாா மாவேழை யேன்வந்து சார்ந்தனனே.

## நிரோட்டக மடக்குப் பஞ்சகம்.

### வெண்பா.

1 கட்கக்கைக் காளி கனகச் சிகிநாகாய்
கட்கக்கைக் கான்றார் கண்ணியணி—கட்கினியாய்
ஆரணியே யேழையனேங் கல்லலையெக் கல்லலைக்கேட்
டாரணியேய்க் கின்றனைநீத் தாள.

2 கங்காக லாதி கனகைக் கனகை யன்னாய்
கங்காக நிலன் கனிசிகிக் கற்—சங்கரீ
அஞ்சேலஞ் சேரக்கா யஞ்சேலஞ் சேலென்றே
நெஞ்சே நெகிழ்ந்தளியாய் நீறு.

3 ஆழியனை யாணிலையா யங்கயற்கண் ணாத்தாளே
ஆழியணி யாக்கை யானந்தி—தாழைநறுங்
கஞ்சக் கழலாய் கதிகாட் டதிகாரி
அஞ்சிற் களகியென்னை யாள்.

4 அட்டியிலா தாயிரத்தெட் டண்டத் தழுந் தளித்தீண்
டிட்டசிகி நாகத்தா ரெந்தாயே—கட்டழகி
கற்கண்டே தேனே கனியே கழையேநின்
னெற்கண்டே னெற்கண்டை யே

5 அஞ்சேற்கை தீர அறுகேறி யென்னருகே
செஞ்சேற் கடைக்கட் டெரிசனந்தா—இஞ்சியிலே
தேனுஞ் சிதருஞ் சிதருங்கார்க் காக்கையலர்
கானுஞ் செழிசிகிக்கற் காளி.

---

## அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

### வருகைப்பஞ்சம்.

1 பொன்னே வருக மலையளித்த பூவாய்
வருக புவிபுரக்கு

மன்னே வருக வமரருயர்த் தாசி
வருக வான்சடைதோய்
மின்னே வருக வியன்மயின்மா மெல்லி
வருக விரைந்துவா
தென்னே வீர மகாளி யெழுந்து
வருக வருகவே

2 கரும்பே வருக கருணையுருக் கவுரி
வருககற்பகப்பொற்
பறம்பே வருக பார்ப்பாரப் பாவாய்
வருகபனி மதிமேய்
சுரும்பே வருக தென்னவனீ சுதையே
வருக தூயமூர்த்தி
தரும்பே ரமுதே மகாளித் தலைவி
வருக வருகவே.

3 உமையே வருக வுலகோம்பு மொருத்தி
வருக வுயிர்யாவுந்
தமையே நோக்கத் தனித்திருக்குந் தாயே
வருக சந்திரநீர்ச்
சுமையே றாருஞ் சுகிமயின்மாத் துரைச்சி
வருக மாகாளி
எமையாள் சின்னஞ் சிறுகுழந்தா யெழுந்து
வருக வருகவே.

4 நன்றே வருக வெமது தவி நங்காய்
வருக நடந்துவந்து
மொன்றே வருக ஓவியமா யுறைந்தாய்
வருக வுமைவருக
இன்றே வருக இவண்வருக இனிது
வருக இனிவருக

மன்றே வருக மயின்மாமா காளி
வருக வருகவே.

5 ஆற்றே னாற்றே னலக்கணெலா மறிந்தா
யிலையோ வம்மம்மா
கூற்றே யனைய கொடுநோயுங் குலைக்குங்
குவட்டின் கொடிக்கொழுந்தே
நீற்றே ரமைவாய் நிலாவூறும் நெடுங்கா
வடவி நிரைமயின்மாப்
போற்றே ரதுமூர் மகாளி புகழ்ந்து
வருக வருகவே.

## சிலேடை வெண்பாப் பதிகம்.

குன்று விடையதிலுங் கூர்மடவார் கூந்தலினு
மன்று மிருக்கு மயின்மலையே—அன்றசத்தான்
றெண்டமுறக்கண் டுண்ணீர்ப்பூந் தொட்டிவிட்டா னுறுமின்
னுண்டமழக்கண் டோடிவந்தா ளூர் (பா

2 புள்ளலைசொற் பூவையர்கட் போதுமுல வாடவரும்
வள்ளலநே ரொக்கு மயின்மலையே—வுள்ளுமா
னையா னனத்து மதோமுகத்து மாறுருவா
மெய்யானைப் பெற்றவள்வாழ் வீடு

3 தேனு மிருபுரத்துஞ் சிங்கார வாலயத்து
மானு வலர்சார் மயின்மலையே—தானுக
வாயிரத்தெட் டண்ட மடங்களாள் சூரஞ்ச
வாயிரத்ன வேல்வேடா யார்வு

4 துள்ளிக்கொள் வாளைக்குந் தூயவே ணற்றேட்கும்
வள்ளிக் கொடிசார் மயின்மலையே—குள்ளமுனி
கண்டம ரிந்தவித மென்றேதி தந்தாக்கர்
கண்ட மறிந்தவர்தாய் காணி

5 தண்டீ முளரியினுஞ் சாலையினு மாமகத்தும்
வண்டீ விளங்கு மயின்மலையே—பெண்டீர்
மயக்கடுத்த வேடுவன்போல் வள்ளிமுன்போந் தேசா
மயக்கடுத்த வேற்சேய்தாய் வாழ்வு

6 பார்த்தோர் மனங்கவரும் பாவையர்மார் பாடரவும்
வார்த்தைக்கும் நிற்கு மயின்மலையே—சீர்த்தி
தருவான் றினைவளர்த்த தண்ணுதன்முன் வேங்கைத்
தருவான் றொடவளர்ந்தான் றுய்க்கு

7 கொதியா நாகினுள்ளுங் கோபுரவாய்க்குள்ளு
மதியா தவர்போ மயின்மலைமே—நிதியார்
வதிபன் னகத்துறங்கு மாயோன் மருக
னதிப னகன்று யகம்

8 தையலர்கைக் கங்கணமுஞ் சன்யாசி யானவரு
மையலை நீக்கு மயின்மலையே—பையரவத்
தாரான் றவழ்ந்தடிசார் சாமியி னிப்பிறப்பே
தாரான் றவந்தருவாய் சார்பு

9 இந்திரரும் போர்வீர ரென்பார் புயத்துணையு
மந்த்ரகிரி யைநேர் மயின்மலையே—முந்த
விடைக்கொடியார் சேரு மிராகவர்தங் கைச்சி
யிடைக்கொடியார் மகாளி இல்

10 வேலையருள் பொன்னியொடு மென்கொடியார் கொண்டை
மாலை யகலா மயின்மலையே—வாலையெனு (யினு
மாபசுந்தாய் வந்த மகிபனடி யார்க்கெளியான்
மாபசுந்தாய் வாழும் வசதி.

## கலித்துறைப் பதிகம்.

1 சிறந்தது வோதிரி லோகாதி யந்தஞ் செயம்புரியப்
பிறந்தது வோபக வான்றேவர் பேசப் பசிக்கமுதங்

கறந்தது வோயிற் றுறந்தது வோசிவ காமமிஞ்சி
மறந்தது வோவீர மாதா வாராததேன் வாழ்விக்கவே

2 பூப்பிட்ட தோமலை கூப்பிட்ட தோசிவன் பொங்குநஞ்சைச்
சாப்பிட்ட தோசம தேற்பட்ட தோநின் றளித்திருநாட்
காப்பிட்ட தோதனு மூப்பிட்ட தோகட றீப்பட்டதோ
மாப்பிட்ட தோவீர மாதா வாராததேன் வாழ்விக்கவே.

3 ஒலித்தது வோமகு டன்போரி னின்ற வுரத்தயுக்தத்
தலுத்தது வோவடி யார்க்கே யருள வலைந்ததனாற்
சலித்தது வோபா ரனொடாடு மந்தச் சபையிலுன்கால்
வலித்தது வோவீர மாதா வாராததேன் வாழ்விக்கவே.

4 களைத்தது வோமத யானையைத் தூக்கிக் களித்ததனை
விளைத்தது வோபா தேசியோ டாடினே னென்றவெட்கந்
தளைத்தது வோதன பாரப் பெருங்கிரி தந்திடையை
வளைத்தது வோவீர மாதா வாராததேன் வாழ்விக்கவே.

5 கருவின தோகற் றருகின தோபத்தர் கண்டுகொண்டு
சருவின தோசதி யாளரைக் கொன்று தருக்குரைவா
ளுருவின தோநிற்வி கற்ப சமாதியி லோய்ந்துமன
மருவின தோவீர மாதா வாராததேன் வாழ்விக்கவே.

6 இறைத்தது வோவிரு பாலரி ஞூட லெழின்மனத்தைக்
கறைத்தது வோகலி காலக் கொடியரைக் கண்டுசெக்கிட்
டறைத்தது வோவடி யேன்செய்த பாவ மனைத்துமுன்னை
மறைத்தது வோவீர மாதா வாராததேன் வாழ்விக்கவே.

7 நழுவின தோமனங் கந்தற்கு பாறந்து நற்றுளத்திற்
கழுவின தோவத ஞற்கை யுளைந்ததோ கற்றநக்கோன்
றழுவின தோசரி யாய்ப்போற்றி லாலெனத் தான்மதித்து
வழுவின தோவீர மாதா வாராததேன் வாழ்விக்கவே.

8 நிருத்தம தோபல நீடூழி காலம் நிலைத்தயர்ந்த
விருத்தம தோவிரு காப்பிய லெற்கு விலங்குனன்பிற

பொருத்த மதோவரி யாமண்ண னண்டர் புரிக்குளழும்
வருத்தம தோவீர மாதா வாரதேன் வாழ்விக்கவே.

9 வயங்கின தோவரு பாதையிற் றிக்கு வழிதவறித்
தியங்கின தோவடி யார்வாழ்வ ரென்ற செருக்கெழுந்து
முயங்கின தோமரு மான்மாரன் செற்ற முறையையெண்ணி
மயங்கின தோவீர மாதா வாரதேன் வாழ்விக்கவே.

10 ஞானம தோவறு கோடிய தோசிவ நாதமதுப்
பானம தோகுறப் பாவையைப் பாலன் பரிசித்தவோ
ரீனம தோவிள வாலிப னேரெப் படிநிற்பதென்
மானம தோவீர மாதா வாரதேன் வாழ்விக்கவே.

---

குன்றுக்குடி ஸ்ரீவீரமாகாளி அம்மன்

# கும்மி.

1 கும்மியடி பெண்கள் கும்மியடி—யிளங்
கொங்கை யணங்குகாள் கும்மியடி
வெம்மிடி தீர்த்திடும் வீரமகாளியா
மெல்லியல் கும்மியடியுங்கடி.

2 அங்குங் கெனுந்திரு மந்திரத்தா—ளனை
யாளும் நவகோண யந்திரத்தாள்
குங்குங் கெனப் பணிலங்கள் முளங்கிடுங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

3 சங்கரன்பாகத் திருந்தவளாம்—சர்வ
சாத்திர ஞாயந் தெரிந்தவளாம்
குங்குமஞ் சந்தங் கதம்பங் கமழ்த்திடுங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

4 ஈரேழு லோகமும் பெற்றவளா—மல
ரேறுங் கரும்புவில் லுற்றவளாம்
கூரேழு மேகமுங் கோபுரந் தங்கிடுங்
குன்றை வாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

5 அஞ்செழுத் தெட்டெழுத் தானுளா—மூமைப்
பிஞ்செழுத் தாகிய மானுளாம்
குஞ்சரந் தேர்பரி கோடிசூழ வருங்
குன்றை வாழ் வீரமாகாளியம்பாள் (கும்)

6 அம்பிகை யென்னு மலர்க் கொடியா—ளிந்த
அண்டத் தினிமே லெனைப் படையாள்
கும்பமுனிமுத லும்பரும் போற்றிடும்
குன்றை வாழ்வீரமாகாளி யம்பாள் (கும்)

7 வாடிடா வாசமலர்ச் சடையாள்—நம்பி
வந்தவர்தன் பந்தீர்க்கச் சடையாள்
கோடிமதி யொன்றுகூடுதல் போலொளிர்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

8 ஆகமவேத வபிப்பிராயி—என்னை
யடிமை கொண்ட வாலப்பிராயி
கோகிலங் கிள்ளை புறு மயில் கூடிடும்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

9 சாமளரூப சவுந்தரியா—கெமனைத்
தர்க்காத்தரு ணிரந்தரியாம்
கோமளவல்லி குலாசல வல்லியாங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

10 பத்தர்க்குக் கட்டுப்படுவளாம்—நல்ல
பாத்திரப் பிச்சை யிடுபவளாம்
குத்திபெறும் பெரியோர் மிகக் கூடிடுங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

11 மந்திரசித்தி வரங் கொடுப்பாள்—எமன்
வந்தால் வாராதே என்றே தடுப்பாள்
கொந்தலருங் கருங் குந்தள வல்லியாங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

12 தீராதநோ யெலாந் தீர்த்திடுவாள்—தொண்டர்
சித்தங் களித்திடப் பார்த்திடுவாள்
கூறு வருட்கவி கூறுமென் பாடிருக்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

13 நம்பின பேரைக் கைவிட்டறியா—ளெந்த
நாளுமழியாச் சின்னஞ் சிறியாள்
கும்பிடுமன்பர் குலதெய்வமாய் வருங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

14 முத்துமூக்குத்தி யலங்காரி—மலர்
மோகனமாலை கொள் சிங்காரி
கொத்துமலர்நவ ரத்தினப் பொன்முடிக்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

15 தண்டை சிலம்பணி மெல்லடியா—ளிளந்
தங்கத் துகிலணி பூங்கொடியாள்
குண்டலங் கொப்புங் கதிர்போ லொளிர்குழைக்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

17 துக்கப் படாதேயென் றுதரிப்பா—ளெந்தன்
றூக்கத்திலும் வந்து தூதுரைப்பாள்
குக்குடக் கேதனன் கோயில் விளங்கிடுங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

17 மாலை யணிந்துமுன் தோற்றிடுவாள்—கோபம்
வந்தா லுலகெல்லாம் நீற்றிடுவாள்
கோலமயில் போலும் பாலாயென்றென்னையாள்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

18 தண்டமிழ் வான்மழை பெய்திடுவா—ளெந்தன்
சத்துரு சங்காரஞ் செய்திடுவாள்
குண்டலி சத்தியாங் கோமளவுத்தமி
குன்றைவாழ் வீரமா காளியம்பாள் (கும்)

19 அல்லும்பகலுமுன் வந்து நிற்பா—ளெனக்
காறுதல் சொல்லிய முதளிப்பாள்
கொல்லை தொறுமண மல்லிகை பூத்திடுங்
குன்றைவாழ் வீரமாகாளி யம்பாள் (கும்)

20 தண்டை சதங்கை சலசலென—மணித்
தாவட மின்னிப் பளபளென
கொண்டையில் மாலை குமுகுமெனவருங்
குன்றைவாழ் வீரமா காளியம்பாள் (கும்)

21 தென்பனையூருறை புண்ணியவா—னருள்
சேருமுத்துசாமிக் கண்ணியவான்
அன்புடன் பெற்ற கணபதி பாடலை
அணியுங் குன்றை மாகாளி யம்பாள். (கும்)

---

வேறுகும்மி.

தானன தானதன தானன தானதன
தானன தானதன தன்னனத்தான தன்ன
தானன தானதன தன்னனத்தான

1 சூலாயுத மெடுத்துத் துணிந்துல கேழும் வென்ற
மேலான தெய்வ மெனும் மைவிழிப் பெண்ணே—குன்றை
வீரமா காளி யென்னும் பைங்கிளிக் கண்ணே

2 ஆதிபராபரியே யம்பிகையே யென்பவர்முன்
வேதமுடிவாகி வரு மைவிழிப்பெண்ணே—குன்றை
வீரமா காளியெனும் பைங்கிளிக் கண்ணே

3 எட்டுரலேந்தாலு மிரந்தே குடித்தாலும்
விட்டுப் பிரிவோனுநான் மைவிழிப் பெண்ணே—குன்றை
வீரமாகாளி யெனும் பைங்கிளிக் கண்ணே

4 உன்னை மறந்தேநா னுலகத்தாரோ டலேயேன்
மின்னும் பரஞ்சோதி மைவிழிப் பெண்ணே—குன்றை
வீரமாகாளி யெனும் பைங்கிளிக் கண்ணே

5 அன்ன நடையழகு மைங்கோலப் பட்டழகும்
முன்னழகும் பின்னழகு மைவிழிப் பெண்ணே—கண்டு
மோகமுறு தருள்வாய் பைங்கிளிக் கண்ணே

6 சேலையழ குமணச் சிந்தூரப் பொட்டழகும்
காலழகும் கையழகு மைவிழிப் பெண்ணே—கண்டு
காமமுறு தருள்வாய் பைங்கிளிக் கண்ணே

7 வாலவயத ழகு மதிநேர் முகத்தழகும்
மேலழகுஞ் சூலழகு மைவிழிப் பெண்ணே—கண்டு
மிரளா தருள்புரிவாய் பைங்கிளிக் கண்ணே

8 முல்லைக்குழலழகு முத்தாரத் தோளழகும்
பல்லழகுஞ் சொல்லழகு மைவிழிப் பெண்ணே—கண்டு
பாயாதருள் புரிவாய் பைங்கிளிக் கண்ணே

9 கங்கணங் காப்பழகுங் களபத் தனத்தழகுஞ்
சிங்கா சனத்தழகு மைவிழிப்பெண்ணே—கண்டு
தேங்கா தருள்புரிவாய் பைக்கிளிக்கண்ணே

10 அல்லி யிதழகு மாரமணி மூக்கழகுஞ்
சல்லாவின் வாரழகு மைவிழிப்பெண்ணே—கண்டு
தயங்கா தருள்புரிவாய் பைங்கிளிக்கண்ணே

11 நூல்போ லிடையழகும் நுதலின்வெண் ணீறழகுஞ்
சேல்போல் விழியழகு மைவிழிப்பெண்ணே—கண்டு
திக்கா தருள்புரிவாய் பைங்கிளிக்கண்ணே

12 புருவக் கருப்பழகும் புன்முறுவல் வாயழகும்
மிருகன்னச் சீரழகு மைவிழிப்பெண்ணே—கண்டு
ஏங்கா தருள்புரிவாய் பைங்கிளிக்கண்ணே

13 சங்கக் கழுத்தழகுந் தங்கப் பதைக் கத்தழகுந்
தொங்குமலர்த் தாரழகு மைவிழிப்பெண்ணே-கண்டு
தொழவே யருள்புரிவாய் பைங்கிளிக்கண்ணே

14 வள்ளையாங் காதழகும் வைரமணித் தோடழகும்
புள்ளிமயில் போலழகு மைவிழிப்பெண்ணே—கண்டு
போற்ற வருள்புரிவாய் பைங்கிளிக் கண்ணே

15 கொண்டை முடிப்பழகுங் கூறுல் வயிற்றழகும்
நண்டுமுழந் தாளழகு மைவிழிப்பெண்ணே—கண்டு
நமஸ்காரஞ் செய்யவருள் பைங்கிளிக்கண்ணே

16 இலுமிச்சம் பழம்போ லிலங்குகுதிக் காலழகுந்
துலங்கும் நகத்தழகு மைவிழிப்பெண்ணே—கண்டு
துதிக்க வருள்புரிவாய் பைங்கிளிக்கண்ணே

17 அம்புறுத் தூணியைப்போ லமைந்தகணைக் காலழகுஞ்
சண்பகப் பூந்தாளழகு மைவிழிப் பெண்ணே-கண்டு
சார்தற் கருள்புரிவாய் பைங்கிளிக்கண்ணே

18 முத்துப் பல்லக்கழகு மொய்தாதி மாரழகும்
பத்திகொள் தீபத்தழகு மைவிழிப் பெண்ணே-கண்டு
பாடிப் பணியவருள் பைங்கிளிக் கண்ணே

20 தேவாதி தேவர்களுஞ் சிறந்துரை குன்றைநகர்ப்
பாவலன் கணபதிசொல் மைவிழிப் பெண்ணே-அருள்
பாலிக்கு மகாளிப் பைங்கிளிக் கண்ணே.



## வேறு கும்மி.

---

1 ஆதிமுதற் பொருளே—வீரம்மா
அண்டமெல் லாம்படைத்த
சோதியே குன்றையில் வாழ்—வீரம்மா
துர்க்கை பரா பரியே

2 நீதி நிரைந் தவளே—வீரம்மா
நீலநிறக் குயிலே
தாதியர் சூழவரும்—வீரம்மா
சற்குண யீஸ்வரியே

3 எங்குமி ருப்பவளே—வீரம்மா
ஏழைக் கிரங்கிடுவாய்
மங்கள வம்பிகையே—வீரம்மா
மாமலை பெற்ற பெண்ணே

4 கருணை பூத்தவளே—வீரம்மா
கற்பனைக் கெட்டாளே
தருணம ங்கலையே—வீரம்மா
சர்வ தயாபரியே

5 மின்னுஞ் சடையுடையாய்—வீரம்மா
வெற்றுஞ் சூலப்படையாய்
அன்ன மென்னும் நடையாய்—வீரம்மா
ஆடகப் பூங் குடையாய்

6 கன்னன் மொழியாளே—வீரம்மா
கயல் விழியாளே
மின்ன லொளியாளே—வீரம்மா
வேத வழியாளே

7 மாணிக்கம் பூண்பிடியே—வீரம்மா
வைர மலர்க்கொடியே
ஆணிப்பொன் பைந்தொடியே—வீரம்மா
அண்டினேன் சேவடியே

8 முத்துப் பல்லக்கேறி—வீரம்மா
முன்வருஞ் சிங்காரி
சத்துரு சங்காரி—வீரம்மா
சர்வ விவகாரி

9 மாலை யலங்காரி—வீரம்மா
வாவா வோங்காரி
வாலை யெனுஞ்சூரி—வீரம்மா
வராகி ரீங்காரி

10 அஞ்செழுத் தெட்டெழுத்தாய்—வீரம்மா
அன்பத்தோ ரட்சரமாய்
கொஞ்சிடு மீரெழுத்தாய்—வீரம்மா
குலவி நின்றாளே

11 என்னுளே நின்றவளே—வீரம்மா
என்னையெ னக்கருளி
தன்னை யறிந்துகொள்ள—வீரம்மா
தந்திரஞ் சொன்னவளே

12 காண்பான் காட்சியும்போய்—வீரம்மா
கலந்தி ருப்பதற்கு
மாண்பாய்க் காட்டிவைத்த—வீரம்மா
மலரடி சரணம்

13 என்னை யறிவதற்கே—வீரம்மா
எத்தனைநா டவித்தேன்
உன்னருளா லுணர்ந்தேன்—வீரம்மா
வுதவியொன் றறியேன்

14 பட்டபாடு கொஞ்சமா—வீரம்மா
பாழுக்குளைத்தலைந்து
கெட்டகே டென்ன சொல்வேன்—வீரம்மா
கேட்பதும் வெட்கமன்றோ

15 பொருளி னுவலதும்—வீரம்மா
பூவையர் மாய்கைகளும்
அருளைக்கண்டவர்க்கே—வீரம்மா
அருவருத்திடுமே

16 ஆசா பாச மெல்லாம்—வீரம்மா
ஆகுமோ ஞானிகட்கு
பூசாவிதி யுமுண்டோ—வீரம்மா
பூரண முத்தருக்கே

17 சாதிபேத முண்டோ—வீரம்மா
தன்னையறிந்தவர்க்கு
வாது வம்புமுண்டோ—வீரம்மா
வைராக்யத் தார்க்கே

18 மடந்தட மெதர்க்கு—வீரம்மா
மன நசித்தவர்க்கு
இடம் பொருளெதற்கு—வீரம்மா
இச்சை யொளிந்தவர்க்கே

19 கோயில் குளமெதற்கு—வீரம்மா
குறிப்பறிந்தவர்க்கு
காயசந்தானெதற்கு—வீரம்மா
கடுந்தவத் தோர்க்கே

20 இருங்கோப மெதற்கு—வீரம்மா
எல்லா மானவர்க்கு
அறம் பொருளெதற்கு—வீரம்மா
ஆத்மவிசாரணைக்கே

21 பொற்பணி தானெதற்கு—வீரம்மா
போதக மோதுவர்க்கு
கற்பமுந்தா னெதற்கு—வீரம்மா
கலந்து கொண்டவர்க்கே

22 பெரும்பொல் லாப்பெதர்க்கு—வீரம்மா
பேணுமடியார்க்கு
தரும்பேரின்பருக்கே—வீரம்மா
சம்போகந்தானெதற்கு

23 மோகதாகம் வருமோ—வீரம்மா
மோட்சமடைபவர்க்கு
ஆகநினைப்புறுமோ—வீரம்மா
ஆனந்தங் கொண்டவர்க்கே

24 கள்ளக் கருத்துமுண்டோ—வீரம்மா
காணமற் கண்டவர்க்கு
உள்ளே விருத்தியுண்டோ—வீரம்மா
ஒன்றாய் நின்றவர்க்கே

25 உன்னை மறப்பேனோ—வீரம்மா
உண்மையிலே கலந்தால்
என்னை நினைப்பேனோ—வீரம்மா
ஏகவெளியரச்சே

26 மருவி நிற்குமிடம்—வீரம்மா
வாசமகோசரமே
உருவிருக் கினன்றோ—வீரம்மா
உன்னடி போற்றிடுவேன்

27 வெட்டவெளிதனிலே—வீரம்மா
விளைந்த போரொளியே
இட்டமறத் தனியே—வீரம்மா
எவ்வாறிருப்பதுவே

28 கண்ணே மணிவிளக்கே—வீரம்மா
கற்பகம் போல்பவளே
விண்ணோநிகர் விளங்கும்—வீரம்மா
வேதாந்த மெய்க்குருவே

29 காலங் கடந்தவளே—வீரம்மா
கர்த்தவியத்தாயே
மாலை மணிக் கழுத்தி—வீரம்மா
மயில்மாலைக் காளி

30 தெச்சிணு மூர்த்தியருள்—வீரம்மா
சேர்ந்தமுத்துச்சாமி
நற்சேய் கணபதி சொல்—வீரம்மா
ஞானப் பதம் நமஸ்தே.

குன்றக்குடி

ஸ்ரீ வீரமாகாளி அம்மையார் பலபாமாலை

முற்றும் சுபம்.





உ

ஓம். ஸ்ரீ குருவேநம:

ஸ்ரீதேவாதி மகான்கள்

# திருவருண் மாலை.



## காப்பு.

எழுசீர்.

இறைவருந் தொண்ட ருள்ளத்தி லொடுக்க
மென்றகட் டுமைக்கிலக் காகு

முறைவரும் பெரியோர் மாட்டும் யாமொழியிம்
முனிவிலாத் திருவருண் மாலைக்
கறைவருங் கடல்சூ ழவனியிற் காப்பொன்
றறிந்தில மன்னவர் துணைத்தாட்
பொறைவரு மிறம்பூ தரும்பூவாற் போற்றிப்
புகழ்கிலா தென்புகல் வதுவே.

---

## ஸ்ரீ தேவாதி மகான்கள்

# திருவருண் மாலை.

### சந்த விருத்தம்.

### ஸ்ரீ விநாயகர் காப்பு.

1 தனனதான தந்தனதன
தனனதான தந்தனதன
தனனதான தந்தனதன தந்ததான

கமலைவாணி யம்பிகைசசி
யரிபுராரி சம்பிறைசுரர்
கவிஞ ரேவருங்காதல கொந்துதாவும்

கடவுளாகு மைங்கரகய
சிரவிசேட வங்குசபச
கருணைமேரு வென்றொருமுறை நம்பியோதும்

எமதுபாவ வெம்பிறவிக
ளினிவராது வந்திசைகுமி
றினியநாத செங்கழலரு ளென்றபேர்முன்

இரவிகோடி யொன்றெனவிளை
பிரமஞான மன்றதினடு
விணையிலா தெழுந்தருள்புரி சம்ப்ரதாயா

அமலனே நிரந்தரவர
மகிபனே மகந்திகழ்பவ
வசுரநாச குஞ்சரிமண கந்தநாதன்

அகமுகோதி கொண்டவர்பணி
முதியவேத கொண்டையினடி
அரகரா வகண்டவெளியு ளண்டதீதா

சமசுவேத வெண்டிருவொளி
பாவயேழை கண்டருள்பெறு
சமயமீது வந்தருள்பொழி சந்தபாடல்

சகலலோக மும்புகழ்பெற
விளைய்வோது துந்துணைபுரி
சரணமேக தந்தவாத எம்பிரானே

---

## ஸ்ரீ விநாயகர் துதி.

2 தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான

அத்தத் திருவெற்பைக் கடமரை
மொட்டைச் சிதர்வித்து சரவட
மற்கப்புடை கச்சைபிதிர் குளிர் தனமீதே

அப்பற்புத செச்சைக் கலவைகள்
குப்குப்பெனு மிக்கப் பரிமள
மைக்யப்பட முத்தத் தலர்சொரி குலறாவி

முத்தத்தை மருட்டித் திகழ்நகை
மெத்தத்தவ துத்தத் துவரிதழ்
முக்கட்கனி யொக்கக் கவினுற மயில்போலே

முற்பட்டுல விச்சுற் றினைஞர்கள்
சொத்தத்தனை கைப்பற் றிடுவரை
முத்திச்சா சத்தைப் புரிபவ ருறவாமோ

சுத்தப்பிர மத்திற் கனலன
லொத்துப்பிணை சத்திச் சிவமணி
தொத்துக்கரு ணிர்த்தப் பதவுமை யவிராவி

துக்கத்தை யுறக்கத்தையும் விடு
புத்திக்கொரு கட்பத் தெளிவளி
துர்க்கைக்சிவை சித்தத் வைதகதி தருமாதா

அத்தத் தழுகுற்றுத் திகழ்பவ
வித்வத்ததி பற்றுற் றமைபவ
வத்தர்க்கொரு சற்புத்திர வர கணநாதா

அப்பக்கா ரட்சித் தருளென
வர்ச்சித் தெதிர்குட்டித் தொழுதனை
யற்குட்புகு கட்புக் கயமுக பெருமானே

---

## ஸ்ரீ குமரேசர் துதி.

3 தனந்தந்ததான தனந்தந்ததான
தனந்தந்ததான தனதான

தனங்கொண்டுசேரு தனங்கொண்டபார
தனங்கொண்டமாதர் சவகாச
சளங்கொண்டபாவி யுளங்கொண்டுமேவு
தவங்கொண்டுலாவி வரவேணும்
பணிந்துந்தெய்வானை மணந்தஞான
பரங்குன்றில்வாழும் பரைபாலா
படர்ந்தம்பெய்சூரர் மடிந்தங்கநீறு
படுஞ்செந்தில்வாழும் வடிவேலா

மனங்கம்பமாக விணங்கும்பர்கூடி
வயங்கின்பனேப முனிவேளே

வரந்துன்றுசீட ரெனும்பண்போடீசர்
வணங்குஞ்சுவாமி மலைவாழ்வே

தினந்தொண்டர்கூட நடந்துங்குலாவு
சிறந்தொன்றுசோலை மலைநாதா

திருந்திந்த்ரர்கூற வருந்தந்த்ரவீர
செழுங்குன்றைவாழும் பெருமானே.

---

## ஸ்ரீ சிவன் துதி.

4 தனன தந்தந் தனன தந்தந் தனனதந்தந் தாதந்தந்
தனன தந்தந் தனன தந்தந் தனனதந்தந் தாதந்தந்
தனன தந்தந் தனன தந்தந் தனனதந்தந் தாதந்தந் தனதான

அமுத சிந்துங் கமழு கொந்துங்
கரியவண்டுங் கோதண்டன்
கணையு நஞ்சுங் கயலு மஞ்சுங்
கவினுறுஞ் செங்கோடண்டன்
பலைபடும் புங் கவிழி கொண்டிந்
திரைவணங்குஞ் சீர்பொங்கங் கவினேதம்

அரிய தென்றும் புலவர் சந்தம்
புகலமன்றஞ் சேர்குஞ்சஞ்
சொரு கிடுந் தண்டொடைய டங்குங்
குழலவிழ்ந்தும் பாய்சிந்தின்
பழகிலங்கும் படி நடந்துங் குயிலிணங்
குஞ்சீர் விண்டுந் திகழ்மானர்

தமை வியந்தும் பொருள் புரிந்துங்
கலவிகொண்டுந் தாதெங்குந்
தளர விந்துஞ் சிதர நொந்துந்
தடியடைந்துங் கூனென்றுந்
தரை யிருந்துங் கிழவ னென்றுந்
தலைகுனிந்தும் பாலுங்கஞ் சியுமேலாச்

சளமு டன்றுெங் குதர மந்தம்
படிய நுங்குஞ் சீழுந்தண்
சளியுமி ழ்ந்துங் கடிய தந்தம்
பலவிழுந்துஞ் சீயென்றுஞ்
தனது சொந்தஞ் சிலவிக ழ்ந்துஞ்
சினமுறுஞ் சங்கடசங்கண் டறவாடி

சமு சயங்கொண் டறிவு சென்றும்
பதரிநொந்தும் பாழுங்கந்
தவிர் முனுஞ் செங்கழுனி னைந்துஞ்
சிசியர் தங்கண் டாணின்றுந்
சகல தொண்டும் புரிய வின்றிங்
கருளிடுஞ்சம்போ சங்கந் திகழோரா

சமரி குன்றங் குமரி கந்தம்
புனுகுதங்கம் பாள்குந்தந்
தமரு கங்கங் கணமி லங்குங்
காவணங் கஞ்சாநெஞ்சந்
தரு பசும்பைங் கொடி வளங்கந்
தரிமணங் கொண்டாடுஞ்செந் திரிசூலா

குமுத கும்பன் றகை மிகுஞ்சுந்
தாரனந்தம் பாடுங்கந்
கறவி ளங்குங் கடவு ளென்றுங்
கருணைபொங்குங் கானந்தங்

குறதி தொந்திந் தாவொ டுங்கஞ்
 சூர்முகுந்தன் றேவென்றுந் தொழவாழ்வாய்

குழவி யொன்றன் றசை யறிந்துங்
 கறிசெயுந்தொண் டோநம்புங்

குரவ னென்றும் பரம னென்றுங்
 குவலயங் கொண்டாடுங்குங்

குும சுகந்தங் குமுகு மென்குங்
 கயிலைதங்கெங் கோவென்கும் பெருமானே

---

## ஸ்ரீ விட்ணு துதி.

---

5 தனன தனந்தன தான தான தான
 தனன தனந்தன தான தான தான
 தனன தனந்தன தான தான தான—தனதான

இரவினு மூந்தன்மி னுவா யானே தானே
நினைய வரந்தா வாவா யாவா வாவா
விகபர சொந்த பிரானே கோனே தேனே பகவானே

இரணிய னங்குட லாரா தீரா வீரா
யிரணிய பைங்கொடி பூமா தாமா லாமா
விறைதுள பம்புனை வாகா யோகா யூகா சுகபோகா

அரவ வடங்கெட வாடா வேசா பாசா
மழக ரெனுந்திரு ராமா வாமா பூமா
அலையி லுறங்கிய கோபா லாபூ பாலா ரகுராமா

அயனம ருந்தியி னூரா தாரா ராரா
மணியணி செங்கழ லோரா வாரா தாரா
அரிய விலங்கையி னூரே நேரே போரே றனுமானும்

ஒருவரை யங்கையின் மேலே நூலே போலே
கொடுவரு மங்கல ஞேதா ரூடா பீடா
ருளவுற வைந்தினர் தூதா வேதா தீதா நிதபோதா

உததிக டைந்த வுதாரா சீரா ரூரா
கெருட துங்க குபேரா கீதா சாரா
வுபய பதந்தரு மோவா மூவா மூவா தனுசார்வா

கிரண மிருந்த கிரீடா மாஞ ரோடே
திரிதரு சுந்தர மாயா மாயா தூயா
கிருபை சுறந்த பிராயா நேயா வேயா விசைபாடும்

கிருத செழுங்கனி வாயா வாமே யாயா
வார்பலி யன்றுகொள் சீமா னேமா நேமா
கெதியெனு மன்பர் சகாயா தாயா நேயா பெருமானே

---

## ஸ்ரீ பிரமா துதி.

6 தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தனதான

ஆடகவிழுங்கை சூடுகுழல் தொங்க
லாடவரு தங்க நிறமாதர்

ஆதவன் மழுங்கு வாரது பிளந்து
மாமலை புந்தை யிகழ்ந்பேசும்

கோடன நிமிர்ந்த சீதள சுகந்த
கோலமணி கொங்கை மயலாலே

கூடுகனவின்க ணூடு புணர் விந்து
கோவண நனைந்து மொழுகாமற்

பாடக மணிந்த பாதமது தந்து
பாலனை யுவந்து வரமீவாய்

பாரள வுணர்ந்த வாயர் தருமைந்த
பாகலை யறிந்த சதுர்வேதா

தோடவிழ் மணங்கு பூடண மணிந்த
தூமகுட துங்க பிரமாவே

தோகையர் நெருங்கு வாணியெனு மங்கை
தோய்மலர் விளங்கு பெருமானே.

---

## ஸ்ரீ ஈஸ்வரி துதி.

7 தான தானதன தத்தா தத்தா தந்ததான

ஆதி சோதியுதி சத்தேசித்தே யென்றுநாளும்
ஆவலாயருள மைத்தே முத்தே கங்களான
ஓதியோ டதிசயித்தே யிஃதே சங்கள்யாவும்
ஓது பாடல்செய வுத்தே சித்தே நின்றயேழை
மீதுநீ கிருபைவைத்தே வித்யா சங்கடமாய்
மீனலோ சனவிளக்கே வித்யா சங்கபூவாழ்
நீதியே நெடிய முச்சூலச்சா முண்டிகாளி
நீலயே வடிய ரைக்கா பொற்கா லம்பிகாவே

---

## ஸ்ரீ இலக்குமி துதி

8 தனதன தத்தன தந்தா தானன
தனதன தத்தன தந்தா தானன
தனதன தத்தன தந்தா தானன—தனதான

கடல்மு னெடுத்த ரசந்தானோ திரி
கனிகழை சர்க்கரை செந்தேனோ பசு
கறவைசெய் புத்தமு தந்தானோ வென மொழிமானர்

கணைவிழி பட்டலை கின்றூயே வட
சிறுவநி னக்கரு டந்தேவாழ் வழி
கழறுது மிக்கண மர்ந்தே கேளென வழுவாமல்

அடல்படு தற்சொரு பங்கேள் வீசிட
மனது ரமிக்க மலர்ந்தா லோசனை
யகல விருத்தி யகண்டா காசி வசமாதி

அபரிமி தச்சுக சந்த்ரா வாகன
பதியில் விசித்ர செழும்பூ மேடையி
னருகி லழைத்து முகம்பா ராவிடி லடியேனல்

மடமை பிடித்து மலைந்தா னேநிக
ருலகி லுளைத்து வெறும்பே ரோடொரு
வயிறு வளர்த்து மெலும்பாய் மேனியு மெலிவாகி

வறுமை வினைக்குள் வதிந்தே நோயொடு
குருகி யிளைத்து ருகுந்தீ தாதிகள்
வலிய விழுத்தி டறுங்கே டேபட முடியாது

நடமது சர்ப்ப படம்பா லேபுரி
ரகுபதி மெச்சு கரும்பே பூமியில்
நாசுரர் சித்தமுறுஞ் சீரே தரு பாரதேவி

நலவலை பெற்றிடு கொம்பே மாரனை
யுதவிய வுத்தமி சம்பே தாயெனு
நளின்வி லக்குமி யம்பாளே வா திருமாதே

---

## ஸ்ரீ சரஸ்வதி துதி,

9 தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன—தனதான

சிவப்ப ரம்பொரு டெருளிரு மறிவொளி
நினைத் துளந்தனி லகமுக தரிசன
செபத்து றம்பரி வொடுசரஸ்வதிநம வெனவோதும்

சிரத்தை யின்றிய சிறுவனை யரிவையர்
புறத்தி ழிந்திடு புலையனை வலையனை
சினக்கு ரங்கினை நிகருழல் பழிபவ வினையேனை

தவத்த ரும்பா ரிறையரி முராகரி
தனக்கு முந்திய வொருவெளி தருசுழி
சகத்து மின்றிய குறிகுண மிருள்பக லணுகாவோர்

சமுத்தி ரந்தனி லகமலர் வொடுபுணர்
சமர்த்தெ னும்பர கதிபெறு முதுவழி
தனைத் தெரிந்திடு திருவருள் புரிவது மொருநாளே

அவத்தர் வஞ்சக ரிளையவர் பரிவறு
மடத்தர் சஞ்சல ரெளியவர் பொருள்கவ
ரகத்த ரண்டினர் மனைவிழை மருவிடு மதியாயர்

அசுத்தர் வெம்பசி யொடுவரு பவர்துய
ரகற்ற லின்றிய கருமிகள் கருவிக
ளசத்தி யம்புரி யசடர்க ளிருதய மடையாள்யான்

துவக்கு செந்தமிழ் வலர்வன சரநுள
மலர்ப் புகுந்திடு பவனென வடியவர்
சுரர்க்கு முன்பருள் சுடர்மணி படர்புய விசையாழி

துளிர்த்த வெண்டளிர் நிறமுறு பரிமள
மிகுத்த சுந்தர துரைமக னெனவரு
சுகப்பி ழம்பென வயனிலை யதிசய கலைமாதே

---

## ஸ்ரீ சூரியன் துதி

10 தனன தானன தனன தானன
தனன தானன—தனதான

திருவர் தான்மரு விருவெ ளுயிரர்
சிறிதும் நாமழ கிலமேயென்




செழுமொய் யாரிக ணளின பூண்முலை
செரிம தாகா மதின்முழ்கி

வெருவி நோயொடு குருகி மானிட
விதிகள் மாறியு முழலாமல்

வினவு ஞானிகள் மனதிலே திகழ்
வெளிகொள் சோதியை யருள்வாயே

சருவ லோகமு மறிவதா யிரு
டடியு மேழ்புர விகொளோர்காற்

சகடை மீதனு தினமி மாசல
தலமு மேவலம் வருவோனே

கருது நேமத விரத பூசகர்
கவலை பேய்பிணி யறவாளும்

கருணை யாவுல கிலகு பூரண
கதிர்கொள் சூரிய பெருமானே.

---

## ஸ்ரீ சந்திரன் துதி.

11 தந்தன தான தந்தன தான
தந்தன தான—தனதான

வண்டிறை வாச செண்டணி கேச
மங்கையர் பாச மயலாலே

மஞ்சள் சவாது சந்தன மாலை
மன்றம னேக விதமீயும்

குண்டனெ னுக மண்டமு நோய்கள்
கும்பியின் வேதை வினைதீர

கொஞ் சறிவாகி மஞ்ச முதூறு
கும்பமு மான செயலேதோ

பண்டக மீது கண்டவர் தீமை
பங்கதி பீடை யறநேரோ

பண்டிதர் சிவ ரண்டரு மோது
பண்புறு சீத மயமாக
வெண்டர ளாதி கொண்டிசை தேரில்
விண்டல மீது வருநாதா
விண்டார் சூடு சந்திர சோதி
விண்டிடொ ணாத பெருமானே

---

## ஸ்ரீ செவ்வாய் துதி

12 தத்ததன தத்ததன தத்ததன—தனதான

கட்கமட ரக்கமினர் கைச்சரிவீ சழகாலும்
கட்பருமா ரப்பதமார் கத்துமினா புரதாளில்
வெட்கமிலா துற்றுமையோ மிச்சையின லுழலாமல்
வித்வர்சிரே கித்திடவே மிக்கமகா கவிஞோனாய்
நட்பொடுயா வற்றினும்நா னற்கிருபா வடிவாக
நத்தறிவே பெற்றிடநோய் நட்டமுறு தெழிலீவாய்
முட்டெழுநா வைத்தவனு முப்புரமீ றசவாகா
முக்கணர்மே வக்கினியா முத்தசெவ்வாய்ப் பெருமானே

---

## ஸ்ரீ இராகு துதி

13 தானதான தானதான தானதான—தனதான

ஆரவார வீரசூர ராகமீரல் குடலீபே
யாடிமேய வோடியாயு மாதிசோதி வடிவேல்போல்
ஆரிரேகை சேர்கடுர வாலதாரை விலையாரை
ஆயமோடு கூடிடாம லாயுள்ஞான தவமீவாய்
மாரனேம னீறவோது மாசிலாத நடராசர்
மாடுமீது மேறுமீசர் வாலபூணு பணியாகி

நாரதாதி தேவர்மூவர் நாகலோகர் பலசீவர்
நாவினுன்ம காளெனிடில் ராகுவான பெருமானே

---

## ஸ்ரீ பிரகஸ்பதி துதி

14 தனதன தனந்ததான தனதன தனந்ததான
தனதன தனந்ததான—தனதான

தமனிய சதங்கைபீலி சரவட சிலம்பொடாழி
தரிசர சிவந்தபாத வழகாலும்
சலதியி லெழுந்தமேக நிலைமயிர் சரிந்துமுச
றாவரு பசுந்திளுலு முலையாலும்
நமனுடு கதண்டுபாண மயில்கடு நடுங்குகாவி
நறுவரி படர்ந்துலாவு விழியாலும்
நகைபுரி யரும்பினுலு முளைமுதிர் கரும்பினுலும்
ரகசிய நிதம்பநாக படமீதே
கமழுனே புணர்ந்துகூடி யிதமொழி பகர்ந்துசோடி
கருதிளை ஞரங்கசோரி கவர்மாதர்
கலவியில் மயங்கிடாது கவிபல வியம்பியீகை
கருணையொ டகண்டவாழ்வு நலமீவாய்
குமாரு மனந்ததேவ ரமாரு மகிழ்ந்துபேசு
குருவென வரும்வியாழ பகவானே
குறைவறு சுகங்கியாதி திரவிய மகங்கள் யோக
குணமண மிடுந்தியாக பெருமானே

---

## ஸ்ரீ சனீஸ்வரர் துதி

15 தனதானன தனதானன தனதானன—தனதான
தனிசேர்முனி வருமானசைகொள் சசிநேர்வரு மிளமானூர்

தனையேநினை வினைதீமைகள் சயகாசமு மிருள்பேயும்
அநியாயமு மடியார்தமை யணுகாவகை யருள்வோனே
அறியார்தமை மிருகேவல மதுவேசெயும் வகையோலே
இனியேசெய நினையாதெனை யிகழாதொரு வரமீவாய்
இறையீசனு மொருகாலமு ளிடரேபட விடுவீரா
தனபூடன முடவாய்பல தாரகமு துகிலேறும்
தவனேதில சுடர்வாடைகொள் சனியீசுர பெருமானே.

---

## ஸ்ரீ புதன் துதி

16 தத்தன தனனு தத்தன தனனு
தத்தன தனனு—தனதான

இக்கலர் மதவேள் புக்கிருள் குழலா
ரிற்றெனை வியலா திடுவீலை
இச்சையி லடியே னுட்சள மடையா
தெக்கிய முனிவோர் தொழுபானு
செக்கதிர் வெளியே நிற்குமெ முமையாள்
சித்திகொள் சிவைவா ணுதல்காளி
செட்டியி னனேகா யத்திரி செபமா
தெற்கருள் புரிமா தவள்வாலை
கொக்கரி குறள்பூ தப்பரி யுடையாள்
கொத்தலர் குழலாள் புகழ்பாடி
குத்திகொள் பெரியோ ரைத்தொழு தெனையே
கொட்புற வறிபி டொடுவீடும்
புக்கரு ளிகயோ கப்பொருள் புகழ்தா
புத்தக காபூ சுரசேமா
பொற்பதி கதிர்சேய் சற்குண னெனவே
புத்திசொல் புதனும் பெருமானே

## ஸ்ரீ கேது துதி

17 தானதானன தானதானன
தானதானன—தனதான

தோகைபோல்வரு வாகுமாதர்க
டோள்களேகதி யெனமாலார்

சோகமோடதி மோகமாயுழல்
தூஷணுகிக டவிராதோ

ஈகையாய்நினை மாகலோகரு
மீடிலாவொரு தனேயேகா

ணோர்பராபர சீர்கொள்போதனை
யேசுமாதவ வலுவோனே

வாகைசேர்புய நாகமாதலை
மாணிடாகமு முடையோனே

மாசிலாமணி யேநவாதியர்
வாழ்விலேவுய ரநுகூலா

கேகயாசல வேள்வியாபக
கேள்விநோதமு மருள்ஞானி

கீரபோசன கோரமாசன
கேதுவாகிய பெருமானே.

---

## ஸ்ரீ சுக்கிரன் துதி

18 தனதத்தன தனதத்தன
தனதத்தன—தனதான

மதவித்தைகொள் மதிவிற்கிணை
மதிபொட்டணி நுதல்மாதர்

மனதிற்கிசை வசனத்தொடு
மருவிப்புரி மயதீர

நிதமத்வைத கதியைத்தரு
நிலைசெப்பியெ ணகஞேயை

நிமிடத்தினி லறவெற்றிநி
னிதியைத்தா நினைவாயே

சதிசற்பனை மதமுட்பகை
சளமற்றிடு தவமீவாய்

சனநட்புறு வசியத்திசை
தனைமுற்பட வருள்வோனே

பதிவுற்றெளி ரசாக்குரு
பாசர்க்குண மிகுவீரா

படிமெச்சிடு மனைமுத்தருள்
படைசுக்கிர பெருமானே

---

## ஸ்ரீ பூமாதேவி துதி

19 தானு தானன தானு தானன
தானு தானன—தனதான

மானே மாகடு தானே போரிடு
வாளோ வீதெனு விழிமாதர்

மாயா மாருத லீலா வாருதி
மாயா தாயுளு மனவார்வும்

வானோர்கோடி வாமேல நானென னை
மாறுதே யுணர் பெருவாழ்வும்

மாசி ஞதிக ளேசா வாசுரை
வாய்பே சாவொரு நிலைமேவும்

தேனே டாசல மாதே வாதிகள்
சேர்தே சோமய சுகசார்வும்

சீடா நீபெற வாயீ தோகழு
றேடா தேயடை யெனவாள்வாய்

பூநோ வாதிறை மாசீ வாதிகள்
பூணு ணுர்பொறு மைகொடாயே

பூர்வா வாகன லோகா தாரணி
பூமா தேவியெ னருள்மானே.

---

## ஸ்ரீ வருணபகவான் துதி

20 தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த—தனதான

அழகுவளர் பூணணிந்த புனுககில் சவாதுசந்த
மலர்சசி பனீர்திமிர்ந்த தன்மாதர்

அரவபட தேர்நிதம்ப மனவாத மேவிரும்பி
யலையுமடி யேனுடம்பு மெலியாதாள்

குழகனபி ராமிதந்த கலியுக பிரானனந்த
குகைவளர்மு னீசர்வந்து புகழ்பாடும்

குருபா னபூர்வகந்த னறுமுக னதோமுகங்கொள்
குருகனடி யார்கள்பங்கி லருளீவோன்

தழல்நயன சூராங்க வுமுறிய வேலெறிந்து
சரவணப வாவெனுஞ்சு ரரையாள்வார்

தளியிலுயர் வானகுன்றை நகரிலுரை வேள்வளர்ந்த
தடவடிவ தாகிநின்ற வுயிர்வாழ்வே

மழலைமொழி ஞானவண்ட ருலகிலுரை சீவசெந்து
மகிழவலை மீதெழுந்து வருவோனே

வாததவ வேள்விதங்க மதிதொரு முமாரிபொங்கி
வருவருண நாதனென்ற பெருமானே.

---

## ஸ்ரீ அக்கினிபகவான் துதி

21 தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன—தனதான

குவடொ டுக்கிய சுவடி றுக்கிய
குவிமு லைச்சியர் மதகாம

குகையி னித்தலு மனத லுத்துடல்
குருதி வற்றியு மெலிவாகி

அவமெ னப்பொழு ததுக ழித்திடு
மசட னெற்கரு ளெழுதாறும்

அமல சிற்சுக மதை யளித்தெம
தலல்ப வப்பிணி யறவாள்வாய்

புவன மெத்தகை யதும் விதிப்படி
பொடிசெய் சத்தியு முடையோனே

புகழ்கொள் சத்தியர் சாவணப் பொய்கை
புகமு னத்தா னுரைபோலே

தவசிகட்குயர் வுறவெடுத்திடு
தகைகொ ளக்கினி பகவானே

தருமகத்தியர் முதல்மகிழ்ச்சி கொள்
சகவி ரட்சக பெருமானே.

---

## ஸ்ரீ வாயுபகவான் துதி

22 தானதன தானன தானதன தானன
தானதன தானன—தனதான

மாயைவடி வாமாதர் காமமய லேமீறி
மானமற லீலாவில் மிகவேகி

மாடன சதாவேலை யான்மெலி மகாபாவி
மாமிசமு ஞசார மிலிவீணன்

தாயையிக மாதாவை வாலையை விடாசோத
சாரமறி யாமூட விழிவாளன்
சாமளவு மோயாத நோய்கொடலை யாதாதி
சாசுவத சாரூப முடிமேலே
தோயைவடி வாமாறு நீகிருபை கூறுது
தூசணையி லேவாட விடலாமோ
சூழுமதி சிவாதி வாழுமுயி ராய்மேவு
தூயகிரு பாரூப வளிநாதா
வாயையறி மாதேவர் மூலவழ லேமூழ
மாநிலவி லேதாவு முபகாரா
மாமரம ஞமேரு நூறுமனு மார்தாத
வாய்வு பகவாஞன பெருமானே

---

## ஸ்ரீ ஆகாய துதி

23 தானன தானதன தானன தானதன
தானன தானதன—தனதான

பூவாடை காதவழி வீசோதி கோதிமதி
போலே முகாரமழ கெழுவேலை
போராடு நீலவிழி சேல்போலு லாவமுலை
பூணேடு தானசைய மயில்போலே
பாவாடை தாவணியு மாசோதி வீசவரு
பால்பாகு காணுமொழி விலைமாதர்
பாய்மீதி லேமருவு லீலாவி நோதமயில்
பாழாக தீதகதி பெறுவோர்கள்
மூவாசை தீராறிஞர் தேவாதி மூவர்சுரர்
மூலாத ராதிபதி முருகேசன்
மூதாதை யோர்கணிலே பேசாத வூமையென
மூளேக மாசருவ இடமேயும்

ஆவாக ஞாமுத சோமாதி சூரியர்க
ளாரோப மாகிவரு சிவசோதி
ஆருதாா திமுத லாறு யகாரமய
வாகாய வாணியெனு மொருதாயே.

---

## ஸ்ரீ ஐயனார் துதி

24 தனன தனனதன தனன தனனதன
தையதாதான—தனதான

பதிவிர தைகளையு மருவ வசியவகை
பையவே யோசி பழிகாரன்
பதகரை யவைமிசை பிரமெயன மொழிதரு
பைய லாகாத வவதூரன்
மதிகொடு விதியினை யறிகுவ னெனவிரி
மையலா மால னறிவீன
வழிகொடு குழறிடு தருதலை வாமிலி
வையமீ தேழை யடியேனுன்
மதுநிரை பரிபுர சரணனு கினனெனை
வையொரு தாவ லுடனாள
மலைபிணி வறுமைக டுயரல கைகளொழி
மையிலா ஞான வாமீவாய்
அதிகண வாசென வயல்வள முறவள
மைமுகா ஞய னருள்பாலா
அடர்பரி மிசைமணி கலகல வெனவரு
மையனு ரான பெருமானே.

---

## ஸ்ரீ மாடதேவதை துதி

25 தனனதான தானதனு தனனதான தானதனு
தனனதான தானதனு—தனதான

எகினமாடு கேகயவா கிகழ்மினர்க ளீலையிலே
யிழகுமாக ஞகினுமோ தியதாலே
இரவிலேகி னுலுமுசார் தவரியோதி னுலுமகா
வெகிரிமீறி னுலுமாயா னபசாசு
மிகவகோர மோடெதிரே வரினுநீயெ னேரினிலே
வெருவிடா தடாபையனே மிரளாது
மெதுவதாக வாபிரகே யெனசினேக வாடவர்போல்
மினிர்சுவாலை வீசமுனே வரவேணும்
சகலலோக தாயுமையாள் குமரிவீரி மாரியம்மாள்
தருமஞாய வாலைமனோன் மணிகாளி
சமரிசூலி யாமளமீ னவள்வராகி நாரணியாள்
சபைமுனை கோரசடா மகுடேசா
சுகுணவீர வாடிசூ லழகயிழ தேசவடா
துடிகொள்காளி மாபுலையோன் மகணேசா
சுடர்கொள்பூத கூளிகள்பேய் குறளிசூழ வாழிசெயோர்
சுடலைமாட தேவதையாம் பெருமானே

---

## ஸ்ரீ மதுரைவீரன் துதி

26 தனனதான தானன தனனதான தானன
தனனதான தானன—தனதான

இரவிபோல மேலாடை திரையமேரு நோரன
விருவிநோத பூணா முலைமூடி
இரதிநாண மாமேடை யுலவிரோம மேகோது
மிரணதேக மானரி னுறவாலே

தரமிலாத பேரோடு வெறியர்நேர் பசார்வீதி
தளிதடாக மூர்வீடு புறவாசல்
தலைவிகாண வூசாடி வலியசாடை யேபேசி
தமவிராவி லேசூழு சுவரேறி
திருடர்போ லுசாரோடு மொருவர்கா ணுணாதோர்மை
சிதரிடா தையோபாழி லலைவேனோ
திரமையா னநீதிர மறிவுவீடு மாடாடு
திரள்சுகாதி பூணா மெதுவேனும்
மருவுவார்க டானேகொள் மனதுபோல வீவாயென்
வறுமைதீர வாவாபொம் மிமணாளா
மணிகொள் மாலைபூமாலை யணிகிரீட வாள்வாழ்கை
மதுரைவீர ஞமாதி பெருமானே

---

## ஸ்ரீ மொட்டைக்கோபுரமுனி துதி

27 தத்தத்தா தனதன தாந்த—தனதான

வட்டைப்போ லிலகிரு சாந்து முலையாரால்
வற்றித்தோ றிரைபட வோய்ந்து மரியாமல்
நிட்டைக்கா முளவிசிராந்தி யடைவேனோ
நெற்றிக்கோ விடைபுரநீந்து பொடியாக
சுட்டிக்கோ வியவிடமார்ந்த வுமைமீனாள்
சொத்துக்கா வலனெனவோங்கு மதிகாரா
முட்டற்றேழ்புவி வரைபாய்ந்து விளையாடும்
மொட்டைக்கோ புரமுனியாண்டி பெருமானே

---

## அழகர் கோவில் ஸ்ரீ கருப்பர் துதி.

28 தனதன தத்தா தனதன தத்தா
தனதன தத்தா—தனதான

வரையொ டெதிர்த்தே பொருத னரைத்தான்
மருவி யணைத்தே குழியாதும்

வனமயன் மற்றார் வழியி லிருட்டாய்
வருகினு மப்போ தடியேன்மேற்

கருணை மிகுத்தே யிருளற வெற்றோர்
கவிகம லத்தா ளொளிவீச

கலக லெனப்பே யெதிரிகள் கெட்டே
கணநரி சர்ப்பா தியுமோட

பரிமள தொத்தே செரிதொடை முத்தே
படர்வட மிட்டே அறிவாளும்

பதுமகை வைத்தே துணையென வெற்கே
பயமற நிற்பாய் திடமோதி

அரசர்கள் பக்தோர் சுரர்தரி சித்தோர்க்
கருள்பதி னெட்டாம் படியோனே

அகமுக சித்தா திகள்வசி பெட்பா
மழகர் மலைக்கோர் பெருமானே

---

## ஸ்ரீ எமதருமர் துதி

29 தனதனதான தனதனதான
தனதனதான—தனதான

திருமகள் போல வருமட மாதர்
திரளிரு பார முலைமாலால்

திரவிய மாமை விரயம தாகி
சிலசில கேலி பலர்பேச

வெருவி வியாதி யொடு கருகாது
விமலசி வோக வவிரோத
வெளியிலு மாவி னளிமிகு மீசர்
விரதப தார வருள்வீடு
கருதிய தீத பெருமையில் மேவு
கதிபெற ஞான வுபதேசம்
கனிவுட ஞேதி மரண வுபாதி
கவலை விரோத மணுகாதாள்
இருடியர் பீதி படவரு கோர
வெழி லடியார்க
ளுபசாரா
இருணிரை மேதி யுரைதிரி சூல
வெமதர்ம ராச பெருமானே

---

## ஸ்ரீ தெய்வானை துதி.

30 தானதந்த தானதந்த தானதந்த தானதந்த
தானதந்த தானதந்த—தனதான

பாசபந்த மேசுமந்த நீசமந்த மாசடைந்த
பாவிவெம்பு லாலருந்து கடைநாயேன்
பாமரன் றமாசனங்க காமவம்ப னூமனும்பர்
பாவைநீந்தி கூகைமந்தி முகமூடன்
ஊசல்வெம்பல் நாறசிங்க மூழறங்கு கோழைசும்ப
ரூடுறம்பொ லாவழும்ப னியாயன்
ஓதனந்த போசனங்க ளானிரம்பு தூலபொம்மை
யூழ்கொடொண்டு மேழைபங்கி லருள்வாயே
வீசியந்த்ர பாலசந்த்ர பாலமந்த்ர கோலதந்த்ர
மேகமொன்று வாகனிந்த்ரன் மகளான

வேதசிந்த னீசுகந்த வாசபைங்கொ டபிறந்த
வீரகங்க ணீயிங்கு மகராசி
ஆசுகங்க ளேவிவந்த சூரங்கமே பிளந்து
மாடிடுங்க லாபமஞ்ஞை முதுகேறும்
ஆசமந்த காசகந்த சாமிசொந்த மாயணைந்து
ளாள்வுறுந்தெய் வானையென்ற வருள்மானே

---

## ஸ்ரீ வள்ளியம்மை துதி

31 தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த—தனதான

சிவசமய சீருணர்ந்து தவசுபுரி யாதயர்ந்து
சிரமசமு சாரபந்த வதியூடே
திரியவிதி யோவிளம்பு மகனுமல ஞைபுரந்து
திருவுளம தேயிரங்கி மகிழ்வோடு
அவசியமிவ் வேளைவந்து பவுசுமிகு ஞானமென்ற
அறுசமய நீதிகொண்ட சுகசோதி
அடிமைபெற நீபுகன்று மமுதபிர வாகசெம்பொ
னடிமலரை யோதுசெந்த மிழுமீவாய்
நவமணிவி லாலெறிந்து நவிரமென வேநடந்து
நதிகணிகர் தாரணிந்து முதிர்வாகு
நனிபணில முதட்ர்ந்த கிளையிலினி தேதிரிந்த
நவிலமுடியா தசந்த குணசாலி
விவரமுரை யாமலன்று மனமறிய வேடனென்று
விளைதுகளை யேகடுந்து மதயானை
விரைவில்வர வேபயந்து மறுமுகனை யேமணந்த
விரதவள்ளி மாதுவென்ற அருள்மானே

---

## ஸ்ரீ அகஸ்தியர் துதி

32 தனத்தன தனதனன தனத்தன தனதனன
தனத்தன தனதனன—தனதான

நினைத்துனை யொரே நிலையாய்
மனத்தினையொ ருதறிவாய்
நிறுத்துதல்பெ ருதிலவாய் மெழுகேபோல்

நிலத்திடைமி னூர்வலையா
லலுத்தலைபு னயனையே
னிகழ்த்திடு விவேகமிலா வினையேன்முன்

உனைத்தொழு துளேவிளைவா
கெனைத்தெரியு மீடறுமோ
ருரைப்பருளி மோனமனே லயமீவாய்

வுபத்திரவ நோய்களெலா
மொழித்து மருளாகமகா
வுருத்திரனை நேரடியார் விளையாடி.

அனைத்துல குலாவிநிலா
வவிப்பருகி யோகிகளா
யவித்தையறி யாதவராய் ரசவாதம்

அருட்கவி மகாதவசே
டிருக்கமன பூரணமா
யறக்கிளிம னேன்மணியாள் முறையாவும்

அணுப்பிழைவ ராதகியே
டெடுத்தெழுது மாழியுனே
ரகப்பொதிகை மாமலைவா முருளாளா

அணைப்புவி தாரசெனவே
நிறுத்துரை நிராமயவோ
மகத்திய மகாரிசியாம் பெருமானே

## ஸ்ரீ அப்பர்சுவாமி துதி

33 தனனதன தனனதன தனனதன தனனதன
தந்தத் தனத்தனன தந்தத் தனத்தனன
தனனதன தனனதன தனனதன தனனதன
தந்தத் தனத்தனன தந்தத் தனத்தனன
தனனதன தனனதன தனனதன தனனதன
தந்தத் தனத்தனன தந்தத் தனத்தனன—தனதான

கமுகுமிகு தமசமுக ககனமுகி றனையிகழ
கந்தச் சரத்துதிரி சிந்தச் சிலுத்தகுழல்
சரியநறு வரிபரவு மறுசரண பிரசமலை
சண்டச் சமர்த்துடைய கெண்டைக் கண்மைப்படரு
கமலமலர் முழுநிலவு முமிழுமழ கொழுகொளிர்வ
கண்டொப் பிலக்கிமுக மென்கத் திருத்துமுக மதிவீச

களபணில மிசைவயிர மணிபணிதி வடவகைகள்
கங்கற் றிருட்குல மொருங்கற் றிடப்பிபை
கவிவதொரு மலையருவி சொரிவதென நிமிருமிரு
பந்தத்தி மத்தக மொதிங்கிப் பதுக்கமுறு
களபபரி மளமுலையி லெழுதுகுறி சுவடொடிசை
தங்கத் துகிற்குளசை வொன்றக் குலுக்கிமயி லனமானோர்

அமுதமுதி பழமினிய குளமிரளு மிதழ்நகைய
வன்புற் றடிக்கடி சுவைந்தெய்த் திளைத்தயிடை
துவளவுடை யவிழமிளிர் தளிர்பழகு கழலிலொலி
தண்டைக் கிலுக்கிடுடு செங்கைக் சரித்தொனிசெய்
அபிநயமொ டவையினடு சுதிகழைப விசைகுமிர
வன்பிற் கிலக்கென வகஞ்சுற்றிடச் சதுர்செய் மடமாதர்.

அருணனடை யிரவிலுயர் வருணனைசெய் மலரணையி
லின்பப் படப்பல சுகந்தத்தை வைத்தணுகி

யிருசிறிய விரல்பிடிகொ டுலவிமயல் குலவிநில
வின்கட்பல் வெற்றிலைக டின்றப் புறக்கதவை
யடையுமென விறகமொடு குழறிவிழி சுழல்கலவி
யங்குற் றணைத்துருகி யங்கத் திடத்தைவிடு வினையாலே

நமைசொரிகள் விரணமறை படுபிணிகள் சளியிரும
னஞ்சொத்த பித்தவெறி நெஞ்சக் களைப்பசதி
சுரமளைவு குளிர்படுவ னமாமுளை தலைவலிகள்
தொண்டைக் கசப்புடன் மெலிந்தெச் சிறுப்பவதி
நரைதிரைக ணலிபொழுது தடிகைகொடு மிடறிவிழு
மன்றுற் றணுக்குளெழு வண்டத்தை யிட்டிடவல் எமதூதர்

நயனமிசை எரிதவழ விருகுழவி மதியைநிகர்
தங்குக்ர வக்ரநகை பொங்கிக் கடித்தசட
வெழுதியென வளைதருண முறவின்முறை கதறியழு
தங்கிட்ட கட்டணமொ டுங்கொட்ட வட்டபறை
நரிகடிரி புரவிர கெருவிலெரி படுகொடுமை (ம்
யின்றிப்பி ழைக்கும்வழி யொன்றெற்குரைத்தருள வாவேணு

குமுகுமென மணமுலவு மிதழியா வறுகுநதி
யிந்தக் கயச்சிரசு தங்கட் படைத்துமுளை
மழுகழுமுள னறடிமொய்யுரியு முறவுமையிடமி
லங்கத்திருச் சபையி னின்றிற் றருச்சுனர்வில்
குதைசிதைய வுதைசரண வருணகிரி மயவிறைவர்
கொஞ்சிப் புசித்தினிதெ னுஞ்சற்கு ணக்கருணை யருளாளா

குலவரையு முருகுமிசை மதுரமுரை தமிழ்மொழிகள்
கண்டொத்த சொற்சுவை நிரம்பப் படித்தவர்கள்
மனமறிவி லுறவுறவு மகிமைமிகு பனுவலைவ
ளங்கித் திருப்புகழ் விளங்கித் திருத்திநிலை
குருவெளியி ளெளியுளொளி வுடனெருமை தாமருவு
கும்பத் தகத்யரு மரன்சித்த ரப்பரொனும் பெருமானே

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி துதி

தனதனதன தனதனதன தனதனதன தனதனதன
தத்தந்தந் தனதாத்தன தத்தந்தந் தனதாத்தன

தனதனதன தனதனதன தனதனதன தனதனதன
தத்தந்தந் தனதாத்தன தத்தந்தந் தனதாத்தன

தனதனதன தனதனதன தனதனதன தனதனதன
தத்தந்தந் தனதாத்தன தத்தந்தந் தனதாத்தன—தனதான

கடலுடுகயல் விடமயில்வடு வடுவலர்வசி கொடிதெனவிரு
கட்கஞ்சஞ் சராவூற்றிய புட்பஞ்சங் கடமாய்ப்பணி

கரதலமட வியரொடுநித மரவனகடி தடமடமிசை
கைப்பின்றென் றூரசேர்க்கைகள் கைக்கொண்டங் கபராக்ரம

கனநிணமொரு துளிபடுவிரை கொழுகொழுவென விழுமுழுகிடு
கட்செண்டம் பினன்வாழ்க்கைகள் விட்டுஞ்சஞ் சலவூழ்ப்பயன்
மிடிதீர

கலிபிணிபய மவமிடர்பல பகையுறவிருள் மருள்மலமுமில்
கற்பகங்கொண் டடர்பூத்தொடு கற்குன்றங் குகைபோய்ப்பசி

யனலெழிலுகிர் சருகிலைகனி ருசிகரவகை வெருவறவுணு
மத்தங்கண் டறிவாற்பரி சுத்தந்தங் ககநேத்திர

கதிர்பெருகிய பரிவெளிமிசை மதியமிழ்துள வெளிகொளவெழு
கற்குஞ்சிந் தையர்போற்றிசெய் நற்கொம்பம் பிகைசூட்சுமி
புவனேசை

நடமிடுபயி ரவிசமதள பகவதிசிவ யநமவடிவு
சொற்பைஞ்சுந் தரிசாத்விக பச்சென்குந் திடகாத்திரி

பரிபுரைகுமி ரறுகுரவெரி னுரைவிகசித லிவையுமையவள்
பற்பஞ்சிந் துரமேற்பொலி வெற்பன்றன் சுதைசூர்ப்பரை

நலிமுகிறவழ் முடிசடைபல வழகொடுவரு மிளவயதுமை
நத்துந்தங் களியார்ப்பரி பொற்செங்கஞ் சபதாச்சர்ய
நிர்விகாரி

நணியறிவின ருறமருவொரு வருளொளிநிலை தனினிதநினை
வற்றங்கந் தொழினீக்கிட வுற்றந்தம் பெறுபாக்கிய
குணவெழிலினி லிருவினைமல மறவிணைவுறு தவமுனிவர்
சித்தந்தங் குதல்போற்பிர சித்தங்கொண் டபிராப்த்தியை
நாமுணைவழி தொழுசிறுவனு மெளிதினிலுண ரருள்மழைபொழி
நட்பும்பண் டிசைகோத்துநி னுட்பம்பொங் கியநாற்கவி
நிதமோத

தடமலர்கொடு மடுமதனுடல் பொடிபடவெரி யிடுமிறையவர்
தக்கன்றன் மகமாற்றவி யர்த்தஞ்சுங் தனிமூர்த்தியை
விடுபவரிசை சிசுதசைகறி செயுமொருபிர பலர்துதிகுரு
விற்சொந்தன் றெழுதேத்திடு மற்சந்தன் றுனியாழ்க்கா
சாஸ்வதிமண மகனெருசிர மறிபவாய னரியரிதென
தர்க்கங்கண் டெழுமாத்திரி தத்துங்கங் கைகொள்பூச்சடை
யழியாதார்

தகதரிகிட கிடததிஙண தரிகிடகண கணதகதக
தத்தந்தந் தனதாத்தன தத்தந்தந் தனதாத்தன
தாராரிரி ரிரிரிரிரிரி தரிகிடதரி தரிகிடதரி
தத்தொங்தொம் தனதாத்தன தைத்தொம்தொம் தனதாத்தன
சரிசரிசரி ரிசரிரிசரி தகமுகதக தகதகதக
தைத்தொங்தொங் தகதாத்தன நற்பொன்னம் பலநாட்டிய
மிடுமீசர்

படமதுள்வரு கெனவருமிள வயதுடையவ தவசிரவண
பட்சந்தங் கியசாத்திர முற்றுந்துன் றியநாத்திர
பலகலையினு முயர்விதுவென முதியவர்துதி தமிழ்ரசமொழி
வைத்துங்கங் கறுகாட்சி விரிக்கும்பண் டருநூற்புரி
பாவகமுக மதுவெனவுல கிரவொடுபக லாகரவென
புட்பஞ்சிந் திடவீட்டினு ளத்தன்பண் டெழுதேட்டினை
மதியாது

பலவிதசள மொடுதளிசெல மறைவொடுவிடை தனிலானுரை
நித்தங்கண் டுணர்வாய்க்கதி மெத்துஞ்சம் ப்ரமதோத்ர
மவருளமுரு கிடவினவிய தவமணியென வருசமாச
பெட்பொன்றந் தாரூர்த்தரு நத்தம்பங் கயமாச்சிமை
பாசகமுற வடியவர்பெற வருவுருவென நிரைஜெயஜெய
முத்தன்சுந் தரமூர்த்தியெ னச்சங்கந் தராரர்த்திடு
பெருமானே

---

## ஸ்ரீ சம்பந்தமூர்த்தி சுவாமிகள் துதி

35 தனன தனனதன தனன தனனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனன தனனதன தனன தனனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனன தனனதன தனன தனனதன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன—தந்ததான

கமல மலர்தளிரு மணையு மிணையிலென
மிக்கவெழி லண்டதிக சத்தமணி தண்டைசர
வகைகொலு சிலகிரு வடியிழை துகிலும
ழுத்துமென வண்டுமுர ஞெருத்திதழ் சொரிந்துவரு
கணமதி துணைபெற களபமு மெழுகிய
கற்கிரி பதுங்குமுலை பொற்குறி படர்ந்திருகு வம்புபீற
கணைபிணை கயலயி லசிகடு மதுவடு
புட்டட கருங்குவளை கொக்குவடு வுஞ்சிதைகொள்
சிறுவரி பரவிய வசியமை யெழுதிய
அக்கமத லம்பநகை முத்தெனவி ளங்கமிகு
கனகத னுவொடிகொ டணுத லிடுகரிய
பொட்டழகி வங்கையிடை கட்டியசி வந்ததுகில் மன்றுவீச

அமுதமொ ழுகுதுவ ரிதழ்பெரு கிடமயி
லத்தனையு நின்றுதிகை சித்திர நடம்புரியு

மரிவைய ரிரவினி லறையி லறையுடைய
விழ்த்துமண சந்தனமி றைத்துமிகு சம்பிரம

வகடவி கடமொழி வினவியு லவிமுலை
யச்சது வுரம்பதிய முத்திமரு வுஞ்சரச வின்பலீலை

அலையி லிலையைநி கரலையு மலகுமன
வக்கிரம பங்ககல நற்கிரக மிங்குதவ

மவுனம லைமகளை யெவனப சுமனையை
மற்சபெய ரொன்றுமது ரைக்குள்வள ரம்பிகையை

அனுதின நினைவொடு பணிகிட மணுகிட
வற்புதமி குந்தசதுர் நற்கவி விளம்பவருள் வந்துகூட

சமுசய மறுமொரு வடிவுமில் சிவமய
தற்பரநி ரந்தரச முத்திரவ கண்டநித

பாகதி தருதர குருமர புரைமுறை
பட்சமொ டறிந்தறிவை விர்த்திசெய் தரும்பிரம

சமரச வெளிமிசை விரவிய வரபவு
சைத்தரம னங்குளிர வித்ததியெ ழுந்தருளி வந்துபாராய்

சடைமுடி யொடுதொடு புடைகுகை குவடுகள்
சர்ப்பமறு கும்பனரி மைக்கரடி சிங்கமதிர்

பயமற வவைபணி தவவடி வொடுதிரி
பக்குவம டைந்தமுனி சித்தர்தவ வண்டர்புகழ்

சளமற வினவுதல் பழகடி யவர்பலர்
சற்குருவெ னுங்கனக கற்பகம துங்கனிசம் பந்தநாதா

குமுதவி ரததள படைமிகு மதுரையி
னத்தன்முது கொன்றுவளை வைத்தவிர் தகுந்தவரை

மருவிய வரையகல் வாதகி ருபைமிகு
மற்றொருநவ ருங்குவலி விட்டிடவி ளங்குபொடி

கொளுமெ னவினவி யும்நதியி லெதிர்பனுவல்
சிக்கா நடந்திட விடுத்திடர் புரிந்தவரை வென்றதேவே

குதிகொளு மிறைபக வனுமக முருகருள்
குத்திநிலை யந்தழுவு மக்கினியெ னுந்தரும

னயர்பிர சனவர வணிபா சிவனுமை
யட்டதிசை யும்புக ழுருட்கவிஞ ரென்றபெயர்

குடிகொள வமிழ்துணு மரகா சரவண
குற்றமற நின்றெமது சித்தமிசை வந்துலவு மெம்பிரானே

---

## ஸ்ரீ மாணிக்க வாசகர் துதி

36 தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தனதன தனதன தனதன தனதன
தானத் தத்தன தானத்தத்தன-தனதான

வட்டப் பொட்டிட் டுப்பட் டைக்கட்
டிடையொடி கொடியன வளைவுற வளைதொடு
பாணிப் புட்மமும் வீசிக் கட்கணை

சுற்றக் கற்கொத் துக்கற் சுக்கைச்
சாவட வருவியை வாவிடு சுவடணி
தோய்நற் சித்திர நானச் சொர்க்கமு

மட்டற் றிட்டத் தைக்கட் கொப்பத்
தருவெறி தருமசை வுறநெறி யறன்முடி
வாரிக் கட்டிவி ளேதக் குப்பிய ணிந்துமாலை

மட்டைக் கொட்டக் கட்டிப் பெட்டைக்
குயில்கிளி பழகினி மொழிகவி யிசைபல
வோதிப் பொற்றொடி மோதிச் சற்றொலி

மெத்தச் சுத்தத் திற்குட் பக்கச்
சுதிமுழை தொனிபட ரதியென வணிவகை
பேணிப் புத்தியி ணணிக் கட்டற

மச்சக் குற்றிற் றுப்பொற் குப்பொற்
பதிதனு தளதள வெனநட மிடுபவர்
மாய்கைக் குட்படு பேய்மைப் புத்தியி னிடர்தீர

நிட்டைக் கிட்டத் தைப்பெற் றெட்டுச்
சுடர்விரி பிரணவ வெளியினு ளொளிர்வெளி
வாழ்வைத் தத்வவி சாரத் தர்க்கமை

சத்தைச் சித்தைக் குத்திச் சுத்தச்
சமரச சிவமய பரகதி யெனநிரை
சாயுட் ச்யப்பதி யாயைக் யக்கதி

நித்தத் துத்தத் தைச்சத் தித்துத்
திகழ்வதை யகமுக தரிசன சுகநவ
நீதத்தைப் பிரவாகத் தைத்திதி யந்தமாதி

நிற்கற் கிற்றற் பற்பப் பொற்பிற்
றிருவென விரிதிரி தொழில்புரி மதவகை
நீவிக் கற்பனை சேதித் தற்புத

முத்திக் கட்புக் கித்துக் கச்சுற்
றிருபய மிலையென நினைவக லகமுறை
மோனத் தற்பர ஞானத் திற்சுக

நெற்றிக் கட்கெட் டித்தத் தத்தப்
பிரபையை வான்முறை யறநிமிர் பெருமையை
நேசித் தொத்து வியாபிக் கக்கழ லென்றுசேர்வேன்

எட்டுக் கைக்கர்த் தர்க்குட் பத்தித்
துறைவழி யொழுகியு மனவா தமுமவ
ரேரிட் டுக்ருபை கூறத் தொத்தென

நத்தித் தர்க்கப் பித்தைப் பிய்த்தர்ச்
சிவரசி வமரபு பெருகுள முருகியு
மேதத் தைச்சமஸ் காரித் துத்தனி

இச்சிப் பச்சத் துச்சக் கொச்சைச்
சளமறு முளமொடு மதுரையி னாண்மனை
யீடற் றுத்திசொல் பீடுற் றெப்பற — நின்றகாலம்

எய்ப்பற் றுத்தத் தெற்றிப் புக்கத்
தருபல குதிரைகள் கொடுவரு விலைதர
வேகிச் சத்திய வாமெத் தத்தளி

திட்டத் தைக்கட் டிச்சற் றெற்பொற்
குறைவது பெறவர வரசனு வெருவொடு
கோபத் திற்பல பேசிக் குட்டையி

விட்டுக் கட்டத் தூக்கித் தூக்கித்
துடைததி பாசிவ னவணுறு நரிதனை
யேரிற் பொற்பரி யாகப்பத்திமு — னின்றுபேசி

கட்டுக் கொட்டத் திற்கட் டச்சித்
தமைகுரு பாவர காசிவ ஜெயஜெய
ஞாயச் சொற்பிர காசச் சற்சன

சத்வத் தத்தத் தத்தொக் கச்சொக்
கருள்மன மகிமையு மருமையு முயர்குண
சாதுக் கட்கினி வேதச் சொற்சுவை

கற்பித் தூற்பிப் பைப்பத் தச்சத்
தியகவி யுதவிய செகதலர் துதிபத
மாபற் பத்திரு மேனிச் சற்குண — சௌந்தரோனே

கப்பப் பப்பப் பப்பர்க் குப்பக்
கலிலிசை தருசுவை யமுதொழு கிசைவளர்
கானத் திற்றமிழ் வேதத்தைப்பகர்

முத்தத் தத்தித் துத்திச் சித்ரப்
படவர வரிவிதி யமரரு மடியவர்
பாடக் கற்பனை யேதற் றுற்றது

கைக்குட் சிக்கத் தக்கற் கொத்துக்
கடவுள ரெனவவ தரிபெரு மையைமகிழ்
காணற் கற்புத மாணிக் கத்திரு வெம்பிரானே

---

## ஸ்ரீ சண்டிகேசுரர் துதி.

37 தந்த தானன தந்த தானன
தந்த தானன—தனதான

கொண்டை சூடிய வண்டு பாடிய
கொங்கு லாமலர் வகைதூவ

கொஞ்சி மாலையில் வம்பு பூண்முலை
கொம்பு போலசை வுறவாடி

பண்ட வாழைகொ டண்டு நேர்துடை
பஞ்ச கோல துகிலமூடி

பந்தி வாணகை கண்டபேர் மன
பஞ்சிலே யன விடுமாமால்

கொண் டுலாவிடு பெண்டி ரால்வலு
குன்றி டாதறி வொளிவீசும்

குங்கு மாடக பைம்ப தாமெய்
கும்பி டேழைமு னருள்வாயே

தண்டொ டாறுக றந்த பாலற
லிங்கா மாவென வுதைவோர் கால்

தங்கை வாள்கொடு துண்டி மாதவ
சண்டி கேசுர பெருமானே

---

## ஸ்ரீ அருணகிரியார் துதி.

38 தனனதன தானதன தனனதான தத்த
தனனதன தானதன தனனதான தத்த
தனனதன தானதன தனனதான தத்த—தனதான

வடகுவடு மோடமுடு கிடையிலாதே வொட்டு
மணியணி யொடார்துணியை விலகிவாரே விட்டு
வழிவிடவு மாமுகைகள் மலைகள்போலே நிற்க விளையாடி

வடுவடையு மோதிமலர் சரியமா தாளிட்ட
பரிபுரமு மோலமிட வலைகள் மானேயெத்த
வரிவிழிகு லாவவரு பருவமா ஞர்சிக்கி லுழலாமல்

நடனமிடு நாதவெளி யொளிவிலே யேநிட்டை
பழகிவிவ காரமற வறிவினு லேநித்தல்
நமசிவய வோம்சிவய நமெனவா ராதித்து விழிமூடி

நயனபுனல் மார்பதினி லருவிபோ லேகொட்ட
வருளுடனு ரோமவிதிர் வுறவுமா ருநெக்கு
நனியுருக மாசிரசி விருகைதாள் வாய்வைத்து வடபாலாய்

கடவுடிரு வேயெமது பிரபுவா வாசுத்த
பரமகுரு வேயெனவு முனதுபா தாரத்தி
னுடன்மருவ நீயெனது மனதிலா மோதித்து வருவாயே

கடகபுய சாமிமகிழ் புகழைவா ஞோர்மெச்ச
மொழிபுலவ னேவலவ ருரைமகா சாமர்த்ய
கவிவிலியு மோதுசப தசெயதே வாதத்வ வனுபோகா

அடலருண மாகிரியி லொருவர்நேர் மேவள்புக்க
வினவுசிவ யோகநிலை தெளிதயா ளாவித்வ
வபரிமித ஞானியென வுலகுதா னேவொப்பு மவிபோதா

அமுதொழு பாரிசத மலரினு லேதத்தை
வடிவுபெறு தீரகுண மதூவா யாநித்த
வருணகிரி நாதரெனு மடியரே றேபத்தர் பெருமானே

## ஸ்ரீ பட்டினத்து சுவாமிகள் துதி

39 தத்ததத்தத் தானதான தத்ததத்தத் தானதான
தத்ததத்தத் தானதான—தனதான

நற்றவத்தைக் கோரிடாத நிட்டைபெற்றுத் தேறிடாத
நத்தினர்க்குச் சோறிடாத வினையேன்முன்
நக்கணொத்திப் போதுகாத பொற்கழற்குப் பாடுமாறு
நட்புறச்சற்றேனிணர பதமீவாய்
கற்றிரத்னச் சீர்குபேர வர்த்தகத்துற் றூறுகோடி
கப்பல்பெற்றுத் தேசராச னெனவாழ்நாள்
கற்பினிற்பொற் பானமாது பட்டுடைக்குட் காதிலாத
கச்சிதச்செப் பானவூசி யதுபூரி
சுற்றிவைத்துப் போனசூது வுற்றெடுத்துப் பாவையாள்முன்
சொக்கிமுத்திக் கானபாதை தனைநாடி
சொத்தையத்தச் சூரையாடி விட்டுளத்தத் தாவைநாடி
துச்சபிச்சைக் காரர்போல பலவூர்போய்
பற்றறுத்துப் பாடமோதி யுற்றுரத்துத் தியகாதி
பற்றவொற்றைப் பாடலோதி யறிவாகு
பக்குவத்திற் சோதியோடு புக்குமொப்பிற் க்யாதிமீறு
பட்டினத்துச் சாமியான பெருமானே

---

## ஸ்ரீ ஆதிசங்கரர் துதி

40 தந்ததாத் தானன தந்ததாத் தானன
தந்ததாத் தானன—தனதான

பண்டைநாட் டூழ்வினை கொண்டுநாட் டாள்பல
பண்டுகேட் டாழ்மன னறிவீனன்
பஞ்சையாய்த் தாள்வது மஞ்சநோக் காதினம்
பங்கமாய்ப் போகவும் விடலாமோ

விண்டுசேர்த் தாளிடம் விண்டுசூழ்க் காய்பெறு
வென்றபார்ப் பார்குல மலையாளா
வெங்காரக் காரண மங்குதாய்க் கேள்விவி
ளங்கியாற் றேதுற வடைவோனே
பிண்டர்நாப் பாரதி தொண்டர்பூத் தூவிடு
பெண்டுயாப் பானது முணர்வோனே
பின்பலாத் காரம தங்கள்வீழ்த் தாரண
பிம்பநாற் சீடர்க ளுடையோனே
தண்டசாத் வீகக டொண்டொடாத் மாநிலை
சங்கைநீத் தாய்சகத் குருநாதா
சம்புவாய்த் தூயசி ருங்கைகாத் தாள்சிவ
சங்கராச் சாரிய பெருமானே

---

## ஸ்ரீ தாயுமானவ சுவாமி துதி.

41 தானதான தானதான தானதான தானதான
தானதான தானதான—தனதான

ஊனிலாகி யூதுவாயு மோதுபோது யோனிவாயி
லோதொணுவு பாதையோடு புவிமீதே
ஓதுவாகு வாகுவாவெ ணுகையோடு வீழ்விகார
வூழிநோய் வாதிராச சிவயோக
மூணிமாசி லாநடேச ராடுமேடை வீடுதேடி
ஓமகார சேதிரூப பரமேசா
ஒருமாச மேதனேசு மாதிஞான மீயவாவெ
ணுமைபோலு ணுடுவாழ்வ துளதோதான்
தேனிலூறி வானுமேறி வீரவாகை சூடிநாடு
சீடர்சோதி தோயவாதி முடிவோதும்

தேவதேவ ராவலாக பூர்வபாட லோதகீத
    தேசிகா சமாதியோக குருநாதா
சாணநீறி னுலுமாமை பூணுமாக நேரிலாத
    சாதுவாய் நடேசர்பேசு புகழேறு
தாழ்விலா மகானுபாவ சீவகாருண் யாவிதேக
    தாயுமான சாமியான பெருமானே

---

## ஸ்ரீ இராமலிங்க சுவாமி துதி

42 தந்தன தனனதந்த தந்தன தனனதந்த
    தந்தன தனனதந்த—தனதான

பந்தனபனூர் சினங்கி பந்தனத னூர்வர்தந்த
    பந்திமய லாலலைந்து பலநாளும்
பந்தவலை யேபுகுந்து பண்டுடைமை சீரிழிந்து
    பந்துசனமே யிகழ்ந்து பலபேச
மந்தனென வேதிரிந்து நொந்துமலை யாதுதங்க
    மங்கலப தாரமிங்கு தரவேணும்
மந்திரசொ ரூபசம்பு மங்கல்ய வராகிதங்கு
    மண்டப விஜைதம்ப மதிமீதே
சிந்தையக லாதிருந்து மந்திபக லேதுறந்து
    செந்தமி ழனேகமெங்கு மொளிவீசி
தெண்டிரைகொ ளாழிகொண்ட மண்டலமெ லாம்விளங்கு
    செங்கதிரை நேரெழுந்து வருவோனே
இந்தவுல கோர்தொழுஞ்சி தம்பரமெ னலயஞ்செ
    யின்பசிவ யோகதுங்க மிகுயூகா
எங்குமரு ளாளரென்று செங்கைகுவி ஞானசிங்க
    மெங்கள்குரு ராமலிங்க பெருமானே

---

## திருவாரூர் ஸ்ரீ தெச்சிணாமூர்த்தி சுவாமிகள் துதி

43 தனதானா தத்தனதாத்த தனதானா தத்தனதாத்த
தனதானா தத்தனதாத்த—தனதானா

கலைமானோ கட்கமைநோக்கு குமிழ்தானோ நித்திலமூக்கு
கனிதானோ கைப்பறுவாக்கு உழுவாடும்
கழைதானோ வொப்பதுதோட்கு வுலர்பூவோ செப்புவர்தாட்கு
கழிமாசோ நெய்க்குழலேற்கு மெனமானார்க்
கலைபோலூ சற்படுவேற்கு மவிரோதோ திப்பொருளார்க்கு
மலர்பாதாரத் துணைபார்க்கு மருளீவாய்
அடியாரா யக்கினிவாட்டு மொருவீடே சிக்கியபார்ப்ப
ரடைசேயோ ஊனத்தனிமீட்ட சிவயோகி
கலைஞான சத்தியுபேட்சை யுருமூவா முத்தவிராட்டு
கதிகாணா விர்த்திசுயேட்சை தருவோனே
கருதாரூ டப்பரமார்த்த தவமோனா விற்பன சூத்ர
கறைதோரா திக்ருபை வாய்த்த சிவநேயா
சிலையினார் வத்திமீனாட்சி மகிழ்யூகா சித்தர்கள் வாழ்த்து
செயலாளா கொத்தன்மெய் காத்த குருநாதா
திருமால்வே ளத்தர்கமாக்க முனிவோரோ வர்க்குமினுப்த
திருவாரூர்த் தெத்சிணாமூர்த்தி பெருமானே

---

## கும்பகோணம் ஸ்ரீ மவுனசுவாமிகள் துதி

44 தந்ததான தனதனதான தந்ததான தனதனதான
தந்ததான தனதனதான—தனதான

கஞ்சமாது கலைமகள்போல வந்துலாவி மடவியர்மீது
கங்கிலாத மயலொடுநாளு மூலவாகி

கண்டுகூசி மறைவினில்வாயை மென்றுதூசு முகமறைவோடு
கண்டுகூசு மினிமொழிபேசு மொயிலாலே

பஞ்சுபோலு மனவிடுமீய மென்றுமேலு முருகிவிசார
பங்கமோடு பலபலதீமை பிணியோடு

பண்டிலாது சிலவயலூர்கள் சென்றுவீண ருறவுறவேச
பஞ்சைபோல வலைவதுமேழை சகியேனே

கொஞ்சுசோதி யுனதருண்ஞான பங்கயார பதமலர்பேணு
குன்றிடாத பாகதிகாண வாமீவாய்

கொண்டுபாடு மடியவர்பாவ மன்றுதீர வருடிருஞானி
கொஞ்சமேனு மசனமுணாது வெகுநாள்வாழ்

குஞ்சரேச னறுமுகனோ சம்புராமர் சிவனுமைவாணி
கும்பர்தேவர் சுரர்நரான நிலைசேரும்

கும்பகாதி தெளிசிவயோக சம்ப்ரதாய பிரமசொரூப
கும்பகோண மவுனசுவாமிப் பெருமானே

---

## ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் துதி

45 தந்ததான தனத்ததனன தந்ததான தனத்ததனன
தந்ததான தனத்ததனனன—தனதான

கொங்குலாவு கடப்பதொடைய ரம்பிசோலை வளப்பமுடைய
குன்றைவாழு முருத்ரகடவு டொழுமாவேள்

கும்பபார மலைக்குமதிக கொங்கைமாது குறத்திமருவு
கொஞ்சுஞான சமர்த்தரெமது குருபீடர்

தங்கபாள வரிக்கலுயரு சந்த்ரசீத விசித்ரவசதி
தங்குபால விழிக்குணிலவு நிலைமேலே

தஞ்சமாக ரமித்துவிரவி நெஞ்சமாயை நிவர்த்திபெறுத
றந்ததீத சுகத்தைபுபய மெனநீதா

செங்கபால றுனிக்குநடுவி லுண்டநாவி னடிக்குபுயர
சென்றுநாசி முனைக்குளுணரு மறிவாளர்

செந்துசோதி மயத்திலமைய வந்துகூடு மகத்வபிரம
சிங்கமாக நிலத்திலுதய முறுதீரா
அங்கமாமை தனக்குமுவமை யின்றியூக மிகப்பெறுபிர
சங்கவீர படிப்பாமுத கவிவேகர்
அன்றுசீட் நடக்கையடைய விண்டகாளி யருட்கொள்பரம
அம்சராம கிருஷ்ணவுலகர் பெருமானே

---

## பனையூர் ஸ்ரீ சங்கரநாராயண சுவாமி துதி

46 தந்தனதான தனதனதானன தந்தனதான தனதனதானன
தந்தனதான தனதனதானன—தனதான

ஒன்றெனவேதா கமமறைபூரண மொன்றுணர்வாரா துடனிலைபோ
முண்டணைமீதே துயிலறிவினத மசுபாபன் (னித
வும்பர்பிதாதாய் குருபிதிர்வேதிய ரன்பர்நியாயா ரணமறிநாவல
ரொண்டருள்ஞான திகள்ரிஷிமாமுனி வரைநோவும்
நன்றியிலாநாய்நாமுறையாயது மென்றுமெஞானதோடிழிகுணகாமுக
னம்பினபேரே வரையுமுதாசின மொழிபேசும்
நஞ்சனமாபாத வியனவியாதிநி ரஞ்சனசீதா மரைமலராகிய
நன்கழலாடா லயமொருகனவினு நினையாத
என்றனையார்தா னிருவினைநீறிடு மன்றநிறைேடமருவெனவோதுவ
ரெம்பெருமானே யிதுததியோதுக குருநாதா
இந்தவுலோகா தியுமுயர்வானுல குந்தொழுநாதா சகலகலாநவி
லெங்கள்குலாசாரி யபரிபூரண நிலையாளா
தன்றிரனேர்வே றெருவரிராரென வந்திடுமாராமகிரி மகானுரை
சங்கதியேதே ரறிவுருவாகிய பெரியோனே
சம்புகலானீ ழலலர்பெயர்கூறிய மைந்தருமீவா டவசியுளேமகிழ்
சங்கரநாராயண பனையூர்வரு பெருமானே

---

## நெட்டூர் ஸ்ரீ அற்புதானந்த சுவாமி துதி.

47 தத்ததா தந்தனத்தா தத்ததா தந்தனத்தா
தத்ததா தந்தனத்தா—தனதான

சத்திவேலுங் குருத்யா னத்தமாசுஞ் சுகர்க்கே
சத்தமேசும் பிரத்யே கவிசால
சத்யவா ளுஞ்சமர்த்தா வித்வவா ளுந்தவத்தார்
சத்வதாளுஞ் சிவப்ரீ திவிதேக
தத்வநூலும் பிறப்பா யுத்தியோ கங்கசப்பா
ரத்வநோ யஞ்சருட்பா சுயமோதல்
தப்பிலா நெஞ்சாக்யா திப்ரதானஞ் செழித்தே
சற்குண வந்தெனக்கே தாவேணும்
மூத்தனே தம்பியைக்கா விக்கணே யென்றவக்காள்
சொற்குவே ளம்புதர்க்கூ டேணும்
முக்கிவீ சும்படிக்கா கத்தின்மால் மங்குசித்தா
மூத்தயோ கந்தனிற்போய் நிறைவோனே
அத்தனே யன்பாட்சா சுத்தனே வும்பர்பட்சா
அத்வைதா னந்தவித்தாய் விளைவோனே
அர்ச்சனை கந்தமட்டூர் புட்பமா தண்டுநெட்டூ
ரற்புதானந்த வெற்கோர் பெருமானே

---

## கோயிலூர் ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமி துதி

48 தத்த தானதந்த தத்த தானதந்த
தத்த தானதந்த—தனதான

பற்றிலாத சிந்தை நற்றியான பண்பு
பத்திஞான வம்பு படையாத
பட்டிமா டிணைந்த கெட்டபாவி நிந்தி
பட்சபாத கங்கள் பலபேசும்

குற்றனூ ரிரந்து பிட்சையே யருந்து
குத்திசேர் தவங்கள் முயலாமற்
கொட்ப தாகவுண்டு மெத்தை மேலுறங்கு
குக்கனேர் குணங்கோ ளறிவீனன்
கற்றமூட னண்டர் சொத்தைவா ரவண்டி
கட்டியோடு குண்டன் வெளிவேடன்
கட்கொளாத திங்க ணிற்பதாய் விளங்கு
கர்த்தனே யகண்ட முணர்வேனே
முற்றுமா ரணங்கள் சொற்றநேர்வளங்கு
முத்தர்கூடி டுஞ்ச மிவனூர்வா
முக்கணீச பந்த துக்கநாச யெங்கள்
முத்தி ராமலிங்க பெருமானே

---

## கோயிலூர் ஸ்ரீ வீரப்ப சுவாமி துதி

49 தானதானன தானதானன தானதானன தானதானன
தானதானன தானதானன—தனதான

தீரமாபதின் மூவர்சோரமெய் யூரிரதறி வார்கதாகொடு
தியமோதிவி யாகுலாபர னபசாசு
சேணிலோடவி ழுவிவீணபி மானநாயைவி டாதுசாரொடு
தேரிமீரிய மாயையாமிருள் கலிசூழும்
காரபாசகொ டூரவாடவி வேரும்நூறவி டாவிசாரவாள்
காணவேநிரு தூளியாய்விழ மிகவீசி
காலையோர்சிவ யோகசாதனை யானதீயிடை தூவிவாசனை
காலபேதமி லாதமாளிகை தனிலேகி
தூரமோடிய னேகர்மேல்மய லாடுமாமன மாதைவாதொடு
சோகமாகுமு பாயலீலைகள் பலபேசி
தோய்விதேக சமாதியாநிலை மீதுமாகுரு நாதரோதிய
தூதினுலுணர் சோதியாயெனை யறிவேனே

மேருவேசிவ தாருவேசுக வாரியேவுப காரியேவருண்
மேகமேபிர வாகமேயர கரதேவே
வேதனேதிரு வாணிசார்தவ கோபிலூர்களர் வாழ்பராபுர
வீரசேகர ஞானதேசிக பெருமானே

---

## மதுரை ஸ்ரீ பிரமானந்த சுவாமி துதி

50 தனனாதந்த தனனாதந்த தனனாதந்த — தனதான

மதுபால்கண்டு கழைபாகிஞ்சு மலையாரஞ்சி ரசமான
வசனாரம்ப தனமாலங்க மடவார்தந்த மயலாலே
மதிவீறொந்து மெலிவாகின்ற மடனாயென்று னடிசேர்வேன்
மதபேதங்க ளறியாவும்பர் மகிழ்வாமெங்கன் குருநாதா
விதுவார்மங்கை மலைமாதண்டை விளையாடந்த நிலைவாழ்வே
வினைநோயஞ்ச மனநேரன்பு விளைவாய்நின்ற விருசீடர்
பிதிரேசிந்தை விவரீதங்கள் பிரிவாரங்கை மணிபோல்வாய்
பிரபூவிந்த்ரர் சுரர்பூசிந்து பிரமானந்த பெருமானே

---

## குன்றக்குடி மேலமடாலயம் ஸ்ரீ மவுனசுவாமி துதி

51 தானதன தானதன தானதன தானதன
தனதனதான — தனதான

காலனணு காதவிபு வாயசிவ ஞானநிரை
கடலிடை மேவு சுகமான
காலமிழி வாசையிரு ளேழுவமை ரூபமறு
கருணையை யாதி முதலான
சூலனரி வேதனிக மேலமர ரானபல
துறையது மாயை வழியாய்நீள்

சோதிமய நாதவொளி மீதுணர்வி தேகசிவ
துரிய வதீத மடைவேனே
பாலசிவை வாலையெம தாயுமைவ ராகிபரை
பகவதி காளி மகமாயி
பார்பதிப வானிசக சோதிவளர் வீடுடைய
பரமமயூர கிரிவாழ்வே
மாலறம னேலயச மாதிநிலை யோதிவரு
வரதுற வான குருநாதா
வானதரு நாணவன தானமிடு மேலமட
மவுன சுவாமிப் பெருமானே

---

## குன்றக்குடி மேலமடாலயம்

## ஸ்ரீ நித்தியானந்த சுவாமி துதி

52 தத்தன தந்ததன தத்தன தந்ததன
தத்தன தந்ததன—தனதான

பொட்டின லும்புதிய பட்டின லுங்கனக
புட்டமா நுஞ்சரண மலராலும்
புட்கணுலுங்குதன வட்டின லுங்களப
பொற்பின லுந்துவழு மிடையாலும
கட்டின லும்புனைகை முத்தின லுந்துவர்கொள்
கையிலா ரஞ்சிநிக ரிதழாலும்
கட்டிமோ துஞ்சுக புணர்ச்சியா லுஞ்சதிசெய்
கற்பிலா மங்கையரு ளுழல்வேனை
மட்டிலா வென்றிருவ டிக்கிழே வந்திடென
மக்கனே ரென்றனையு மினிதாள்வாய்
வற்றிடா தென்றுமரு டத்தசோ மாலயங்கண்
வைத்தபே ரின்பமய சுயசோதி

நிட்களா னந்தகுரு தச்சிஞ னந்தர்தரு
நிட்டைகூ டும்பிரம குருநாதா
நித்தனே யெங்குமதி முத்தனே குன்றைவளர்
நித்தியா னந்தவர பெருமானே

——

## ஸ்ரீ ஞானசிரியர் துதி

52 தத்தத் தானத்—தனதான

சுத்தச் சோதிச் சுடர்வீசு
தூர்க்கைத் தாயெற் குறவாக
நத்திப் போதத் திருநீறும்
நட்புற் றீசற் குருநாதா
சித்தர்க் காதிப் பனையூரான்
செப்பப் பாதத் தனைஞானி
முத்திக் காவைத் தியபூமா
முத்துச் சாமிப் பெருமானே

ஸ்ரீ தேவாதி மகான்கள் திருவருண்மாலை.

முற்றும் சுபம்.







ஓம் ஸ்ரீ குருவேநம:





சமரசானந்த

# சங்கீத மாலை.



## காப்பு.

இங்கீத தெய்வமெலா மிங்கிதமாய் வந்தருளச்
சங்கீத மாலைதனைச் சாற்றவே—தங்கைவர்
சாரதியன் பெற்ற சதுர்வேதன் மன்றமிடும்
பாரதியென் னாவிலிருப் பள்.

## கல்லல் ஸ்ரீ முத்து விநாயகர் கீதம்

இராகம்-அமீர்கல்யாணி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

கந்தனுக்கு முன்பிறந்த கணபதியே
முத்துக் கணபதியே முத்துக் கணபதியே (கந்)

அநுபல்லவி

கருணைப்ர வாகா கயமுக வாகா (கந்)

தொகையறு

கந்தமா மலர்சிந்து சந்தமிகு சோலைசூழ்
கல்விநகர் வாழுமரசே
சந்திரன் றடவவளை ருருணிக் கரையிலே
தங்குமா வெங்களரசே

முடுகு

சங்குகள் குங்குகு குங்குகு வென்க
செங்கழல் தங்குசிலம் பொலி பொங்க
திருவருள் மழை பெய்ய
வருவா யடியா ருய்ய (கந்)

தந்தைதாய் குருதெய்வ முந்தனைய லாமலே
தனையனுக் கேவர் சொல்லாய்
ஐந்துகர முந்தொந்தி வயிறுமோர் கொம்புமுற்
றுகேறி யுலவும் வல்லாய்

முடுகு

அப்ப முருக்கவ லிக்கிள நீர்பால்
முப்பழம் வைத்துமிகத் தொழுவோர்பால்
முன மகிழ்ந் தோடிவரும்
கணபதி பா டல் பெறும் (கந்)

---

## கல்லல் ஸ்ரீ நற்கனி அம்மன் கீதங்கள்

இராகம்-ஆனந்தபயிரவி-தாளம்-ரூபகம்.

பல்லவி

ஞான நற்கனி வாவா—உன்னை
நம்பினே னன்பனென் துன்பந்தீ ரின்பான (ஞா)

அநுபல்லவித் தொடர்.

நடமிடு மொலி கிடுகிடு வென
அடியவர் மிடி பொடிபட வரு (ஞா)

நத்துந் திக ழுத்தன் திரு
நத்துங் கன முத்தும் புனை (ஞா)

நந்தி யும்ப ணிந்தி டும்பெ
ருந்தவம் பொ ருந்து மெங்கள் (ஞா)

சந்தனந் திமிர்ந்த ணிந்திணங் கிரண்டு
கும்பமென் றெழுந்த கொங்கை மங்கைகள்சூழ் (ஞா)

முச்சுட ரெனவில கிச்சவி பெறுசக
ரட்சக பரசுக நச்சர வணிசிவ (ஞா)

நார்க் கேமுன் சுறப் பாகுந்
திருப் பாறந் தருட்பா சொல் (ஞா)

நடந்து வந் துடன் றெழுங்
கடன் றவிர்ந் தடங்கு வரின் (ஞா)

நடலைக் கடலைக் கடவப்
படுமுத் தரிடத் தடைசுக் (ஞா)

சரணம்

நன்மைதருங் குரு நாதப்ர காசியே
நானில மெங்கும் நடஞ்செய் விசேசியே
சின்மய சோதிச் சிவோகவி லாசியே
சீர்மிகுங் கல்லல் வாழ் தேவிமா ராசியே

சிந்தை நினைந்தநி வந்தனை
தந்தன மந்தரர் மந்திர
யந்திர சந்திர சுந்திரி
வந்தன மிந்தநே ரந்தனில் (ஞா)

ஈரேழுலோகத் திராச செங்கோன் முடி
எட்டுத்திக்கும் புகழ்ந் தேத்துங் குன்றக்குடி
காருண்ய வுந்தன் கடாட்ச வித்வக்கொடி
கட்டிடு வைத்யங் கணபதி பாவடி

காணற் கரு மாணற் புத
வாணிக் கருள் பாணித்திரு
வேணிப் பெரு மானட் பொடு
பேணிப் புகழ் மாணிக்கமே (ஞா)

3 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஏகம்

கண்ணிகள்

சங்கூறுங் கல்லலிலே சாரும்பூஞ் சோலையிலே
தங்கமணி மேடையின்மேற்
சிங்கா சனத்தில்மேவும்
தாயே நற்கனியே—அருள்
சேயே னுக்கினியே (சங்)

சன்யாசிக் கோலத்தோடு தாடிசடை நகம்வளர்த்து
தண்டூன்றிப் புலித்தோலின் மேற்
றன்னையறி தவத்திருக்கு மோர்
தனித்திடங் கொடுப்பாய்—அன்பர்
நினைத்ததை முடிப்பாய் (சங்)

மங்கள சுமங்கிலியே மாலைமணிக் கழுத்தழகி
இங்கழுது தொழுதழைக்கு
மேழைமொழி செவிக்கேறுத
தேதோநான் சிறியேன்—பிழை
யாதுஞ் செய்தறியேன் (சங்)

மயில்காடை குயில்கள்கூவு மன்றகுன்றைக் கணபதிசொல்
இயலிசை நாடத் தமிழ்ப்பா
வின்பாயணி கல்யாணி
இமயப் பெண்மணியே—துலங்
கெமது கண்மணியே (சங்)

4 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

பல்லவி

நற்கனீஸ் வரியே—அம்மா
நற்க னீஸ்வரியே

அநுபல்லவி

நம்புமன்பர் முன்புவந்தே இன்புறுநன் பொருள் புரிந்தருள் (நற்)

சரணம்

பொற்பாதம் பூசைசெய் புண்ணியம் பெற்றதே
போது மிதன்மேற் புகழெழுவர்க் குற்றதே
கற்குங் கடாட்சம்நேர் காணுமோ மற்றதே
கடந்தவ ரடைந் திடுங் கதியே
நடம்புரிந் திடுந் தயா நிதியே (நற்)

அற்புதச் சோலைவா ழார சிங்காரி
ஆதிமத் யாந்த வகண்டிதா காரி
எற்குத் துணையா யிருக்குங்கௌமாரி
இணையறு மயின்மலை சொல்லுங்
கணபதி கவியணி கல்லல் (நற்)

---

5 இராகம்-அமீர்கல்யாணி-தாளம்-ஆதி

பல்லவி.

நற்கனி அம்பிகைத் தாயே—நின்றாளே
நம்பினேன் சேயே (நற்)

அநுபல்லவி

கற்பகச் சோலைவாழ் நீயே—என்னாளுங் (நற்)
காத்தருள் வாயே

தொகையரு

(1) கற்பூர சோதியே பொற்பாவை மார்கள்சூழ்
கன்மண்டபப்ர காசி
சர்ப்பாபர் ணேஸ்வரி சாந்தகுண தீட்சண்ய
சர்வசாமர்த்ய நேசி
சட்கோண சக்கரம் வாழ்வாய்—சற்றேனும்
தயவுசெய் தாள்வாய் (நற்)

போராடு மென்கொடிய வூழ்வினைத் துயரெலாம்
போக்கிடு மகா ராணியே
காராடு வனபத்ர காளியே சூலக்
கபால கங்கண பாணியே
(2) கணபதிக் கவிஞர்பாச் சூடும்—மெஞ்ஞானக்
கருணைக் கூத்தாடும் (நற்)

---

6 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

பல்லவி

வாவாவா நற்கனியே (வா)

அநுபல்லவி

வண்டாடுங் கழல் கண்டே கும்பிட (வா)

சரணம்

(1) வானுந் தொழும் பைந் தொடியே
மல்ல கல்லல்வாழ் கொடியே
வாத்தியங் கடல் போல முளங்கிட
ராத்திரி நிலா வீச வரும்பிடி (வா)

(2) கெட்ட மனந் திரும்பு தில்லை
கேட்கு தில்லை யெந்தன் சொல்லை

கிருபையா முன தரிய தாளிணு
வொருமிதி மிதித் தறி வுறுத்திட (வா)

(3) மலே ராஜன் பெற்ற பெண்ணே
மாதவர் கொண் டாடுங் கண்ணே
மனத்தி னினேத்த வரத்தையுங் கொடுத்
தெனக்கு ஞானக்கண் டிருக்க வன்புடன் (வா)

(4) தேனுறு பாயுங் குன்றைச்
சேயேன் கணபதிக்கு நன்றைத்
தினந் தினந்தர மணங்கு சண்பக
மணிந்த தண்டைகள் கிணிங் கிணீரென (வா)

---

7 இராகம்-மால்கோஷ்-தாளம்-ஆதி

பல்லவி

எனது குலதெய்வ மேயிங்கு காவா (என

அநுபல்லவித் தொடர்

(1) மனது வந்தாடி மாலேகள் சூடி
மகனே அஞ்சே லஞ்சேலென ஓடி (என

(2) தண்டை சிலம்பு தானே புலம்ப
தகதகெனுந் தாள்த் தாளம்பூ விளங்க (என

(3) கலகல வென்றே கதிர்போலே நின்ற
கமகமென வாசங் கமழ்ந்திட வின்றே (என

(4) பால்மதி யன்ன பதைக்கத்தில் மன்னு
பலமணி பளீர் பளீரென்று மின்ன (என

(5) சூலங் கபாலம் சுடர்மழு வாலம்
துளியரவுங் காணத் தொந்தோமென் றிக்காலம் (என

(6) வறுமைகள் தீர மனேதிட மேற
வளருமஷ்ட லெட்சுமி வசியமாய்ச் சேர (என

(7) பேய்பிணி மாற்றுன் பீதியுந் தோற்றுப்
பிரம சுகானந்தம் பெருகவோர் காற்றுய் (என

(8) காட்சி கொள்வாளி கனிகல்லற் காளி
கணபதி வித்வான் கவியணி பூந்தோளி (என

---

8 இராகம்-அடாணு-தாளம்-ரூபகம்

பல்லவி

அருணற் கனி அம்பிகையின் சரணம்—கண்டா
லத்து விதத்திரு முத்திகை மேற்றரும் (அரு)

அநுபல்லவி

கருணை மிகுத்தொளிர் கல்லலைத் தேடியே
கவி பாடிய தவ கோடியே
குவி நாடிய சவி சூடிய (அரு)

சரணம்

(1) அனுத்தியப் பூமிமே லாசைப்பட் டென்பெற்று
யையோ மட மனமே-பொல்லா

ஆக்கையை நம்பிநீ கூக்குரல் போட்டும்வீ
ணுடுவதேன் தினமே

அண்ட புவன மனைத்துந்தான் தந்தது
தொண்டர்க்குத் தொண்டராய்த் தோன்றி நிறைந்தது
கண்டுங் கணபதி கைதொழ வந்தது

கடம்பணி குகன்றின முவந்திடு
நடம்புரிந் திடம்பெறுந் திடந்தரும் (அரு)

---

9 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

பல்லவி

1 ஓம் நற்கனியே நம்பினே னும்பர்
நாடுண்மையே அன்பர்
தேடம்மையே (ஓம்நற்)

அநுபல்லவி

அற்புத காளி அம்பாளே வாழி
அமலவிமல சோதி
அவிரோதி-அதிநீதி-அமராதி-பிறப்
பறுக்கும் பூங்கொடியாளே—துட்டர்
வருக்கம் போங்கொடியாளே—திரு
மாலும்பிர மாவும்புகழ்
சூலங்கொடு சீலந்தரு
சிங்கத்தனி விங்கென்பிணி
துன்பங்கெட வந்தின்பிடு மோம் (நற்)

2 வேணிகொள் வீரி வேதாந்த வாரி
மிகுத்த சித்தப்ர சித்தி
பிரவர்த்தி-தவமுத்தி-சிவபத்தி-மணி
மேடை வீடு வங்காரம்—கொடி-
யாடு கூடலங் காரம்—தரு
மேகந்தவழ் வாகிந்திர
லோகந்தொழ யோகங்கவி
வித்வஞ் சிவ தத்வம் பல
சத்வஞ் சுக மெத்துங் கல்லலோம் (நற்)

3 காணவு மில்லேன் கல்லாத பொல்லேன்
கடுத்த விக் கலி காலம்
பேய்ஞாலம்-அலங்கோலம்-செயுஞ்ஜாலம்—நம்பிக்

கலங்கவும் நா ஞளோ—வுந்தன்
கதியடைவ தென் ஞளோ—அந்த
காரந்தனி லாரெந்தனை
யார்வந்தருள் சேரும்படி
கங்கின்றி விளங்கும் பொரு
டங்கென்பர் வளங் கம்பிகை யோம் (நற்)

4 கணபதி பாடும் கவிமாலை சூடும்
காளியே சிவ தருவாய்—ஒரு
குருவாய்-எதிர்-வருவாய்-அருள்-தருவாய்-இனிக்
கவலை நான்பட மாட்டேன்-பதங்
கனிந்து கெஞ்சியுங் கேட்டேன்-அதி
காரத்திலும் வீரத்திலுங்
கோரத்திலு மீறித்துணி
கண்கண்ட செழும் பொன்பிடி
விண்கொண் டுயரும் பைந்தொடி யோம் (நற்)

---

10 இராகம்-பிலஹரி-தாளம் ஏகம்

பல்லவி

ஞான நற்கனி மாதா எந்த
நாளு மேழைமேல் வாதா (ஞா)

அநுபல்லவி

நான்மக னிலையா நலந்தரல் மலையா
நடனம் புரிபஞ்
சடியின் சரணஞ் சரண் (ஞா)

சரணம்

1 தானந் தருமந்திகழ் தவக்கல்ல லாளே
ஆனந்த வல்லியெனக் கருளும் புத்தேளே

அபய மபய
முமையே சமயமிது (ஞா)

2 அழுது தொழுதுருகி யழைப்பதைப் பாராய்
பழுதுறு தொருசிறு பாவைபோல் வாராய்

பரம கருணா
கரியே திரிநயன (ஞா)

3 குணமதி குன்றைநகர்க் கணபதி பாடும்
மணமலி கவிமலர் மாலைகள் சூடும்

வரவந் தரசந்
திரசுந் தரியே யருள் (ஞா)

---

11 இராகம்-பிலஹரி-தாளம்-ஆதி

பல்லவி.

இனிமேல் நமக்கிட ரேதுமில்லை மனமே
இசைகல்லல் நற்கனிதா னெண்ணு தினமே (இனி)

அநுபல்லவி

அனியாய மாயுல காசையி னுன்முனமே
அலைந்து திரிந்ததெல்லா மறிந்தனமே (இனி)

தோகையறு

1 பனையடி யிருந்துமே பாலினைப் பருகினும்
பருகுவது கள்ளே யென்பார்
வினைய மில்லாமனீ மறுமாதரொடுபேச
வேண்டாம் விரைந்து முன்பார்

பாட்டு

மெல்லிய ளாளொருத்தி வேடிக்கைகள் செய்கிறாள்
வல்லவ ளென்றருளா மழை பெய்கிறாள்(இனி)

2 பச்சைவடி வானபெண் பாரெலாம் பரவுகண்
பாவை செம்பவள வாயாள்

கச்சணி தனத்தினள் காஞ்சுர வனத்தினள்
காளியான் கருது தாயாள்

பாட்டு

கலிகாலத் தடஞ்செய் காமுகர்க்குக் கொடியாள்
மலைபோ லெழுந்துநிற்கு மலர்க் கொடியாள் (இனி)

3 கற்பூரவல்லி கற்பகவல்லி சிங்கார
வல்லி மாணிக்க வல்லி

பொற்பானவல்லி பொற்பதவல்லி சிந்தூர
வல்லி பூலோக வல்லி

பாட்டு

புணையெனப் போற்றுஞ்சிவ போகக் கடலிடையே
புகுந்திடப் புரிகுவோம் பணி விடையே(இனி)

4 சூலாயு தங்கொண்டு மாலைதோள் புரளவே
துள்ளியோர் சிங்கமேறு

கோலா கலத்துடன் மேலோர் மதிக்கவரு
குலதேவி துதிகள் கூறு

பாட்டு

குயிலலை சோலைதவழ் கூடகோ புரங்கள் சூழ்
மயில்மலைக் கணபதி வழுத்தினேன் கேள்(இனி)

---

12 இராகம்-பியாக்-தாளம்-ஆதி

பல்லவி

மகிழ்ந்தினியே காக்க
வாவா வோ நற்கனியே (மகி)

அநுபல்லவி

புகழ்ந்துல கேழுமோது புண்ணியக் கல்லல்மீது
சுகந்த மிகுந்தபோது சூழுஞ்சோலை வாழுமாது (மகி)

தொகையரு

1 அகந்தையாந் துன்பத் தழுந்தியது போதுமுன்
னருள்வீசு சரண மேற்றி
சுகந்தங்கு சின்மய சொரூபமே மருவுவான்
சொல்லுவாய் சோதி போற்றி

பாட்டு

துரிய முடிமேலே தோன்று மின்னலைப்போலே (மகி)

2 வுலகிலே எல்லாரு மின்புற் றிருக்கநா
னொருவனொந்துழல னன்றோ
இலகியே மின்னுமொரு ஏகாந்த வாரியே
என்னைநீ யாள்வ தென்றோ

பாட்டு

இனிச்சகியே னரு ளின்பான வாசகியே (மகி)

3 பட்டதுயர் கொஞ்சமா பார்த்தாள வஞ்சமா
பரமகல்யாணி யம்மா
கிட்டவா தஞ்சமென் பஞ்சந்தீ ரென்றகுரல்
கேளாதேது சும்மா





பாட்டு

கிருபை செய்தேவர    கீர்த்திமா மழைபெய்தே (மகி)

4 பூஞ்சோலை மாஞ்சோலை தேஞ்சோலை தவழ்மேடை
பொங்குமுகில் வந்துகூடும்
காஞ்சூர வனவில்வ நீழல்வளர் காளியே
கணபதிக் கவிஞர்பாடும்

பாட்டு

கானக் குயிலேமூன்று    கண்கொண்ட பூமயிலே (மகி)

---

13 இராகம்-தோடி-தாளம்-ஆதி

பல்லவி

மாதாநற் கனியேவுனக்கு மனமிரங்கலையா (மா)

அநுபல்லவி

போதாதோ பட்டதுன்பம்    புன்னகைகொண் டருளுமின்பம்
புரிந்திடுங்கனி மரங்கடங்களை    வருந்திவந்தடை விருந்தினக்கிடும்
புண்ணிய கல்லலுக்    கரசி—பூசை
பண்ணினே னுள்சிவ    சரசி (மா) 1

ஓதாம விருந்தறியே    னுள்ளமிசைந்திடுஞ் சிறியே
னுனக்குமித்தனை வருத்தமுற்றமை    யெனக்குரைத்தருள் வனத்தி
மோகியப் பத்தினி    மானே-எனை (லுற்றிடு
யூருக்கூ    ரோட்டுவ தேனே (மா) 2

பெற்றவளும் நீயாச்சே    பிள்ளையானெனும் பேச்சே
பிறங்கிரும்புவி யொருங்கறிந்திட வரந்தரும்படி விரைந்தெழுந்தருள்
பேதமா    யெண்ணுதே-இன்னும்
சோதனைசெய்    யொண்ணுதே (மா) 3

பாரைப்படைத்த நீயே பரிபூர்ணமான தாயே
பசுங்கொடிபல விசும்பொடும்படர் பசுந்தழகிசை நிசம்பிறந்திசை
பணமதி குன்றுக் குடியில்-வாழும்
கணபதிக்கரு ணைடியில் (மா) 4

---

14 இராகம்-அமீர்கல்யாணி-தாளம்-சாப்பு

## கண்ணிகள்

1 கண்டாலுந் தீரும் பாவமே
காளிநற் கனியின் தீவமே
உண்டாகும் ஞானி யாவோமே
ஒன்றாய் நாமுவந்து போவோமே (கண்)

2 பத்தர் படுந்துயர் தீர்ப்பாள்
பாடினுற் பதமதிற் சேர்ப்பாள்
நர்த்தன காளியா யார்ப்பாள்
நமக்கே நலமுறப் பார்ப்பாள் (கண்)

3 அஞ்சாத நெஞ்ச முடையா
ளடியார்க் கருளுங் கொடையாள்
இஞ்சார வன்ன நடையா
ளினிமே லென்னைப் படையாள் (கண்)

4 சூலாயுத மே தூக்குவாள்
துட்டரைத் துணிந்து தாக்குவாள்
காலாயுத னன் பாக்குவாள்
கணபதி கவியை நோக்குவாள் (கண்)

---

15 இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி

கண்ணிகள்

1 நமதுபாவச் சுமைதவிர்த்திடுமே-நற்கனியின்பாதம்
நம்பினோர்கள் துன்பந் தீர்த்திடுமே-எந்த
நாளும்நம்மனை யாளு மைந்தருங்
கேளுமன்புடன் வாழு மின்பமும்
ஞானமுஞ் சிவத்தியானமுங் கொடுக்கும்-எமன்வந்தாலே
நடந்துவந்தவ னிடும்பறத் தடுக்கும் (நம)

2 கமகமெனுங் குங்கும மலர்சொலிக்கும்-கற்பூரவாசக்
கனகதண்டைகள் கலகலென் றொலிக்கும்-திருக்
கல்லல்மேல்புர மல்லிமாமரு வல்லிரோசொடு முல்லையேபடர்
காஞ்சுரைவனந் தான் சிறந்துலவும்-கண்டாலானந்தக்
கடன்மடைதிறந் துடனி தங்குலவும் (நம)

3 அமுதமுங்கொடுத் தமர்மக னேயென்னும்-அஞ்சாதேயென்
மபயங்காத்து முபயமாய் மின்னும்-நினைத் (று
தாசையானதை நேசமா யெதிர்
பேசியேதரு மாசிலாதது
வணிமணியரண் மனை யொழில்சூழும்-குன்றக்குடிசொல்
கணபதிதனைக் குணமிகுந் தாளும்

---

16 இராகம்-தோடி-தாளம்-ஆதி.

கண்ணிகள்

1 மலரெடுத்தே நற்கனிதாள் வாழ்த்து வோமே-நாமே(மல)
மனவாக்கு காயங்களால் வந்த பாவமே-தீரக்
கனிவாய்க்கொண் டேற்றுவோங் கற்பூரதீவமே
கற்பூர தீவமே-காணிப்
போதே போவோமே (மல)

2 வரிவரியாய் மணிபதித்த மாடிமேலே-மின்னும்(வரி)
மாலைநிலாப் போலழகா மாதரைக்கூடி-நித்தம்
வைரநகை சேலைமலர் மாலையுந்தேடி

மாலையுந்தேடி — செத்தால்
வருமோ பின்னோடி (மல)

3 சோலைச் சிங்காரக் கல்லல் சொல்லு மாதாம்-வாச(சோலை)
துர்க்கை பராசத்தி பரஞ்சோதி யென்றோது-சர்வ
துக்கமுந்தீர் சொர்க்கமுந்தான் கிட்டுமெப்போதும்

கிட்டுமெப்போதும்-வீணாய்க்
கெட்டது போதும் (மல)

4 சூதந்தரம்போ லுடலைநம்பிச் சுற்றேறது-நாளுஞ் (சூத)
மதம்பிடித்த பேயுலகில் மயங்குதல் தீது-குன்றை
வளருமன்பன் கணபதிசொல் வளங்கிடுஞ் சாது

வளங்கிடுஞ்சாது-மக்கா
ளுளங் கலங்காது (மல)

---

## 17 இராகம்-பிலஹரி-தாளம்-ஆதி

### கண்ணிகள்

1 மனத்தினினைத்த வரமகிழ்ந்தே கொடுக்குங் கல்லல்
வனத்திலிருக்கு மெங்கள் மகமாயி(மன

கனைத்தெழுந்திடி யெனக் கார்போல் வருமகுடன்
கண்ட துண்டமே செய்த ககவாயி
காஞ்சூரஞ் சோலையலங்கார வொய்யாரி
மூஞ்சூறு வாகனைமுன் னீன்ற கௌமாரி (மன

2 அனைத்தும் பெறுதுபெற்று டரனோடுற நடித்த
ஆனந்த வல்லியெனு மருண் மயிலே

அண்டபுவனமெல்லா மடுக்கடுக்காப் படைத்து
மன்ருடக மமுதூட் டறக் குயிலே
ஆதிபரஞ் சோதியா யமர்ந்த மங்கையே
ஆயர்குல நாயக னகங்கொள் தங்கையே (மன

3 பச்சைப் பசுங்கொடியே பாவபுண்ணிய மில்லாப்
பார்பதிபங்கயப்பூங் கண்ணுடையாய்
பாடகந் தண்டைகளும் பாடப் பாங்கியருடன்
பல்லக்கி லேறிவரும் பண்ணுடையாய்
பண்டார வேடவடி வேலவ னன்பாய்
கண்டே பாலுண்டசிவ காளிவா முன்பாய் (மன

4 பாளைகமழுந் தென்னை பாக்கு மரங்களிலே
பண்ணைக் கயல்கடுள்ளி விளையாடும்
தாளைமணக்குந் திருத் தகுந்த குன்றக்குடி
தமியன் கணபதிசொல் தமிழ் சூடும்
சங்கரி மகேஸ்வரி சடாதரி நமோ
சந்திர சவுந்தரி பராபரி நமோ (மன

——

18 இராகம்-மோகனம்—தாளம்-ஆதி

பல்லவி

கண்டாலானந்தம் கனிந்தூறுமே-கல்லற்
காளி பூஞ்சோலை கலைப் பாருமே-நித்தங் (கண்)

அநுபல்லவி

1 நன்மை-உண்டாகுஞ் செல்வ முயர்ந் தேறுமே-வாலை
யுத்தமியா டாளுறச் சேருமே
ஓதுதற்கரு மாதிவட்கிணை
யாதிகத்தண்ணு மல

ரொய்யாரப் பூங்குயில்போ
லோதிடும் பண்ணுள் முரு
கோதைகொள்பூங் கோதை பரஞ்
சோதிமுக் கண்ணுள் எமப்

பீதியும் பிணி யாதியுந்தணி
பீதசந்திர சீத சுந்தரப்
பெண் பெண் பெண் (கண்)

2 ஜெய-அண்டாதி தேவர்க்கும் பட்சமானுள்-ஞான
வம்பிகை யென்குமோர் பச்சை மானுள்

ஆசையினுல் மோசம் போரு
லடைவது பாழே காண
ஆயிரங்கண் வேண்டுமவ
ளலங்காரத் தாளே தாயே
அம்மா யென்ருல் மகனே வாயென்
றமுதளிப்பாளே பேடோ
டன்றிலுலா குன்றை நகர்
சார்கணபதியார் தமிழ்மொழி
பேசு பேசு பேசு (கண்)

---

19 இராகம்-கமாஸ்-தாளம்-ரூபகம்

பல்லவி

வீதியில் வாராளோ என்முகத்தை
விரும்பிப் பாராளோ (வீதி)

அநுபல்லவி

பாதிமதியணி நாதனிடத்திலுஞ்
சேரதியதாய் வளர் மாதுமை நற்கனி (வீதி)

சரணம்

1 ஆதிபராசத்தியே வுலகெலா மாளுமிரா சத்தியே
பேதமிலா முத்தியே தரும்பரப்பிரம விலா சத்தியே
பிள்ளையுனக்கும் ரெண் டுள்ளது ஞாயத்தை
விள்ளுதி யென்றெனக் குள்ளதைக் கேட்க (வீதி

2 காடுமேடுங்கடந்து வுன்பதிக்கே கால்வலிக்க நடந்து
நீடுமன்பேபடர்ந்து நின்னையே நினைந்துநினைந் திடைந்து
நெற்றுடல் வற்றலாய் வற்றியே சுற்றவ
துற்றதோ குற்ற மகற்றெனப் பெற்றவள் (வீதி)

3 எத்தனைநாட் சகிப்பேன் மூவெழுத்தை யென்னவிதஞ் செபிப்பேன்
இத்தனைவீண் தவிப்பேனென நீவந்திவதென்றே சுகிப்பேன்
ஏலத்துவர் வாயாய் பாலனுக் கோதெனக்
காலைப்பிடித்துக்கொண் டோலமிட் டலர (வீதி)

4 கண்ணன் சகோதரியே வளமிகு கனகபூதரியே
தண்ணுர் சடாதரியே ஞானவாலைத் தாயேதயாபரியே
தஞ்சமென மிக வஞ்சலி செய்துமே
மஞ்சன் கணபதி நெஞ்ச மகிழ்ந்திட (வீதி)

---

20 இராகம்-பூரிகல்யாணி-தாளம்-ரூபகம்

பல்லவி

அம்மா-இன்னுந் தெரியலையா உனக்
கிதுவொரு மலையா (அம்)

அநுபல்லவி

அன்னையே நற்கனி யம்மையே வுன்னைவிட்
டின்னுமோர் தெய்வமுண் டென்ன நினைவேனு (இ)

சரணம்

1 பொன்னை நினைந்துநான் பூசிக்கவுமில்லை
பூவையர் வேண்டியு பாசிக்கவுமில்லை
உன்னைப்போல நானும் வாசிக்கவுமில்லை
உலகப்பொருள்களை யாசிக்கவுமில்லை (இ)

2 கந்தம் புனுகுகத் தூரியின் வாடை
கமழுங் கும்ப தனத்தின் மேலாடை
விந்தைமிக விளை யாடிப்பொன் மேடை
வீற்றிருப் பவளே சொல்லிய சாடை (இ)

3 தாயுனை யன்றியோர் தாயெனக் குண்டுமோ
சந்தித்தா லென்வினை சற்றேனு மண்டுமோ
சேயுனை விட்டெங்குஞ் செல்லுகேன் கண்டுநீ
செனன மரணச் சிறைதவிர் சண்டினி (இ)

4 நாலு தலையுடை ஞான வேதாவே
நாடு மறுமுக நல்ல தாதாவே
காலை மாலைநினை கற்பகக் காவே
கணபதிக் கருள் லோக மாதாவே (இ)

---

21 இராகம்-இந்துஸ்தான்தோடி-தாளம்-ஆதி

பல்லவி

1 பஞ்சவர்ணக் கிளியே போய்ப்
பார்த்துவந்து சொல்லுவாய்
சொல்லுவாய் தூது செல்லுவாய் (பஞ்)

அநுபல்லவி

அஞ்சனந்தீட் டயில்விழியாள் அமலையமுதா மொழியாள்
ஆலவாய் வாலையின்பாலே யிவ்வோலை கொண்டு (பஞ்)

பல்லவி

2 அஞ்சலிக்கு மடியாரை
ஆதரிப்ப தாரம்மா
ஆரம்மா-பதில் கூறம்மா (அஞ்)

அநுபல்லவி

என்சிரமந் தீர்ப்பதென்றோ எல்லார்க்குந்தாய் நீயன்றோ
ஈதேது வாதுயென் மீதோதிப் போதெனவே(பஞ்)

பல்லவி

3 தரிசனந் தந்திட வாராய்
தாயே மீன லோசனி
லோசனி சிம்ம வாசனி (தரி)

அநுபல்லவி

பிரியந்தெரி யாதவளோ பிள்ளைப் பெறாதவளோ
பின்னைநீயென் ஞண்மட்டென்னை வாதிப்ப தென்ன(பஞ்)

4 சட்சமய சமுதாய
தர்மஞாய பார்பதி
பார்பதி-யருள்-சேர்பதி (சட்)

கட்செவிகூ டசனேசி கணபதிமுன் வந்துபேசி
கன்றாத நின்றாடாவென்றே நவின்று மின்றே(பஞ்)

22 இராகம்-சிந்துபைரவி-தாளம்-ஏகம்

கண்ணிகள்

1 வாலையான நற்கனித் தாயே
வாராத வாது வேணோதாயே
மாதா நீயே மைந்தன் சேயே
மாஞான சோதி விநோதியே (வா)

2 மாமகள் கொண்டாடும் நாளியே
மாதவர்கள் பாவநிர்த் தூளியே
மாலைத்தோளி சோலைக்கூளி
வந்தேவணங்கி நிற்கும் காளியே (வா)

3 சோலை சூழுங் கல்லல் மேவியே
தோயு மனோன்மணி கூவியே
சூராராவி சோரவேவி
சுப்பிர மணிக்கருளுந் தேவியே (வா)

4 சோம சேகரவி ராணியே
தூயசுடர்ச் சூல பாணியே
சோதிவாணி யோது வேணி
தோகாய் கணபதிசொல் பேணியே (வா

---

23 இராகம்-இந்துஸ்தான்தோடி-தாளம்-ஆதி

பல்லவி

நம்பினேன் கல்லல் வாழும் நற்கனியே (நம்)

அநுபல்லவி

1 உம்பருள் விழியே ஓதருள் வழியே
ஒவியமாக வரும் ஒவியமாக வரும்
ஒண்டொடியுந்தன் தண்டையந்தா ளிரண்டை (நம்)

2 அத்வைதப் பொருளே அடைந்திடார்க் கிருளே
அண்டரகந்தனிலே அண்டரகந்தனிலே
அன்புட னின்றறிவா யமர்ந்தவளே (நம்)

3 தீனரட்சகியே சிவனிடச் சகியே
தேவிசிங்கார வல்லி தேவிசிங்கார வல்லி
தேடிநாடியே பாடிப் பதம்பணிந்து (நம்)

4 திருக்குன்றுக் குடியே யிருக்கு முன்னடியேன்
சேயன் கணபதிசொல்சேயன்கணபதிசொல்
சீர்த்தி யாயணி மூர்த்தியுன் கீர்த்திகண்டே (நம்)

---

24 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

ஓரடிச் சந்தம்

பல்லவி.

கருணாகர நற்கனித்தாயே கல்லல் வாழ்வாயே (கரு)

அநுபல்லவி

காலிற் சிலம்புதண்டை கலகல வென்றே
கதரிட மகுடனைக் கடுந்துபோ யன்றே
சூலத்தா லவன்றுடி துடித்திடக் கொன்றே
சுரர்க்கருளிய தாயே துதித்தன னின்றே (கரு)

சரணம்

ஒருநாளுமுன்னை மறவேனே வுண்மையாய் நானே
திருநாம சிந்தனஞ் செய்தேனே சித்தாதிதேவர்
மருநாண் மலரிறைக்குந்தேனே மன்றேறியன்று
மாலுரோடாடிநின்ற மானே சண்முகவேளை

அம்போருகம்போ லுறும்பூமுகம் பேணியேந்தி
அன்புபாலித்து
வம்பா லெழும்பார செம்பார்த்தனம் பாலொடீந்து
மகனே யென்று
சம்போசிவன் போனகன் பூவிமன் போகியேந்தல்
ஈரேழுலோக
காவலருஞ்சுய நாவலரும்பல பாவலருஞ்சில சீவர்களும்புகழ் கூற
கைவில்லம்போடு

மூவுலகந்தனில் யாவரும்வந்தெதிர் போர்புரிவன்மையி லாவகைகக
அம்பிகையாளே (ண்டவராகி

கட்டளையிட்ட படிக்கிரவிற்பணி முற்றுமுடித்தமை வுற்றதிருக்கிரபூ
வேதாளங்கூட (த

வட்டமணிக்குடை பெற்றொளிர்ரத்தின பொற்றவிசிற்கொலு வுற்
வாடமருகம் (றிரணத்திரிசூலம்

உட்டுளைகட்டரி பட்டயமக்கினி வட்டொடுநச்சர வச்சரிகட்டுகபா
ஓங்கியோர் சிங்க (லம்

வாகினிலா ரோகணமா யீகையோ டுலாவுலோகமாதா
வஞ்சகமூடர்

வர்க்கமற் றிடப்பிடித் தடித்துடற் குடற்பறிக்குஞ் சூதாய்
மந்திராதாரி

மானதபூசையி லேநிதமன்பர்க டானிணையுந் தவஞானவ கண்டித
மனோலயத்தின் (சோதி

கருத்தை விரித்து முரைத்து மகத்வ
வரத்தையளித்து முருத்தோ டிருத்தும் யோகி
மகான்கள் வாழ்வே

காவிரிந்துல கெல்லாங் கமழும் பூப்பூக்கும்
காட்சிமிகுந்த் குன்றைக் கணபதி வாக்கும்
பூவிலழ கெனவே புகழ்ந்தறி வாக்கும்
போதமுதவியு போதுமெமைக் காக்கும் (கரு)

---

## குன்றக்குடி ஸ்ரீ ஷண்முகநாதன் கீதங்கள்

25 இராகம்-இந்துஸ்தான்பியாக்-தாளம்-ஆதி

பல்லவி

முருகா குமார சிவஷண் முகனே சரவணபவனே
மூவுலகொப்பில் மயூரகிரிக்கதி முதலாய் வந்தவனே (முரு)

அநுபல்லவி

முருகார் தருகார் குருகார் முதுவரை முனிதொழுங்குருவே
முடைகெடநடி யடிமுடிபடைத்
திடுமடியவர் படுமிடிதவிர் (முரு)

சரணம்

1 முராகரி திருவுள மகிழ்வுறு
சராரெகுபதி யிருவினை யரு
முக்கதிர் புக்கு மமரபதி
சக்கர செக்கர வதிபதி
இரணிய னெடுங் குட ருடையிடு
மறு கருடரு கருடனில்வரு
மிக்கனங்க னைத்தருங் கனத்தினு
ரிடைக்குடி யுடைக்கண்ணர்
படித்துரு கோர் (முரு)

2 ஒருதரம் நினை பவரிருதய
மிருதர மகிழ்வுற வுரைதரு
மிச்சையொளித் தருளாகிய
பிச்சையளித் திடுயோகிய
ரிகபரநர கருமிதமொழி
பகரினுமத வசைபுரியினு
மின்பதுன்ப மென்ப துன்பா வில்லையா
ளிதக்கண பதிக்கரு
ளுதிக்கு மகா (முரு)

---

26 இராகம்-சாவேரி-தாளம்-ஆதி

பல்லவி

துதிப்பதெப்போது நெஞ்சே சுப்ரமண்யனை (து)

அநுபல்லவி

1 சுகந்தமா தரங்கத்து மகத்தைமா தரங்கத்து
மிகுந்தமா தரங்கத்து புகுந்துநா மிருந்தால் (து)

2 துரைமகனைப் போலே பிரபைவிசிர் மேலே
கறையுமா ருமாலே பெருகி நின்றாலே (து)

3 திடத்தையும் நாவல்வி கடத்தையும் வைத்தியவா
கடத்தையும் பார்த்துச்சங் கடத்திலே மூழ்கினுல் (து)

4 தொண்டர்களைத் தேடி தண்டமி ழைப்பாடி
சண்டனற னடி குண்டலியிற் கூடி (து)

5 சுடுகோட்டினி னின் றிடுநாட்டியர்கும்
பிடுதாட் டுணைவேற் படைவேட் டவனை (து)

6 பணபதி மகடேடு மணபதி யருள்கூடு
கணபதி கவிசூடு குணபதி தனைநீடு (து)

---

27 இராகம்-கவாய்-தாளம்-ஆதி

பல்லவி

முருகன் திருமால் முரகரி மருகன் (எங்கள் முரு)

அநுபல்லவி

உர, மூரியே றெமனுரு மயூரகிரி (முரு

சரணம்

1 கருதினோர் நினைவன கனிவொடு தருபவன்
கடந்த மெஞ்ஞானிகள் களிப்புற வருபவன்
இருநில முயவரு மிறையிவ னொருவனே

இன்னலில் லாதான் புன்னகை யேதான்
மன்னலர் போதான் பொன்னகைக் காதான் (முரு)

2 கடுத்த சூராடத்தைக் கெடுக்கவே யெடுத்தவன்
காவல்விட் டமரரைக் கடத்தியே விடுத்தவன்
தொடுத்தபத்தர்க ளிடர் துடைத்திடங் கொடுத்தவன்
சுத்தசிங்கார முத்தலங்கார
மித்ருதங்கார சத்ருசங்கார (முரு

3 சம்பந்தன் தண் சரவண பவகுகன்
தம்பஞ்சிந் தருடரு மறு முகன்
சம்பின்பங் கொண் டுயருமையவள் மகன்
தாரதம்மியக் காரனன்வயத்
தாரவன்யவித் யாரண்யக் குரு (முரு)

4 சுகந்தன் சுகந்தன் சுகந் தருந்தர நிரந்தர
துவிதாத் துவிதாத் துமார்த்த துரந்தரன்
குகனம் புயனயன் கோபுரன் புரந்தரன்
கூடுங்குணபதி தேடுங்கணபதி
பாடுங்கவிபுனைந் தாடுங்குருபர

---

28 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

கண்ணிகள்

1 ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே-நமக்
காண்டவன் மயூரகிரி யான் சொந்தமே
ஆதவனைப் போதுமலர்ப் பாதம் நினைக்காதுமதப்
பாதைபுகுந்தாற் பிறப்பு பாதை தீருமா (ஆ)

2 ஆறுமுகன் சந்நிதிமுன் னாடிக் கூடுவோம்-நமக்
கவனன்றித் துணையாரிங் கருளைத் தேடுவோம்

ஆடுமாடு வீடுவாசல் கோடிகோடி தேடினும்
கூடுசுடு காடுபோனுற் கூடவருமோ(ஆன

3 தானமுந் தவமுந்தானே தலைகாக்கும்-கந்த
சாமியைக் கண்டேவணங்கிச் சஞ்சலம் போக்கும்
சாரமில் சம்சாரமாவி சாரமற்று சாருடனே
தாமதஞ் செய்யாமல்நாம் சதாவும் பாடுவோம்(ஆன

4 தேவாதி தேவநிலை தேர்ந்து கொள்ளுவோம்-வினைத்
தீதான காரியத்தைச் சீறித் தள்ளுவோம்
சேமபனை யூரின்மெத்து மாமுனிவரங் கொள்முத்து
சாமிமகன் கணபதி பா முளங்குவோம்(ஆன

---

29 இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி

பல்லவி

ஆண்டவனைப் போற்று நெஞ்சமே-குன்றை
ஆண்டவனைப் போற்று நெஞ்சமே

அநுபல்லவி

தாண்டவனும் வேடித்தொண்டு
பூண்டகந்தனை வேண்டி யீண்டு (ஆண்)

சரணம்

1 ஆசையாவு மகலநீக்கி அறியுமென்னை யறியநோக்கி
ஓசைகண் டுறக்கம்போக்கி ஓரதீத நிலையுண்டாக்கி (ஆ)

2 பந்தமகலப் பதத்தைவேட்டி பரமஞான பதவிநாட்டி
அந்தமறியா வருளைக்காட்டி அல்லலெல்லாந் தள்ளஓட்டி(ஆ)

3 மலமெடுத்து மாலைகட்டி மாபதத் தணிந்ததட்டி
மலபசாசை மாயவெட்டி வளரும்வெற்றி முரசுகொட்டி

4 முத்தரோடு முறையாய்க்கூடி மோனநிட்டை முடிவைநாடி
கர்த்தனுல யத்துளோடிக் கணபதிகவி கனிந்துபாடி (ஆ)

---

30 இராகம்-மோகனம்-தாளம்-ஏகம்

பல்லவி.

4 சரண் சரண் தண்சண் முகமணியே (சர)

அநுபல்லவி

சரவணபவ குகவறுமுக
குருபரவர கரமுருகா (சர)

சரணம்

1 கருவினிலுரு வாயுதித்து வருபிறவி யறத்தகித்து
மருமலரடி யான்மித்து னருளருள்புரி வாயகத்து (சர)

2 செருவருவசு ரோரைவெட்டி யிருளுறுவரை வீழமுட்டி
வருவடிவயி லோடுகிட்டி வரநினைசிவ ஞானசெட்டி (சர)

3 ஒருகுறமக ளோடுகூடி முருகலர்மண மாலைசூடி
திருநிரைமயி லேறியாடித் திகழறுமுக வாருமோடி (சர)

4 அருணகிரி மாதவர்க்கு அருளளித்த வாகதிக்கு
வரமளிப்பாய் கணபதிக்கு வளமிகுத்த மயில்மலைக்கு (சர)

---

31 இராகம்-செஞ்சுருட்டி-தாளம்-ஆதி

பல்லவி

கத்திக் கத்தித் தொண்டையெல்லாம் நோகுதே-நல்ல
காலம் வீணாய்ப் போகுதே-நித்தம் (கத்)

அநுபல்லவி

1 சத்திவே லாயுதனே சண்முகனே-வள்ளிப்
பத்தினியைத் தழுவும் பாசுகனே-சர்வ
பரிபூரண செஞ்சுடர் வேளே
பெருமாளே யிருதாளே
பணிந்தே னிந்தவேளை யிங்கேவந் தாளே-கீதம்
பாடிப்பாடி யுன்மேலே (நித்)

2 தாதாவுன்மன மின்ன மிரங்கலையா சொல்லும்
பேதை யெனையாள்வ தோர்பெரு மலையா-புல்லர்
பிறகலை பிரமையை நிந்தித்தே
சந்தித்தே சிந்தித்தே
பிரபுவேநின் ளுறெழுத்தை மந்த்ரித்தே-நாடோறு
மிரவுபகலாய் வந்தித்தே (நித்)

3 ஞானபண்டிதா தேவ நாயகனே-ஈரேழ்
ஞாலமெங்கும் நிறை வியாபகனே-உன்னை
நம்பினே னன்புட னருடருவாய்
சிவ தருவாய் வளர் திருவாய்
நாடிடுங் கணபதிகவி மலர்சூடிடுங் குருவாய்-நேரே
ரட்சிக்க வோடி வருவாய் (நித்)

---

32 இராகம்-சங்கராபரணம்-தாளம்-ரூபகம்

பல்லவி

நான்-பட்டதுன்பம் போதுமையனே யினியெனைக்கண்
பார்த்தருள் பன்னீர்கையனே(பட்)

அநுபல்லவி

துட்டமட மாதரைத் தோகைமயி லன்னமென்றுங்
கட்டழகு விடக்கூடிக் கட்டிக்கட்டி முத்தமிட்டு(பட்)

சரணம்

1 பட்டிமாடு போலலைந்து பாதகரைக் கூடிநொந்து
பரிகாச வார்த்தைபகர்ந்து பெரியோரையும்
பாராதிகழ்ச்சி புரிந்து நாய்களைப் போலும்

பற்காட்டி வம்பர்களின் சொற்கேட் டவஸ்தைப் பட்டு
பாமரஞ யாமலைந்துமே (பட்)

2 ஞானமுமில்லாது அன்ன தானமு மில்லாது வொரு
நற்புகழு மில்லாமலும் வுனது புகழ்
கற்குமிடஞ் செல்லாமலும் தொழாமலுமே

ஆற்றிலொரு காலுமழற் சேற்றிலொரு காலுமிட்டு
அநியாயமா யலைந்துமே (பட்)

3 ஆங்காங்கு நீயிருந் தனுக்கிரகஞ் செய்தருளு
மாலயம் பலவிருந்துமே அதையுமறந்
தடியார்க்கொரு விருந்துமே செய்யா துழன்று

மாராவிளக் கிருக்க வூரோடித் தீத்தேடு
மசடரைப் போலாகி யையையோ (பட்)

4 ஆரா ரிருந்தென்ன யாரார்போ யென்ன எனக்
காண்டவா நீதான்தஞ்சமே அடியேனையிங்
காள்வாயிரங்கி நெஞ்சமே கணபதிசொல்

லாசானுமான குமரேசா குஞ்சரி வள்ளி
நேசா குன்றையில்வாசனே (பட்)

---

33 இராகம்-காப்பி-தாளம்—ஆதி

பல்லவி

1 மகிமைமிகு-மயூரகிரியிலுறைசரவண பவகுகவறுமுகனே (மகி)

அநுபல்லவி

மகபதிதன்-மகளே மருவழகிய குழகனே
கதுகரம் நிதமூலவும் (மகி)

பல்லவி

2 ஞானாசிரியா பவவினைபிணி நாசசிவ விலாசா-நடனமிடு (ஞா)

அநுபல்லவி

வரமதிக-வானு டருமலர் சொரிந் தேற்றிடும்
வனச கிண்கிணித் தாளா (மகி)

பல்லவி

3 வேதாதிக டெரிபிரமா சிரமார மோதுகரனே-வினவனந்த(வே)

அநுபல்லவி

வரவின்னமும்-வாதா மதகஜ முகன் சோதரா
வடிவே லுடையானே (மகி)

பல்லவி

4 அடியார்க்கடியான் கணபதிதொழு
மவிரோதப் பொருளே அருணிறைந்த (அடி)

அநுபல்லவி

அரவிலமர்-நெடுமால் திரு மருகனென வருமோர்
நிகரற்ற பெருவாழ்வே (மகி)

---

34 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

பல்லவி

குமரனை நினைவேனே குன்றுக்குடிக் (கும)

அநுபல்லவி

அருள்-கூட நன்மயி லாட அன்பர்கள் பாட
என்வினை யோட வந்திடுங் (கும)

சரணம்

1 அமரர்சிறை தவிர்க்க அவதரித்தவனே
அசுரருறன் முறையை அறுத்தெரித்தவனே
சமணரைக் கழுவிடுந் தமிழ் விரித்தவனே
தரிகிடகிட மெனநடமிடு பாரிடமருள் கடவுளேயெனக் (கும)

2 குங்குமங் கடம் பங்குமுகுமு வென
அங்க மெங்கனுங் கமகம கமவெனத்
தங்க செஞ்சிலம் புங்கல கலவெனத்
தானுதித்தவா நானினிப்பிற வாதமுத்தியே தாவெனத்தினம் (கும)

3 அந்தி சந்தியும் வந்தித் தனுட்டான முடித்து
புந்திவந்து மிந்துப் புனறணைக் குடித்து
சிந்தை நைந்து சந்தத் திருப்புகழ் படித்து
சேய்கணபதிவாய்மொழிபுகன் றேய்விலாமலென்றுய்தந்தையுமாங் (கும)

---

35 இராகம்-அமீர்கல்யாணி-தாளம்-ஆதி

பல்லவி

வேலாயுத னிருக்கிறன் மெஞ்ஞானசத்தி (வே)

அநுபல்லவி

மேலான தொண்டரண்டையில் வினைதீர்க்க வெற்றி (வே)

தோகையரு

1 சூலாயுதங் கொண்டு மெருமைக் கடாவேறு
சூரவெமனுர்க்கு மஞ்சோம்

காலாயுதக் கொடிய வென்னுதை மூடரைக்
காசுக்குப்பாடிக் கெஞ்சோம்

கஞ்சன்பணி மிஞ்சும்பிர
பஞ்சந்தனி லுஞ்சண்முக (வே)

2 தோலுரி யணிந்தாடு நீலகண்டரு மெச்சு
சுப்ரமண்ய ப்ரமாதன்

மாலுமகிழ் மருகனு மாயூரகிரியில் வாழ்
வள்ளிதேவானை நாதன்

வண்டண்டுக டம்பும்புனை
தண்டண்டைக டிண்டிண்டெனும் (வே)

3 வருவது தானேவரும் வாராதது வருந்
தினுவரா தறிதிநெஞ்சே

உருகுவது மேனே வுனைப் படைத்திட்டானு
மொருவனே யவனுக்கஞ்சே

ஒன்றுங்குரை வின்றின்றயை
துன்றுங்கழ லின்றென்றிடு (வே)

4 தண்டாயுதன் பரங்கிரி செந்தி லேரகம்
சாமிமலை பழனிவாசன்

கொண்டாடு கணபதிசொல் பண்டா ரணிந்துமே
கூத்தாடிடுங் குகேசன்

கொஞ்சுந்திரு நெஞ்சந் திகழ்
செஞ்சந்தன முஞ்சிந்திளமெய் (வே)

---

36 இராகம்-பயிரவி-தாளம்-ஆதி

பல்லவி

மயங்காதே மனமே தினமலைந்து (மய)

அநுபல்லவி

மிகு-வஞ்சமானபிர பஞ்சமாயையைத்
தஞ்சமாக எண்ணி (மய)

சரணம்

1 மாண்டு மாண்டு பிறந்த வருத்தம் போதாதா
மங்கைய ராசைவிட்டு வரத் தெரியாதா
ஆண்டவனைப் பணிவ தெமன் வரும்போதா
அத்வைதக்ர கத்தினைக்ர
கித்திடப்ர யத்தனஞ்செய் (மய)

2 நீர்க்குமிழிக்கு நிக ராகிய காயம்
நீங்குமுன் குருவையே நினைப்ப துபாயம்
பார்க்குமிட மெங்கும் பரம சிவாயம்
பட்சமற்று பேட்சை யற்றுப்
பிட்சை பேற்பர் தீட்சை கேட்பாய் (மய)

3 பெண்டு பிள்ளைகளென்ற பிரமைபொல்லாது
பேரின்பத் துறைகள் பேசவிடாது
சண்டையு மிடுமவர் சவகாசஞ் சூது
சத்தியப்ர சித்திபெற்ற
முத்தரைக்ர மத்தினத்து (மய)

4 குணமதி பெரியோர்கள் குடிகளைத் தேடு
கோசபாசப் பின்னலைக் குலைத்திடச் சாடு
மணமயில் மலைக்கண பதிகவி பாடு
மற்கடத்தை யொத்தெனைச்ர
மப்படுத்தா தொத்திருப்பாய் (மய)

---

37 இராகம்-பூரிகல்யாணி-தாளம்-ஆதி

பல்லவி

இன்னு முனக்கேனோ வாசை-நெஞ்சே
ஈசன் பதத்தைச் செய்பூசை (இன்)

அநுபல்லவி

1 அன்னையுந் தந்தையும் யாவரு மித்தையே
அண்ட புவனமெல்லா மிந்த்ர வித்தையே
பின்னையித் தூலமோ ப்ரமா வவித்தையே
பிதற்றுதலை யகற்றியிருள்
பகற்றெரியா துனற்றுகவே (இன்)

2 முன்னை வினையொழி மூர்த்தியைப் பாடுதி
மோகவி ராக முனிந்தருள் கூடுதி
தன்னை யறிந்தோர் சமூகமே நாடுதி
தனித்திருமுன் விழித்திருநீ
பசித்திருவென் னிசத்தை யறி (இன்)

3 அன்ன விசார மடியோ டொழிந்திடு
ஆதிமத்யாந்த வமுதம் பொழிந்திடு
அன்பன் கணபதி யின்பா மொழிந்திடு
அனைத்துலகும் நினைப்பெனவே
அநுத்தியமி லெனைத்தெரிவாய் (இன்)

---

38 இராகம்-தோடி-அடைதாளம்

பல்லவி

கந்தனே வந்தருள்புரி
இந்தநேரந் தோகைக்கிரி (கந்)

அநுபல்லவி

1 காட்சி தருங் கருணை மூர்த்தா
காலபேத கடந்த நித்தா
சாட்சியாஞ் சருவ சித்தா
சாமிநாத னேவினோதனே (கந்)

2 கெட்ட மனந் திரும்புதில்லை
கேட்பதில்லை யெந்தன் சொல்லை
கட்டினாலுங் காட்டும்பல்லை
காடுமேடு மோடிவாடுதே (கந்)

3 மங்கையரை மண்ணைத்துட்டை
மறந்தொருகாற் செய்யே னிட்டை
வங்குரங்கா யுழலுமொட்டை
மழுமட்டையிலு முழுமுட்டாளலவோ (கந்)

4 வெளிவேடம் போடக்கெட்டி
மெஞ்ஞான மில்லா மட்டி
தளியின் திருப் புகழைக்கட்டி
தலைக்குவைத்துறங் கலச்சியப் பையற்கே (கந்)

5 அந்தோபுலாலுந் தின்றேன்
அனந்தவுயிரைக் கொன்றேன்
வந்தே சந்நிதி முன்னின்றேன்
வரந்தா பாவங்கள் பறந்தோடும்பதந் (கந்)

6 இன்னலறு மின்னல் போன்றும்
எங்குமிருப்பா யெஞ்ஞான்றும்
அன்பன் கணபதியுட் டோன்றும்
அவிரோதச் சுய சிவ சோதிப்ரபையே (கந்)

---

39 இராகம்-சிந்துபைரவி-தாளம்-ஏகம்

பல்லவி

வடி—வேலனே வேணியரன் பாலனே (வடி)

அநுபல்லவி

பணம்-வீடாடு மாடாசை யூடாடி வாடினேன்
வேணியரன் பாலனே (வடி)

சரணம்

1 கோலமயில் குயில்கிளி பழுகன்ன மன்னுரைக்
கொணர்ந்தேன் மணந்தேன்
புணர்ந்தே னுணர்ந்தேன்
குறித்த விருத்தி யொருத்து விரித்த
பெருத்த நிருத்தங் கருத்தி லிருத்தேன் (வேல)

2 மாலையணிந்த கந்த நாதசீத பாதமோதி
வருந்தேன் திருந்தேன்
வருந்தே னருந்தேன்
மனத்தி னினைத்த கனத்தி னினத்தை
வினைத்த பனத்தை பிணிக்க வனித்தாள் (வேல)

3 சேயன்கணபதி தினந்தினந் தொழுந் தெய்வமே
திருவாய் வருவாய்
குருவா யருள்வாய்
செகத்தில் மிகுத்த தவத்தில் மகத்தில்
மகத்வ வகத்ய ரகத்தி லுதித்த (வேல)

---

40 இராகம்-தேசிகம்-தாளம்-ஆதி

பல்லவி

அழகுமயில் மேரா என்—அருமைக்காரா குமரா (அழ)

அநுபல்லவி

1 முழுவதி ராரா முருக கெம்பீரா
முகசந்திர மகவிந்திர மகளந்தரர் மகிழ்சுந்தர (அ)

2 அசுர சங்காரா அதிக சிங்காரா
அகத்துந்தனே மிகுத்துந்துதி சுகத்தெந்தனே விதித்தின்புறு (அ)

3 அழகுள்ள பாதா அதீதப்ர சாதா
அடியேனிடர் பொடியேபட வடிவேலொடு நடமாடிடு (அ)

4 முடிவான ஞானு மோட்சப்ர தானு
முதிதாங்கன சிகியோங்கலின் மகிழ்வாங்கண பதிபாங்குகொள் (அ)

---

41 இராகம்-தன்யாசி-தாளம்-ஏகம்-

பல்லவி

என்-வினைதீரும் வினைதீரும் வேல்முருகனே (என்)

அநுபல்லவி

1 நினையே நினைந்துவந்தே நினதுதலந் தொறும்நடந்தே
நெற்றிவிழிதனைத் திறந்தே நிட்டைபுரி வரையடைந்தே
நெருக்கு தில்லையே மனக்
குறைங்கின்தொல்லையே சொன்னுற்
பெருங்கவலையே (என்)

2 காலன் வருவதன்முன் காதுசெவி டாவதன்முன்
கோலவிழியிரண்டுங் குருடாகிப் போவதன்முன்
கொடுத்தருள் கதியே துயர்
கெடுத்திடும் நிதியே வள்ளி
யடுத்த பூபதியே (என்)

3 ஆங்காரத்தாற் செருத்த அவுணரைச் சங்கரித்த
காங்கேயனே பெருத்த கங்கைமதி யந்தரித்த

கடவுளர் மகனே கந்தக்
கடம்பணி குகனே திரு
நடன சண்முகனே (என்)

4 பாலூறும் பவளச்செவ்வாய்ப் பார்பதி யளித்ததேவா
மேலோர் கொண்டாடுமூவா வேதமுதல் வாருகாவா
வினைவிடுங் குருவாய் பத
மணமலர் தருவாய் அன்பன்
கணபதிக்கருள்வாய் (என்)

---

42 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

பல்லவி

குன்றை-ஆண்டவனை வேண்டிப் பாடுவோமே நாமே-வுயிர்க்
காதர வென்றுரை நம்புவோமே பூமேற் (குன்)

அநுபல்லவி

சேண்டவ தேவர்தேடு பாண்டவர் தூதனுடு
பூண்டரவங் கொண்டாடு தாண்டவனுங் கொண்டாடு (ஆ)

சரணம்

1 பரத்தையரை யல்லும் பகலும் நாடி
தரத்தையந் தைரியத்தையும் விட்டே சூதாடி
பாரிலலைந்துதேடி பாரபட்சரைக்கூடி
சோரர்க்குச் சூரையாடி யூரூரா யோடிவாடிப்
பந்தம்பெரு குந்தொந்தர
வுஞ்சிந்திடு சந்தம்பொலியுங் (குன்)

2 அரவிந்தஞ் சங்கும் தங்கும் பொங்கம்பி
வருகந்த னெந்தன் சொந்த னங்கொம்பி

ஞானமுகனின் தம்பி மானினயன வம்பி
காமினி சேயைநம்பித் தானந்தவம் விரும்பிக்

கருவருமிரு வினையறநறு
மருமலர்கொடு மாகரவெனக் (குன்றை)

3 அரவிலாடு மரகதமயி லேறிக் கள்ள
மலமிலமா டியவரித வருளே கொள்ள
அணையைக் கடந்தவெள்ள மாரமு துரைந்த் வள்ளம்
கணபதி போற்றுமுள்ளங் காவலிருந்து விள்ளும்
கற்பகச் சிற்பராத் தைக்ர கித்தற்
கற்புதச் சுப்ரமண்ய ப்ரமத்தைக் (குன்றை)

---

## 43 இராகம்-சிந்துபைரவி-தாளம்-ஆதி

பல்லவி.

திரு-முதுமாமயில் மேரா
முன்வாருங் கெம்பீரா-திரு

அநுபல்லவி

1 சதுர்வேத மந்த்ர வாளா
தன்னை மறந்தோர் தோழா
பதிகாண வெகு நாளாய்
பார்த்திருந்தேன் வந் தாளாய் (முது)

2 மதபேத மற்றவனே
மாஞானக் கொற்றவனே
நிதமோதென் பெற்றவனே
நிட்டைபுரிவர்க் குற்றவனே (முது)

3 வள்ளிதெய்வானை லோலா
மாமரங் கொய்த் வேலா

புள்ளிமானேந்தி பாலா
புண்ணியவானேவா மூலா (முது)

4 மதுராபுரி வையாபுரி
வலமிடந் துலங்குங்கிரி
மதுரையினின்று வந்தாதரி
மைந்தன்கண பதிக்கருள்புரி (முது)

---

44 இராகம்-தேசிககமாஸ்-தாளம்-ஆதி

பல்லவி

கந்தா மயிலாசலா காவா பக்தவத்சலா (கந்)

அநுபல்லவி

கற்பகோடி காலமாக நற்கியாதி மீறிவாழும் (கந்)

சரணம்

1 நந்தாரேரகத்துச் செட்டி ஞானமணிச்சீனிக்கட்டி
மனதைக்கட்டி
நன்மையைச் சேகரித்துத் தின்மையைத் தீத்தெரித்துச்
சின்மயச்சீர் குரித்துத் திருந்தடியார்
தெரிசனர்த்தம் வருதல் பார்க்கும்
பரிசதாய்த்தம் பதமே சேர்க்கும் (கந்)

2 அந்தரி சுந்தரியின்பாலா அசுரசங்கார வேலா
ஆதிமூலா
அன்பர்கள் பாடவினை துன்பங்க ளோடவல
ரம்பன்மெய் வாடவரு மறுமுகனே
அலகிலப்பா கணபதிப்பா
வலர்தமிழ்ப்பா மலர்தரிப்பாய் (கந்)

---

## ஸ்ரீ கதிர்காம நாதர் கீதம்

---

45 இராகம்-பைரவி-தாளம்-ஆதி

பல்லவி

கதிர்காமா கவலையகலவருள் (கதி)

அநுபல்லவி

கருதா தொருத்து முருகா வெனத்தா
ஞெருகா லுரைக்கி விருகா னினைக்குங் (கதி)

சரணம்

1 சதுர்மறை முடிவுரை தமிழ்ப் புலவோனே
தருமாதியர் சகாயரின் மருகோனே
அதிர்பரிபுர பதவடியர் குழானே
அத்தனுக் கனுக்ரகித்த நித்தசுத்த வத்தமுத்த (கதி)

2 கந்தஞ் சிந்துங் கரிகுழ லுமையாள்
குந்தந்தந்துங் குடிகொழு மிமையா
வந்தந் தங்கன் பறுமுக வெமையா
ளற்புதப்ரமத் துதித்த சொற்ப்ரசித்த சுப்ரமண்ய (கதி)

3 அரகர வோமர காமுரு கேசா
அன்பன் கணபதிசொல் லாசணி நேசா
உரகமயூர முவந்த வுல்லாசா
உளைக்கரிக் கரிக்கிருப் பெனத்தருக் களிற்பெருத்த (கதி)

---

## ஸ்ரீ வெள்ளியம்பலேசர் கீதம்

—

46 இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி

பல்லவி

1 குருபரன் திருநடங் கண்டேனே-எந்தன்
குறைக ளெல்லாஞ் சொல்லிக் கொண்டேனே (குரு

அநுபல்லவி

இருநிலம் புகழ்தரு திருமதுரையி லெனக்
கருள்மழை பொழியுஞ் சுந்தரஜெய வரதுங்க (குரு)

பல்லவி

2 அரகர சிவயநமா வென்றேன்-அவ
ரருகொரு பதுமையைப் போனின்றேன்

அநுபல்லவி

முராகரி முதலம ரருமிசை பலதொனி
தரவுமை யொடுமதி நதிமுடி விரிசடைக் (குரு)

பல்லவி

3 சிவசிவ யென்றடி போற்றினேன்-திரு
நீறணிந்தஞ் செழுத் தேற்றினேன்

அநுபல்லவி

வுவமை யிலகமுக தவமணி யெனவரு
பவனவனி னிவனெனு தவனவ னியுமாம் (குரு)

பல்லவி

4 ஆனந்த மாய்ப்பல பாடினேன்-அரு
ளாவேசங் கொண் டாடினேன்

அநுபல்லவி

அனவரத மூங்கண பதிமனதி னிலிருந்
துனையறி யெனவின விடும்பரி பூரண (குரு)

---

## ஸ்ரீ பரமேசுரர் கீதம்

47 இராகம்—தேசிகதோடி-தாளம்-ரூபகம்

பல்லவி

ஈசனே-இந்த ஏழையு மேன் பிறந்தேன் (எனதீச)

அநுபல்லவி

என்று-மெழிலாமுன தழியாவர மடையாதுல கிடையேசுழ
லேழையுமேன் பிறந்தேன்(எனதீச

பாசவலைக் கடலான தனம்பெண்டு
பலபேரொடு நிலமாடட னில்லதாமெனன வலைபோலலை
ஏழையுமேன் பிறந்தேன் (எனதீச)

சரணம்

1 இன்பதுன்பங்களுக் கிடுபட் டேங்கியே
நின் பொன்னடியை நினையாது நீங்கியே
பெண்களுக் காளாய்ப் பிணிபல வாங்கியே
பிணக்காகிய கணக்கேடொடு பணப்பேய்பிடித் துணத்தேடிடு
மேழையுமேன் பிறந்தேன் (எனதீச

2 முன்னோ ருரைத்த முறைபிரண் டேசியே
மூர்த்திதலந் தீர்த்தம் பார்த்திடக் கூசியே
வெண்ணீறு ருத்ராக்க மெண்ணாத கூசியே
விளையாடிடு கலிகால நவினஜால வேலையில் மூழ்கிடு
மேழையுமேன் பிறந்தேன்(எனதீச

3 ஆசார மில்லாத சட்டைகள் மேவியே
அறுத்த தலைமயி ராய்ந்தாய்ந்து சீவியே
தேச நேசந்தமிழ் தேடாது கூவியே
திரிவானெனு மறியாமையே வுருவாகிய பெரும்பாதக
ஏழையுமேன் பிறந்தேன்(எனதீச

4 கொஞ்சமுங் காருண்யம் நெஞ்சி லில்லாமலும்
கோபவெகுளிக் குணத்தை வெல்லாமலும்
அஞ்செழுத் தோதி யாலயஞ் செல்லாமலும்
அதிபாகண பதிபாடிடு மதிபாநினைத் துதியாதலே
ஏழையுமேன் பிறந்தேன்(எனதீச

---

## ஸ்ரீமந் நாரயணஸ்வாமி கீதங்கள்

48 இராகம்-பயிரவி-தாளம்-ரூபகம்

பல்லவி

ஞான-கண்ணனை யெண்ணு நெஞ்சே (கண்)

அநுபல்லவி

முன்னே-பண்ணின பாவங்கள் விண்ணிற் பறந்தோடும் (கண்)

சரணம்

1 எண்ணிலாச் சென்ம மெடுத்தெடுத் தேங்கியே
மண்ணையும் பெண்ணையும் வாழ்வையும் நோக்கியே
வுண்ணைந்து தேடி யுடுத்துண்டு தூங்கியே
வுபத்திரவ மிகுத்ததலா லுயிர்த் துணையை நினைத்திலையே(கண்)

கைத்தொழு வாக்குத்தன் காட்சி கொடுப்பவன்
காலத்திற்கேற்றதோர் கோல மெடுப்பவன்
பையரவத்திருப் பாயிற் படுப்பவன்
பலத்தபது தலைப்பதக னிளைத்தறவில் வளைத்தமுது(கண்)

3 நாளும் பெரியோரை நம்பியே நில்லு
ஞானமில்லார் சொல்லை நாடாது செல்லு
காளைமேகப் பெரு மாளென்று சொல்லு
கடுத்தெமனுயிர்பிடித்திடாதருள் கொடுத்துடனுடனடுத்துதவிசெய் (கண்

4 அரியுஞ் சிவனுமொன் றென் றறியாதே
அசட்டை செய்வார் நரகாழ்வர் தப்பாதே
பிரிவுசெய் தோதுமப் பேதைகள் வாதே
பிறவாதரி ஹரிராமென நிதமேகண பதிபாவணி(கண்

---

49 இராகம்-மோகனம்-தாளம்-ரூபகம்

பல்லவி

பதினாயிரங் கண்வேண்டும் பார்க்கப்
பதினாயிரங்கண் வேண்டும் (பதி)

அநுபல்லவி

பருந்திலே ரருந்தயா பரன்றனேர் விரும்பினே (பதி)

சரணம்

1 பந்தந்தவி ருந்தந்திர முந்தந்திடுவான்
பஞ்சங்களைந் தஞ்சுங்குளைந் தெஞ்சன் பிடுவான்
எஞ்சன்பிடுவான் நெஞ்சந் தொடுவான்
பரமண்டல முறைகொண்டல
னரிதண்டுல மளிவிண்டல
பங்கந்தங்கோன் எங்கோன் கோன்
தரிகிடதொந்தோமென நடமிடக் கண்டோங்கிட(பதி)

2 தங்கந்தங் கந்தங் கந்தங்கந் தங்கும்
துங்கன் ரங்கன் சங்கன் சிங்கனென்கும்
செங்க ணிலங்கும் புங்கனிணங்கும்

சேலா விழி மா லவண்ய
மாலா லணே மாலானவன்
சேய்கணபதியே தோய்குண நிதியே
தரிகட தம்தம் திடம் தரிகட தம்தம்(பதி)

---

## ஸ்ரீ இலக்குமிதேவி கீதம்.

50 இராகம்-பூரிகல்யாணி-தாளம்—ஆதி

பல்லவி

அம்மா-சீக்கிரம் வாராய் சீ தேவியே-தொழும்
சேயகம் பூ மேவியே (அம்மாசீக்)

அநுபல்லவி

1 சீதாஸ்ரீ ராம நாதரணேசேம
செங்கமல மங்கையென யெங்குமொளி பொங்கவிழி
செல்வஞ் சிறந்தவளே கட
வில்வில் பிறந்தவளே (சீக்)

2 வாதரவே தொண்டு நீதமதாய்க் கொண்டு
மல்லிகையால் வல்லியுனைச் சொல்லியிறை நல்லவர்நேர்
வாராதிராயே சும்மா-என்மேல்
பாராமுகமே னம்மா (சீக்)

3 கோடி நமஸ்காரம் கோபமே னின்னேரம்
கும்பிடுவ துன்பதநா னம்பிடுவ துன்செயலே
கொஞ்சங்கடைக்கண் பார்ப்பாய்-வுந்தன்
தஞ்சமென்னை நீ காப்பாய் (சீக்)

4 கூறுமலங் காரி பூரணரீங்காரி
குறையறுசீர் நிறைபெறுமோர் திருமகளே வரபொருளே
குணபதியே குருவாய்-அன்பன்
கணபதிக்கருள் தருவாய் (சீக்)

## ஸ்ரீ சரஸ்வதியம்மை கீதம்

51 இராகம்-தேசிகதோடி-தாளம்-ஆதி

பல்லவி

சரஸ்வதியே வுன்னைத்
தஞ்சமென்றே னஞ்சலெனத் தர்க்காப்பாய் நீயே (அம்மாசர)

அநுபல்லவி

1 சரசபிரமா சொல்லியே சகலகலா வல்லியே
தங்கின்பந்தருந்தாயே-திருச்
சங்கங் கும்பிடுந்தூயே-முது

தவத்த ரும்பருந் துதித்து வெம்பகைப்
பவத்தை யுந்தவிர்த் தகத் தறிந்திடும் (சர)

2 கல்விக் களஞ்சியமே கருணையா ரஞ்சிதமே
கர்த்தவ்யப் பெருமாட்டி-சிவ
நர்த்தனப் பதங்காட்டி -பல

கலி வினைபிணி மலமிடி பகை
விலகிடக் கலகல வெனவரும் (சர)

3 வெண்டாம ரையில்லிலே வீற்றிருக்கு மெல்லியலே
வித்துவ சமுத்திரமே-நாவில்
மெத்துமரு ளத்திரமே-இசை

வினவினி வீணைத்தொ னியொடு பேணிக்
கணபதிகா ணக்குண மொடு தோணும் (சர)

---

## ஸ்ரீ மீனும்பிகை கீதம்

52 இராகம்-பியாக்-தாளம்.ரூபகம்

கண்ணிகள்

1 பாவி நெஞ்சேஜெய கோவிந்தன் தங்கையாம்
தேவி மீனும்பிகை கோவிலிற் கண்ட

சேவையை யென்ன வென்பே னின்றே
தேவை யுடனே முன்பே நின்றே
கேள்வியந்தாகு மன்பே தெய்வப்
பாவலரும் சேவலரும் கோவிலரும் பேணவே-திருப்
பூவை நாமின் றேணவே (பா)

2 கோவிகா ஸ்திரிகள் கோடிகோடியாகச்
சோடிகூடிச் சோடித் தாடிச் சேடியரோ
ராடிவிளை யாட மணி
யாரமின்னல் சாட மட்டு
வார்மணப்பூச் சூட தங்கக்
கோபுரமே கோபுரமா கும்பமேலே விளங்க-வேத
கீதநாதா முளங்க (பா)

3 தாவிப் பிடித்தெம னாவி கவருமுன்
பூவிலெனக்குப தேசஞ் செய்வா யெனச்
சட்டாங்க தெண்ட னிட்டேன் திருத்
தாட்டா மரையே தொட்டேன் சென்ம
வாட்ட மறந்தே விட்டேன் பின்னுந்
தன்னியனு மென்னையெங்கு மன்னியமற் றறிந்தேன்-மாயைப்
புன்மையாவுந் தெரிந்தேன் (பா)

4 சத்திய மார்க்கத்தை விட்டுத் தவிக்கும
சத்துக்க ளோடுநி சத்தைக் காணுமையாற்
சஞ்சலங்கொண் டுழன்றேம் பிர
பஞ்சமா னூடு சென்றேம் புலா
லஞ்சாது மையோ தின்றேம் இனிச்
சாதுசங்க மேதுலங்காய் தன்மைக் கணபதியே-சொன்னே
னுண்மைப் பாகதியே (பா)

---

53 இராகம்-பயிரவி-தாளம்-ரூபகம்.

பல்லவி

இங்கே-வந்தாள் பேரின்பந் தந்தாள் (வந்)

அநுபல்லவி

ஞான-மந்திர ஈஸ்வரி மைந்தாயென் றெந்தாய்போல் (வந்)
மனத்தினிற் ப்ரவர்த்தி கைத்திடப் பரப்ரமத்துதித்து (வந்)

மாசற்று பாசித்த நேசப்ர
காசப்ர சாதக் ருபாசத்தி (வந்)

சரணம்

1 மல்லிகை முல்லை மருகு மந்தாரையும்
மாலை புனைந்து மலர்ந்த செந்தாரையும்
சொல்ல முடியாது தோன்றுநற் சீரையும்

துலங்கவரு ளிலங்குசிவ
தலங்களிலு நலங்களுற (வந்)

2 வாணியும் பொன்னியும் வந்தனை செய்யவே
வானவர் கூடி மகிழ்ந்தல ரெய்யவே
ஆனந்தவீட்டி னருள்மழை பெய்யவே

அகண்டப்பிர யையண்டப்பிற
வியொண்டக் கருணை கொண்டத்வைதி (வந்)

3 காலிற் சிலம்பு கலகல வென்னவே
கைக்கங் கணங்கள் கதிர்போல மின்னவே
சூலாயுங் கொண்டு தூந்துகில் மன்னவே

துணைத்தனமணி மணித்திரளொளி
தனைத்தரமன நினைத்த பொழுதில் (வந்)

4 காட்சியைக் கண்டுநான் கைகூப்பிக் கும்பிட
கனிந்தொருவார்த்தையென் காதில் விளம்பிட
தாட்சியிலாதருட் . டைரியம் நிரம்பிட

சந்ததங்கணபதி சிந்தையு
ரைந்தருள் திரிபுர சுந்தரி (வந்)

---

## குன்றக்குடி ஸ்ரீ வீரமாகளி அம்மையார் கீதம்

இராகம்-தேசிகம்-தாளம்-ரூபகம்

பல்லவி.

வீரமா காளியே மின்னும்பொன் னூபுரதாளியே (வீர)

அநுபல்லவி

தீரமயூர கிரிச் சேத்திரசர் வாதிகாரி (வீர)

சரணம்

1 நாரணி வாரகி வில்வத் தாரணி சவுந்தரி
ஆரணி யரோகரா வரிமுகுந்தன் சோதரி
வாரணி மணித்தன மனோன்மணி மகேசுரி
வாலையெனும் நீலநிறப் பெண்ணே-திரு
வானவர் வணங்குமொரு விண்ணே-துய்ய
வாசமலர்த் தேசுமிகுங் கண்ணே-எங்கள்
வாக்கிலே நின்றாடருளாம் பண்ணே
வாவாவா யிப்போது
வருத்தங்கள் வையாது
மாதாவா யென்மீது
மகிழ்ந்தொரு சொல்லோது (வீர)

2 மெத்த மெத்தக் கவலையாலு மேன்மெலிந்து வாடினேன்
இத்தரைக்கு ளுனதுதொண்ட ரிடமுஞ்சொல்லித்தேடினேன்
நித்தநித்த முன்னையே நினைந்துநொந்தும் பாடினேன்
நீயே திரும்பிப்பாராய் கொஞ்சம்-எந்தன்
தாயேவுனக் காகுமோ வஞ்சம்-வுந்தன்

சேயேன் மிடிகொடிய பஞ்சம்-தீர
வாயே திரந் துரையுன் தஞ்சம்

மணமலிபூந் தோப்பே
வளருங்குன்றைக் காப்பே
கணபதிசொல் யாப்பே
கனிந்தணியும் பார்ப்பே (வீர)

---

55 இராகம்-பிலஹரி-தாளம்-ஆதி

பல்லவி

அம்மா-வீரமாகாளித் தாயே உன்னை
வேண்டினே னருள்வாயே(அம்மாவீர)

அநுபல்லவி

திரு-மிகுந்தகுன்றையில் மகிழ்ந்திருந்திடு
சுகந்தசந்தன கதம்ப சுந்தரி (வீர)

தொகையறு

1 மேலான தெய்வமே மெஞ்ஞான வாலையே
விகசிதோங்கார ரூபி
சூலானதுங் கொண்டு ஈரேழு லோகமுஞ்
சுற்றிமகுடனை வெல்கோபி
தொண்டருக் கெளியாளே பர
சுகங்கொடுப்ப தென்னாளே (அம்மாவீர)

2 சிங்கப் பிடாரியே சிந்தூர மாரியே
சிறுபிராய ரீங்காரியே
சங்கரி வகாரியே பொங்கிடு முகாரியே
சட்சமய சமவீரியே
தமியனுங் கணபதியே தொழுஞ்
சரண கருணை நிதியே (அம்மாவீர)

56 இராகம்-தோடி-தாளம்-ரூபகம்

பல்லவி

வீரமா காளித்தாயே விரைவில்வந் தருள்வாய் (வீர)

அநுபல்லவி

1 வாரார் மயூரகிரி வடக்குவாழ் கிருபாகரி
மருகு மந்தாரை செவ்வந்தி சண்பக
மறுகணிந் தாடுஞ் செவ்வந்தி வண்ணனு

மகிழுஞ் சுந்தரத்தாளே அருள்
புகழ்பொன்னூ பூத்தாளே (வீர)

2 மாய்கைப் பசாசினாலே வாடிமெலிந்தே னென்மேலே
வரந்தந்துந் தமிழ் தெரிந்துந் தன்கவி
வரைந்திங்குந் தவம் புரிந்துஞ் சிந்தைசெய்

மனமெனக் கினித்தாராய் உந்தன்
தனையனெனைக் கண்பாராய் (வீர)

3 பூமியிலேபிறந்து சும்மா பூண்டதுயர் போதுமம்மா
பொருமை யன்பருட் பெருமை யன்பரி
னருமை நன்பல தரும சிந்தையும்

புகலும் பூரணஞானம் தந்தா
லகலுமெந்த னஞ்ஞானம் (வீர)

4 ஒருச்சாண் வயிறையிட்டு ஓடியோடிப் பாடுபட்டு
உண்டுண் டுறங்கியுங் கண்டொண்டு பெண்டுகள்
கண்டண்டி மங்கியுஞ் சண்டன் றண்டிட்டடித்

துதைக்கப் பாடையிற் றாக்கி-மண்ணிற்
புதைக்கும் வாழ்க்கையை நீக்கி (வீர)

5 சேயன் கணபதியே செபிக்குங் குணநிதியே
சித்ர நடனப்ர மத்வைத நித்திய
சத்ய சமஸ்த்த சகஸ்த்ரய முத்தியைத்

தரும்பெருந் தயாநிதியே—உன்னை
விரும்பி நின்றே னித்தநிதியே (வீர)

---

## பனையூர் ஸ்ரீ குருநாதன் கீதம்

57 இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி

பல்லவி

குருநாதா (ஸ்ரீ சற்குரு)

அநுபல்லவி

அருள்கூறு மாதிபனை யூரில்வாழு மெங்கள் (குரு)

சரணம்

1 தாதா தவத்தைத்தா தாதை யகத்தா
தாளிகொள் சுதா தான சுகிர்தா
தகும் தத்தத்திதா தகநகவதா
குதகுராறத்தான் சத்தத் துரக
மித்திரனி கத்தை சுமத்தரி மிகுத்ததிர்ந்
தயர்ந்தகங் தயங்கி மங்கிட
அங்குவருங்குக னென்றுலகும்புகழ் (குரு

2 யா ததிகததியா னடை சித்திலையா
இதுவும் நிதியா எனது விதியா
ஈ தேதையா இருமலர்க் கையா
ஏகமா மெய்யா சகலநல
வுலகினு முலவருண் மலிபரி புரவொலி
கல்கலீர் கலீரென வுலவுறு
மும்பரு ரும்பரவும் பரிபூரண (குரு)

3 கா கருணையழகா காரணருகா
ககன வெளிகா காண விறகா

கற்பகக்கா கருதும் யோகா
காருண்ய முகா கனக புவி
கட்செரி பூச்சொரி தெச்சிண மூர்த்தியே
கடவுளே யுந்தனடியே பணிந்தேன்
கணபதியின் துணையென வருமங்கள (குரு)

---

## நாரதர் சுப்பிரமணியருக்கு தூது சொல்லல்

58 இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி

கண்ணிகள்

1 ஆறுமுகஞான முருகோனே பல
வற்புதங் கண்டோடி வந்தேன் நானே வெகு
வாச்சரிய மாச்சுதையா பேச்சிலடங்காதது
தானே-என்னென்-பேனே

2 பஞ்சவர்னப் பைங்கிளிக ளோடு குயில்
பாடிவிளையாடுந் தினைக் காடு அது
பத்தரைமாத்துப் பசும்பொன் முத்தெலாம் விளையுமொரு
வீடு-ஊறும்-கோடு

3 வண்டுகள் மகிழ்ந்தினிய கானம் பாடி
மாமலரிற் செய்யுமது பானம் எங்கு
மங்குமெனத் தங்குவனக் கொங்குலவுங் கங்கையிலும்
வான-மில்ச-மானம்

4 அங்கிருந்தாற் றங்குமப்பா மோனம் ஒரு
ஆரணங் குலவுஞ்சந்நி தானம் ஈரே
ழண்டபிண்ட மெண்டிசையுங் கண்டறிந்தே னுண்டோயிச்ச
மானம்-பிர-தானம்

5 முத்தினு லலங்கரித்த கூடம் அருள்
மூழுந்தேவ கோபுரக் கிரீடம் திரு

மூவுலகும் பாவுகலை மாமகள் பாமகள் வாழும்
பீடம்-அன்னாள்-வேடம்

6 அன்னமுந் திகைக்குமவ ணடைக்கே மின்ன
லஞ்சிமறைந் தோடிடும்புன் னிடைக்கே குளி
ராலைக்கரும்பி ரசந்தேன் பாலும்பயந் தோடிடும்வாய்ப்
புடைக்கே-சொல்லும்-விடைக்கே

7 வாழைகண்டு வீழுமவ டொடைக்கே வரு
வானிரவி தானொளியு முடைக்கே திரு
மாதுமுக்கிப் போதினிற்கப் போதுமா பொன்னேதருநம்
முடைக்கே-விழிக்-கடைக்கே

8 நெற்றிபய மேற்றுமரி சிலைக்கே யிதழ்
நேரரிந்தோ டும்பவள மலைக்கே குடம்
நீடலைமொக்குள் மலர்ச்செண் டோடுமலங் காரவாரின்
கலைக்கே-விம்மு-முலைக்கே

9 தாமரைப்பூ வாடுமவள் கைக்கே நல்ல
தங்கமுமீ டாமோமண மெய்க்கே சில்லை
சாருமிரு வாச்சிரோசா வாரமுறு நீள்குழலி
னைக்கே-பய-மைக்கே

10 முத்தைப்பயங் காட்டுமவள் பல்லு முக
முன்வருமோ பூமதியி னெல்லு வைர
மோதிர மணிவிரலின் மீதுறை நகத்தினையோ
சொல்லு-மாணிக்கக்-கல்லு

11 குமிழமலர்க் கெதிரியவள் மூக்கே ஒரு
குற்றமொழி கூறுதவ ளுக்கே கடல்
கொண்டதெனக் கண்டவர்கள் தொண்டுசெயுங் கெண்டைநிகர்
நோக்கே-களம்-பாக்கே

12 புன்னகை கொண்டே வுலவும் மாளுள் அன்னம்
போடுவதற் கோர்பொழுதுங் கோளுள் தவம்

பூத்தசிவ சாயுச்சிய மேற்றபெரியோ ரலார்கண்
காணுள்-காமந்-தோணுள்

13 ஆண்டவனைப் போற்றுமன முடையாள் வேத
ஆகமமெலாஞ் சொலும்நன் நடையாள் வேட்டை
ஆடுபொழு தோடிமேரு மூடுருவச் சாடுகுறப்
படையாள்-கானேர்-கொடையாள்

14 இப்படிப்பெண் பார்த்ததில்லை மெய்யா நீரு
மிப்பொழுதே சென்றணைவீர் துய்யா வள
ரிந்திரன் மகள்மருவுஞ் சுந்தரமார்பா பன்னிரு
கையா-முருகையா

15 காசினியெல்லாந் துதிக்குங் குருவே அன்பன்
கணபதியைக் காத்தருளுந் திருவே செல்வங்
ககனமட் டளாவுகுன்றை நகரிலுற்று லாவுமின்ப
வுருவே-தெய்வத்-தருவே.

## வாழி விருத்தம்.

திருப்பனையூர் வாழ்ஞான தேசிகரிருவர் வாழி
மருப்படா முத்துச் சாமிவாழி மாசுடலிவாழி
விருப்பமா மயின்மாக் கந்தர் வீரமாகாளிவாழி
ஒருப்படும் பெரியோர்வாழி வுலகுயி ரனைத்தும்வாழி.

## சத்தப்பிரபந்தம்

முற்றுப்பெற்றது.

சுபம்! சுபம்!! சுபம்!!!





உ

ஓம் ஸ்ரீ குருவேநம:

பிரத்தியேகமாகச் சேர்த்த

# குன்றக்குடிச் சிலதுறைகள்.



## வெண்பா.

1 கண்களிலே கண்டாற் கனிவாயுஞ் செவ்விதழும்
பெண்களுக்கு மூறும் பெருமானே—தண்களப
மாலைப் புயவழகா மாயூர வெற்பரசே
வாலைக் கிசைமகனே வா.

2 கொஞ்சுங் கிளிகாள் குயில்காள் மயில்காள்பூ
மஞ்ச வனங்காளோ வண்டுகாள்—மஞ்சலவுங்
குன்றைக்கே சென்றக்காற் கூறுமினெங் கோமானார்க்
கின்றைக்கே யிங்கே வர.

3 நறுவீட் டறையு ணடைந்துலவு தல்லான்
மறுவீ டறியா மகளே—கறுகிமிக
விந்தேகி னார்போன் மெலிவதுபார்த் தாலெனக்குச்
சந்தேகஞ் சந்தேகந் தான்.

4 ஒப்பிமணஞ் செய்யா யுமைமகனைச் சேரவெண்ணிற்
செப்பியுல கேசிச் சிரிக்காதோ—எப்பொழுது
மாலாவ தென்னே மகளேவுந் தன்வயிற்றிற்
சூலானா லென்னசெய்வாய் சொல்.

5 அன்னங் கனியிளநீ ரப்ப மமிழ்தவறே
னின்னும் பலபண்ட மீந்தாலு—முன்னி
யருவருக்கு தென்கிறா ளார்செய்த சூதோ
பெருகிச் சுகியாத பெண்.

6 ஓதனந்த சொற்கொன் றுரையாய் பதுமையைப்போற்
சாத முமட்டத் தலைவிதியோ—ஈதல்லாற்
காலையுடைக் காமன் கதையெவனுஞ் சொன்னானோ
மாலை முடிக்கா மகட்கு.

7 கல்லு முருக்குமொரு காம நெருப்பூடே
செல்லுமிபோ னீகருக நீதியோ—யெல்லாஞ்
சிவன்செய்த தென்றுஞ் செவித்த மகளே
எவன்செய்த சூது யிது.

8 காட்டுட் டிரியாது கத்திப் பயங்காட்டி
வீட்டிற்குப் போவென்று விள்ளாதோ—நாட்டிலே
சுத்தபத்து மாதஞ் சுமந்துபெற்ற யென்மகட்குப்
புத்திவர யானை புலி.

9 முப்புறத்தை நீற்றனலு முந்நீரில் வாழனலும்
செப்பரவ நஞ்சனலும் தீயென்றே—துப்பு
மருநாண் மதியுதித்தால் வாலமட வார்மே
லொருநா ளொருயுகம்போ லுக்கும்.

10 தாங்கு மணைவிரித்த சப்ரமஞ்சக் கட்டிலிலே
தூங்கென் றடித்தாலுந் தூங்குமோ—பாங்கிகாள்
போதலரும் வெற்றிப் புயவே ளெனாமெமது
காதலரைக் காணாத கண்.

11 நயனஞ் சிவந்து நடுசோர்ந் தணைமேற்
சயனங் கொளாது தவிக்க—வயமுல்லை
எய்வேனென் றுன்னாதே யெங்கோ விலாநேரம்
வைவேனான் போமன் மதா.

12 செய்வதல வோவாருஞ் சிம்பெழவம் பம்புவிழி
பெய்யமணி வாடப் பிறங்குமிடை—தொய்ய
வடுபா வணைவெதும்ப வாட்டுமீ தெல்லாம்
படுபாவி மன்மதனார் பாணம்.

13 போதயன்கை தேரிப் புரிந்தவென்ற னாயகனைக்
கோதையர்கா ணீவிர்போய்க் கூப்பிடீர்—போதையுடன்
பொல்லாத வெண்ணம் புலிக்கே பயந்தமிழ்துஞ்
செல்லா துமட்டுதலைச் செப்பி.

14 அஞ்சலென வந்தருளு மையேயிக் குச்சிலையான்
சஞ்சலத்தாற் றேவி தவிக்கின்றாள்—கொஞ்சுங்
கலைபிதிர விம்முங் கரிமத் தகம்நேர்
முலையுதிரக் கண்ணீரின் முத்து.

15 சிந்தூரப் பொட்டைச் சிரிக்குந் திவலைதுண்ணீர்ச்
சிந்தூறுங் கண்ணழகி தேம்பற்க—சந்திரனு
மிந்தமலர்ப் பூங்காற்று மென்செயலாங் குன்றைநகர்க்
கந்த னெதிரில்வந்தக் கால்.

16 சற்றே பருத்த தனமீ தழகொழுகும்
பொற்றூசு பேணுமிளம் பூங்கோதாய்—கற்றே
தெளியுஞ் செழுங்களபத் திண்புயவேட் கிந்த
வளியுஞ் சொலாதோ வழி.

17 மானிங் கிருப்பதென மன்மதனுக் குப்பயந்து
யானிங் கிருப்பதனை யார்சொன்னார்—தேனுந்து
மெல்லியபூங் காற்றே விசித்ர மலர்வனஞ்சூழ்
மல்லிகைப்பூந் தோட்டம் வர.

18 பூஞ்செடிசூழ் மாளிகைமேற் பொன்னா லலங்கரித்த
வூஞ்சலிலு மென்கண் ணுறங்குமோ—பூஞ்சிகிபோற்
சாய்ந்து விளையாடித் தனங்குலுங்கக் கால்வருடு
மேந்திழையா ளில்லாம லே.

19 காரி னிழன்மேவுங் கற்பகப் பூஞ்சோலைத்
தூரியில்வைத் தாட்டுகினுந் தூங்குமோ—நேரிலே
வுண்ணுட்டா லுண்ணு துவப்பெனக்கு வுண்டாக்குங்
கண்ணாட்டி யைக்காணக் கண்.

20 ஆலந் தளிரு மதன்மேலீர் கோங்கரும்பும்
நீலங் குமிழாம்ப னோர்கமலஞ்—சாலப்பூத்
தாங்கொண்ட லோடோ ரலர்க்கொம்பு மேடையினின்
றேங்குண்டு காத்திருப்ப தேன்.

21 நித்திரைபோ கின்று ணில்வெரிக்கும் பஞ்சணைமேன்
முத்திரையே வைத்ததன மூடாமற்—றத்துந்
துயில்சோர முத்திலகத் தொத்துசுழ ருழ
மயில்போற் சமைந்தமட மான்

---

விடுகதைகள்

22 நாற்காற் பிராணி நடுவிலோர் வாலுடைத்தாம்
எற்கவே பிள்ளையென்ப ரிவ்வுலகோர்—தீர்க்கவதிற்
கீரியணிலுங் கிழத்தினும் நீ யொன்றோ
தேரியக்கும் பூங்கோதை யே.

23 உண்ணும் பழமா முரோமுண்டு கொட்டையின்மேல்
நண்ணிப் பனைமாவை நான்சொன்னே—னெண்ணியே
மற்றொன்று கூறுவையேல் மானார் சிரோன்மணியே
உற்றொன்று நிற்கினையுண் டோ.

---

கலித்துறை

24 கரும்புருவச்சிலைக் கட்கோடு செங்கட் கணைதொடுத்திற்
றரும்புரு வத்தத ரக்கோபமுற்றம் புலிமுகமாய்ச்
சுரும்புரு வத்தொடுக் குன்றக்குடியின் சுனைச்சுவர்மேல்
விரும்புரு வத்தொரு மான்சாய்ந்து நிற்பதென் வேடிக்கையே

25 இனிக்கும் பனிமலர்க் கொம்பேயம்போருகி என்ன எண்ணே—
னனைக்குங் குழன்முடிக் கின்றமின்னே நின்னை நேருறக்கண்

டுனக்கு மெனக்குஞ் சமசர்க்கமாகிய வூடலின்பை
நினைக்க நினைக்க மதகாமபோதை நிறைகின்றதே

26 படமெடுக் காதரவஞ்சாய் நிதம்பப் பசுங்கிளியே
விடமடுக் காவிழி மெல்லியலே வொளி மேவுதங்க
வடமடுக் காமுகை மேரும்பொருது வளையுமன்றோ
குடமிடுக் காவிடிற் றனேதுவளுங் கொடியிடையே

27 தனத்தாலொடிந்த நுசுப்பிளந் தூசாற் றழைத்ததென்றே
அனத்தாலுயர்த்து நடையெடுத் தாய்குளத் தாடையுரிந்
தினித்தாவி யாடுக முன்போனுடங்கி னிடதுபக்கந்
தனத்தான சொம்பே கொழுகொம்பதாமுனைத் தாங்குதற்கே

28 கைமேற் பலன்றருஞ் சிற்றின்பமான கரும்புநின்றன்
மெய்மேற் றதும்பலர்க் காற்றேபடினு மிகக்கலங்கு
மைமேற் பரியிள மின்னலாமுக்க மலைசுமக்க
மொய்மேற் பொலியநீ தாங்கியவாறென் மொழிவதுவே

29 தனத்துயர்வானகைத் தார்வேந்தர் மெச்சென் றமிழ்த்துரை
நினைத்து நினைத்தகம் புண்ணுருதம்பியி னீந்தன்னமே (யை
மனத்தி லுருக்கினு முன்னேயழைக்கும் வழக்கமெங்க
ளினத்தி லிதுவரை செய்யாதகாரிய மென்செய்வனே

30 பூப்பிட்ட நாண்முத லின்னுள்வரையோர் புருடர்முன்போய்த்
தாப்பிட்டறியாத் தமியாளைத் தென்றலுஞ் சந்திரனுங்
காப்பிட்ட மாலையுங் கட்டிய தூசுங் கழன்றுழன்று
கூப்பிட்ட சத்தமுங் கேளாதிராவென் கொழுநருக்கே

31 முன்னே யறிந்தெமைக் கல்யாணஞ் செய்தவர் மோகத்தினாற்
றன்னேர் விளங்கவிப் பாலனைப்பெற்றபின் றுசிகண்மேற்
பொன்னேர் கரும்புமென் மேல்வேம்புமாகப் புகட்டியதா
ரென்னே யமுந்திருக் குன்றக்குடிமே லிருப்பவனே

32 முன்னத்தை நன்குணர் வார்கண்முன்யாழ்பயின் முண்டகனை
மின்னத்தையென்று மகலாக் குன்றக்குடி மேற்றிசையின்

மன்னத்தைக்கொண்ட மயிலாடும் பாறையின் மையத்திலோ
ரன்னத்தைக் கண்டபி னென்னத்தைச் செய்குவாருடவனே

33 கந்தனை அந்திபகலாய் நினைந்து கசிந்துருகி
வந்தனைசெய்து மனமோய்ந் தவன்சொன்ன மந்திரத்தைச்
சிந்தனை கொண்டு சிவஞானசோதியைச் சேர்ந்திலங்கு
மெந்தனை வந்திங்கு என்செயலாமந்த எமனுமே.

---

விருத்தம்

34 திங்களே சகத்துளேவர் செய்தநிந்தனைக் கீண்டிந்த
மங்கைமீ திரக்கமின்றி வடமுகாக் கினிச்சுவாலை
வெங்களே வரமுங்காந்த விசிர்கிறு யெனத்தன்றோழி
செங்கையாற் றழுவிவீசத் தியங்கிப்பஞ்சணை சாய்ந்தாளே

35 காப்புது மலராலக்கக் கயறுளி கண்ணீர்முத்தை
வுரப்புட வையினுலொத்த வுயர்தனம் வாரைப்பீறி
இருப்பதாய்ச் சேடிகாட்ட வெழுந்தனள் குளிர்ந்தமெத்தை
பாப்பலர் நெருப்போவென்று பதறினு ளுதறினாளே

36 மன்றலே தெளித்தமாது வந்துசாள ரத்தினோரம்
நின்றலே மிகுந்தகூந்த னெகிழ்வவிழ்த் துதரத்தண்பூந்
தென்றலே நுளையச்சீறு சிங்கமுன் பசுநேரஞ்சிக்
குன்றலே சினுக்குவுள்ளார் கொன்மனங் குழையாரம்மா

37 என்னடி சேடிகாளெம் மிளமையி லுளமணந்து
முன்னரும் பிராயந்தன்னி லுடலையு மணந்துகொண்ட
மன்னவன் மதிபானுட்செல் மாப்பெருஞ் சிகரிக்குன்றைத்
தன்னகன் தயவேளற்குச் சகலசௌ பாக்யமாமே.

முற்றும் சுபம்.

ஓம் ஸ்ரீ குருவேநம:

தத் சத்.

சர்வஞ் சின்மயம்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 42 | 3 | 3 | 2 |
| 49 | 14 | இணங்கிணே | இணங்கினே |
| 53 | 5 | பொருட்டு | பொருட்டு |
| 53 | 6 | ஆவனம் | ஆவணம் |
| 54 | 16 | வுயற் | வுயர் |
| 55 | 15 | குதித்திடும் | குதிக்கும் |
| 65 | 16 | பாராட்டி | பாரெட்டி |
| 81 | 8 | தவசிலே | தவிசிலே |
| 81 | 8 | வீற்றிருக்கும் | வீற்றிருக்கு |
| 86 | 25 | பொலிலும் | பொழிலும் |
| 97 | 13 | தற்தெற்கு | தற்கெற்கு |
| 100 | 24 | பெருமாளே | பெருமானே |
| 101 | 17 | வாடைககாரி | வாடைக்காரி |
| 110 | 20 | சமர்வீரத | சமர்வீரா |
| 111 | 22 | விலையாடு | விளையாடு |
| 115 | 10 | குக்கோ | குங்கோ |
| 116 | 12 | தரயத்தி | தாயத்தி |
| 118 | 23 | காசக்கா | காசுக்கா |
| 121 | 2 | உகுகுழை | ஒள்குழை |
| 123 | 13 | வீரமகாளி | வீரமாகாளி |
| 123 | 14 | மதாளி | மாதாளி |
| 124 | 12 | களகி | கழகி |
| 125 | 12 | மூத்தி | முத்தி |
| 127 | 26 | பிறந்தது | பறந்தது |
| 128 | 12 | இனைத்தது | இளைத்தது |
| 128 | 25 | லாலென | லானென |
| 128 | 28 | விலங்கு | விளங்கு |
| 129 | 12 | குப்பி | கும்மி |
| 129 | 13 | மகாளி | மாகாளி |
| 130 | 21 | யாகெககலை | யாமெலை |
| 133 | 8 | முன்ன ழமும் | முன்னழகும் |
| 142 | 14 | வித்து | வித்துச் |
| 142 | 15 | கச்சைபிறிர் | கச்சைப்பிறிர் |
| 141 | 20 | திகழ்மரனர் | திகழ்மானர் |
| 148 | 14 | நீலயே | நீலியே |
| 173 | 36 | புட்மமும் | புட்பமும் |
| 176 | 8 | கொடண்டு | கொண்டு |
| 178 | 17 | டரள்பல | டாள்பல |
| 181 | 9 | கலைஞான | கலைஞான |
| 181 | 16 | தெத்சிஞ | தெச்சிஞ |
| 181 | 17 | வந்துலாவி | வந்துலாவு |
| 182 | 16 | தனனன | தனன |
| 182 | 18 | வுருத்தர | வுருத்ர |
| 183 | 11 | நரய் | நாய் |
| 183 | 13 | மாபாதவி | மாபாவி |
| 183 | ,, | அவியாதி | அவியாத |
| 184 | 1 | குருத்தர | குருத்யா |
| 184 | 9 | மூத்தனே | முத்தனே |
| 134 | 18 | ஞானவம்பு | ஞானவன்பு |
| 185 | 3 | கெரட்ப | கொட்ப |
| 185 | 4 | குணங்கோள | குணங்கொள |
| 185 | 13 | ணபசாசு | ணபசாசு |
| 186 | 3 | பராபுர | பராபர |
| 186 | 8 | வாமெங்கன் | வாமெங்கள் |
| 187 | 14 | மிடையாலும் | மிடையாலும் |
| 187 | 15 | மூத்திஞ | முத்திஞ |
| 187 | 21 | மாலயங்கண் | மன்பதிகண் |
| 201 | 18 | கேளாதேது | கேளாததேது |
| 196 | 10 | அனுத்திய | அநித்திய |
| 215 | 2 | தரங்கத்து | தரங்கத்தும் |
| 217 | 13 | வேடி | வேண்டி |
| 220 | 2 | வாத்தை | வார்த்தை |
| 221 | 2 | கதுகரம் | மதுகரம் |
| 223 | 11 | வருவது | வருதவது |
| 225 | 9 | யறிந்தொர் | யறிந்தோர் |
| 226 | 2 | பேத | பேதங் |
| 232 | 3 | விருகர | விருகா |
| 237 | 1 | மாலவண்ய | மாலாவண்ய |
| 225 | 17 | கைத்தொழு | கைதொழு |

# விளம்பரம்.

---

இந்நூலாசிரியராலியற்றப்பெற்றுள்ள நூல்கள்.

## 1. முத்துச்சாமிய மென்னும்

# அநுபவ வைத்திய பாநு

### முதற் பாகம்.

இது பனையூர் மகானுபாவன் ஸ்ரீமத், தச்சிணாமூர்த்தி சுவ களால் எமது பிதாவிற்கு உபதேசிக்கப்பெற்று அவர்களால் ய உபதேசக் கிரமமாகப்பெற்ற, அநுபவமுறைகளான சிந்தூரம், பம், இலேகியம், தைலவகைகளும் பிறவும் அநேகம் கனிமூலிகை பிரயோகங்களும் யாவரும் தாம் தாமே செய்து கொள்ளு சர்வஜனோபகாரமாக எளிதில் விளங்கும் செய்யுள்வடிவாக தப்பெற்றது.

## 2. ஈசாதிகள் பூஜாம்புலி.

இதுவும் ஷை மகானால் உபதேசிக்கப்பெற்ற முறைகளா இதில் தர்மதேவதைகளின் யந்திர மந்திரங்களும், அவற்றவற்றி குரிய இடம், காலம், ஆதனம், புட்பம், நைவேத்தியம், திய முதலிய திட்டங்களும் செவ்வனே விளங்கும் செய்யுள்வடிவா யாத்தது.

## 3. சாதக சமுத்திரம்.

பல அரிய பெரிய சோதிட சாஸ்திரங்களை ஆராய்ச்சி து அதினின்றும் அனுபவத்திலறிந்த சில முக்கியமான பாகங்களை யும், கணிதாஷ்டவர்க்க பரல் விவரங்களையும் ஏனையோருங் கற்று கொள்ளும் பொருட்டு இனிய செய்யுள் வடிவாயியற்றப்பெற்றது

## 4. நாதாக்கள் சரித மஞ்சரி.

இதில் மகத்துக்களாகிய அறுபத்துமூ களின் ஜனனபூமி, திருநாமம், அவர்கள் செய்தவை பாலருந் தெரிந்துகொள்ளும் பலவித இன்னிசை வரையப்பெற்றது. இவை ஒன்றன்பின் ஒன்றாய் சீ

குன்றக்குடி வை

☞ **M. கணபதியா**